# தொட்டிக்கலை

ஸ்ரீசுப்பிரமணிய முனிவர் இயற்றிய

# கலைசைக்கோவை



மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர்
நூல் நிலையம்
பெசன்ட் நகர், சென்னை - 90

உ

கடவுள் துணை

தொட்டிக்கலை

ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர் இயற்றிய

# கலைசைக்கோவை.

பதிப்பாசிரியர்

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி
டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

பெசன்ட் நகர், சென்னை – 90

1995

# இப்புத்தகத்திலடங்கியவை.

1. பதிப்பாளர் குறிப்பு

2. முகவுரை 1 - 5

3. ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர் வரலாறு 6 - 12

(பிறப்புமுதலியன – வித்தியாகுரு – ஞானகுரு – கல்வி வளர்ச்சி – அருங்குணங்கள் – சிறப்புப்பெயர் – இவர் காலத்திருந்த தமிழ்வித்துவான்கள் – ஆதரித்த செல்வர்கள்–பழகிய இடங்கள் – தனிப்பாடல்கள் – இயற்றிய நூல்கள்.)

4. நூல் ஆராய்ச்சி 13 - 24

(1. தலச்செய்திகள். 2. பிறதலச்செய்திகள். 3. நாயன்மார்களும் திருவாதவூரடிகளும். 4. சைவ சித்தாந்த நூற்கருத்துக்கள். 5. நீதிகள். 6. தமிழ். 7. திருக்குறள். 8. அகப்பொருட்கருத்துக்கள். 9. பழைய உவமைகள். 10. சிலவகை வழக்குகள். 11. இசைநூற் கருத்துக்கள். 12. குறிப்பாற்பொருள்தருவன. 13. யமகம், திரிபு, எதுகைநயம். 14. மடக்கு. 15. சிலேடை. 16. தொனி. 17. வடசொற்களும் தொடர்களும். 18. அரும்பதங்கள். 19. முருகக்கடவுள்பாலன்பு. 20. செய்ந்நன்றியறிவு.)

5. கலைசைக்கோவை மூலமும் குறிப்புரையும் 25 - 152

| | | |
|---|---|---|
| | காப்பு ... ... ... | 25 |
| 1 | கைக்கிளை ... ... ... | 25 |
| 2 | இயற்கைப்புணர்ச்சி ... ... | 26 |
| 3 | வன்புறை ... ... | 32 |
| 4 | தெளிவு ... ... | 34 |
| 5 | பிரிவுழிமகிழ்ச்சி ... ... | 34 |
| 6 | பிரிவுழிக்கலங்கல் ... ... | 35 |
| 7 | இடந்தலைப்பாடு ... ... | 37 |
| 8 | பாங்கற்கூட்டம் ... ... | 38 |
| 9 | பாங்கிமதியுடன்பாடு ... ... | 45 |
| 10 | பாங்கியிற்கூட்டம் ... ... | 52 |

| | | |
|---|---|---|
| 11 | பகற்குறி ... | 68 |
| 12 | பகற்குறியிடையீடு | 72 |
| 13 | இரவுக்குறி... | 73 |
| 14 | இரவுக்குறியிடையீடு | 80 |
| 15 | வரைதல்வேட்கை | 86 |
| 16 | வரைவுகடாதல் | 91 |
| 17 | ஒருவழித்தணத்தல் | 96 |
| 18 | வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல் ... | 99 |
| 19 | வரைவுமலிவு | 106 |
| 20 | அறத்தொடுநிற்றல் | 108 |
| 21 | உடன்போக்கு | 113 |
| 22 | கற்பொடுபுணர்ந்தகவ்வை | 117 |
| 23 | மீட்சி | 124 |
| 24 | தன்மனைவரைதல் | 126 |
| 25 | உடன்போக்கிடையீடு | 127 |
| 26 | வரைதல் ... | 129 |
| 27 | இல்வாழ்க்கை | 129 |
| 28 | பரத்தையிற்பிரிவு | 132 |
| 29 | கல்வியிற்பிரிவு ... | 144 |
| 30 | காவற்பிரிவு ... | 146 |
| 31 | தூதிற்பிரிவு ... | 147 |
| 32 | துணை வயிற்பிரிவு | 149 |
| 33 | பொருள் வயிற்பிரிவு | 150 |
| 6. | செய்யுண் முதற்குறிப்பகாரதி | 153 |

# பதிப்பாளர் குறிப்பு.

வரைமகள்வா மத்தான் மணித்திரளை வாரித்
திரையெறியும் ஒற்றியூர்ச் செல்வன் – பிரசமலர்க்
காமற் பொடித்த கனல்விழியான் பூங்கொன்றைத்
தாமன்பொற் றாளே சரண்.

(திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி)

ஐயரவர்களுக்குத் தமிழிலுள்ள எல்லா நூல்களிலும் அதிக ஈடுபாடு இருந்தது. சங்க நூல்கள் முதல் நாட்டுப்பாடல் வரை எதுவானாலும் அவரது கவனத்தை ஈர்த்தது. பல பிரபந்தங்கள் வெளிவராமல் இருந்தன. அவற்றை மாதம் ஒன்றாக வெளியிட வேண்டும் என்று எண்ணி வெளியிடலானார்கள். சீகாழிக் கோவை, திருவாவடுதுறைக்கோவை, பழமலைக்கோவை, சிராமலைக்கோவை, கலைசைக்கோவை, திருவாரூர்க்கோவை முதலிய நூல்களைப் பதிப்பித்தார்கள். சங்க நூல்களை ஆராயும்போது இடையிடையே இந்நூலையும் ஆராய்ந்து 1935-ஆம் ஆண்டு முதன்முறையாகத் தமிழ் உலகிற்கு அளித்தார்கள்.

கலைசை : இத்தலம் கலைசை, கலைசாபுரி, கோவிந்தபுரம் என்ற பெயர்களால் வழங்கப் பெறுகின்றது.

இங்கு எழுந்தருளியுள்ள விநாயகர் - செங்கழுநீர்விநாயகர். சுவாமி-சிதம்பரேசர். அம்பிகை : சிவகாமி அம்மை. இத்தலத்தைப் பற்றி ஐயரவர்கள் எழுதியுள்ள முகவுரையால் நன்கு அறியலாம்

ஐயரவர்கள் பதிப்பித்துள்ள நூல்களெல்லாம் பதிப்பிக்க வேண்டும் என்ற திட்டத்தின்கீழ் இந்நூலினைத் தமிழுலகிற்கு நூல் நிலையம் அளிக்கின்றது.

இந்நூல் தமிழ்வளர்ச்சித்துறை அரிய நூல்களை வெளியிட நிதியுதவி வழங்கும் திட்டத்தின் கீழ் நூல்நிலைய முதற்பதிப்பாக வெளிவருகின்றது.

இந்நூலினை அச்சிட ஆக்கமும் ஊக்கமும் தந்த தமிழ் வளர்ச்சித்துறையினருக்கு நூல் நிலையத்தின் சார்பாக நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலைக் குறுகிய கால அளவில் நன்கு அச்சிட்டுக் கொடுத்த சூர்யா அச்சக உரிமையாளர் என். சங்கரன் அவர்களுக்கு நன்றி.

வித்துவான் கு. பாலசாரநாதன்
ஆராய்ச்சித்துறை
டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்.

பெசன்ட் நகர்,
சென்னை—90
15-3-95.

உ

சிவமயம்

# முகவுரை

## தேவாரம்

## திருநாவுக்கரசு நாயனார்

திருச்சிற்றம்பலம்

சிவனெனு நாமந் தனக்கே யுடையசெம் மேனியெம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாகி லவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே.

திருச்சிற்றம்பலம்

கோவை யென்பது தமிழ்ப்பிரபந்தங்களுள் அகப்பொருளுக்கு இலக்கியமாக அமைந்தது; அகப்பொருட்டுறைகளை ஒரு வரலாற்றுமுறையில் தொடர்புபெறக் கோத்து அமைத்து இயற்றப்பெற்ற நானூற்றின்மிக்க கலித்துறைகளையுடையது. பொதுவாகக் கோவையெனக் கூறப்பெறினும் அகப்பொருளமைதி உடைமையாலும், அப்பொருள் நிகழ்ச்சிக்குரிய ஐந்திணை நெறியமைதலாலும், நானூறு செய்யுட்களுக்குக் குறையாமல் இருத்தலாலும் இவ்வகைப் பிரபந்தம் முறையே * அகப்பொருட் கோவை, † ஐந்திணைக்கோவை, ‡ நானூற்றுக்கோவையென வழங்கப்பெறும். மொழிக்கு முதலாகும் உயிரெழுத்துக்களும் உயிர்மெய்யெழுத்துக்களும் தனித்தனியே முதலில் அமைய இயற்றப்படும் **வருக்கக்கோவை** யென்பதும், ஏதேனும் ஒரு துறையில் நூறு கலித்துறைகளாலேனும் அவற்றின் மிக்க கலித்துறைகளாலேனும் இயற்றப்படும் **ஒருதுறைக்கோவை**

---

* சிதம்பரப்பாட்டியல், 30.

† ''குலோத்துங்கசோழனைச் சொல்லிய வைந்திணைக் கோவை பாட'' குலோத்துங்கசோழன் கோவை.

‡ ''மஞ்சார் நானூற்றுக்கோவை'' பிரபந்தத்திரட்டு.

யென்பதும் கோவை விகற்பங்களாம். மும்மணிக்கோவை யென்பது யாப்புப்பற்றிக் கோக்கப்பெற்றதனாற் பெயர் பெற்றது போலப் பொருள்பற்றிக் கோக்கப்பெறுதலின் இப்பிரபந்தம் கோவையென்னும் பெயர்பெற்றது. அடைமொழியின்றிக் கோவையென்னும் பெயரால் இது வழங்கப்பெறுதல் இதன் சிறப்பைப் புலப்படுத்தும். இது பொருட்டொடர்நிலைச் செய்யுளின் பாற்படும்; சிறுகாப்பியவகையுள் இதுவும் ஒன்றாகும்.

எல்லாவகையாலும் சிறந்த தலைவன் ஒருவன் அங்ஙனமே சிறந்த தலைவி ஒருத்தியை ஊழின்வலியாற் கண்டு அன்பு பூண்டு இன்புற்று மணந்து இல்லறம் நடத்தும் * வாழ்க்கையை முறையே கூறும் அகப்பொருள் நிகழ்ச்சித்துறைகள் பலவற்றையும், அத்துறைகளைத் தம்பாற்கொண்ட கிளவிகளையும், அவற்றை உள்ளடக்கிய களவு கற்பு என்னும் கைகோள்களையும் சிற்றுறுப்புக்களாகவும் பேருறுப்புக்களாகவும் கொண்டது இவ்வகைப் பிரபந்தம். இதிற் கூறப்படும் நிகழ்ச்சிமுறை சிலகோவைகளில் விரிந்தும் சிலவற்றிற் குறைந்தும் சிலவற்றில் வேறுபட்டும் காணப்படும். ஒரு துறைக்கு ஒன்றுக்கு மேற்பட்ட செய்யுட்கள் இருத்தலும் உண்டு. திருவாதவூரடிகள் இயற்றிய திருக்கோவையாரும், அம்பிகாபதிகோவையும், மதுரைக்கோவையும், திருப்பதிக்கோவையும், திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவான் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய சீகாழிக்கோவையும் ஏனைய கோவைகளினின்றும் சில சில வேறுபாடுகளை உடையன. இறையனாரகப் பொருளுரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ள பாண்டிக் கோவை மிக விரிந்த அமைப்பையுடையதென்று தோற்றுகின்றது. மற்றக்கோவைகளெல்லாம் பெரும்பாலும் தஞ்சைவாணன் கோவையை ஒத்து அமைந்துள்ளன.

பழைய நூலுரைகளிலிருந்து அறியப்படும் குமரசேனாசிரியர் கோவை, தமிழ் முத்தரையர்கோவை, காங்கேயன் நாலாயிரக்கோவை என்பனவும் இவ்வகைப் பிரபந்தங்களென்றே கருதப்படுகின்றன. அவற்றுள் காங்கேயன் நாலாயிரக்கோவை ஒவ்வொரு துறைக்கும் பப்பத்துச் செய்யுட்களாக அமைந்த தென்று ஊகிக்கப்படுகின்றது

---

* இதன் விரிவை, சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்களில் ஒன்றாகிய கோடீச்சுரக்கோவைக்கு எழுதப்பட்டுள்ள பொருட்டொடர்பிற் காணலாம்.

கோவைகளில் பாட்டுடைத்தலைவன், கிளவித்தலைவனென்னும் இருவர் கூறப்படுதல் மரபு. பாட்டுடைத்தலைவனின்றிப் பாடப்பட்டது அம்பிகாபதிகோவை ஒன்றே.

கோவைகளில் தமிழுக்குரிய ஐந்திலக்கணங்களும் நன்கு அமைவதற்குரிய வாய்ப்பு இருத்தலின் பெருங்கவிஞர்கள் இவற்றை இயற்றும் வாயிலாகத் தம் ஆற்றலை வெளிப்படுத்தினர். "யாவையும் பாடிக் கோவை பாடு" என்னும் பழமொழி இப்பிரபந்தம் நிறைந்த புலமையுடையாராலே பாடத்தக்கதென்னும் உண்மையை வெளிப்படுத்துகின்றது. இக்கோவை பெரும்பாலும் அரசர்மேற் பாடப்படவேண்டுமென்றும் திணைமுதலிய பன்னிரண்டு உறுப்பையும் பெற்றிருக்கவேண்டுமென்றும் இதற்குரிய பரிசு இரண்டாயிரம் பொன்னென்றும் பிரபந்தத்திரட்டென்னும் இலக்கண நூலொன்று கூறும்.

கலைசைக்கோவை யென்னும் இந்நூல் தொண்டைநாட்டில் உள்ள * தொட்டிக்கலை யென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ சிதம்பரேசரைப் பாட்டுடைத்தலைவராக வைத்து, திருவாவடுதுறையாதீனத்து வித்துவான் ஸ்ரீ சுப்பிரமணியமுனிவரால் இயற்றப்பெற்றது. கலைசை யென்பது தொட்டிக்கலை யென்பதன் மரூஉவாகும்.

இத்தலம் கலைசை, கலைசாபுரி, கோவிருந்தபுரமென்னும் பெயர்களால் வழங்கப்பெறும். இங்கே பண்டைக்காலத்தில் பசுக்கொட்டில்கள் மிகுதியாக இருந்தனவென்றும் அதனால் தொட்டிக் கலையென்னும் பெயர் உண்டாயிற்றென்றும் கூறுவர்; தொட்டி—பசுத்தொழுவிலுள்ள கழுநீர்த்தொட்டி. இங்கே இருந்த பழைய கோயிலானது இந்நூலிற் கூறப்படும் கேசவமுதலியார் வேதாசல முதலியாரென்பவர்களுடைய முன்னோர்களால் மிகப் பெரிதாக அமைத்து நித்திய நைமித்திகங்கள் சிறப்புற நடத்தப்பெற்று வரலாயின. இக்காலத்தும் அவர்களுடைய பரம்பரையினரது மேற்பார்வையில் இக்கோயில் இருந்துவருகின்றது.

இங்கே எழுந்தருளியுள்ள விநாயகர்திருநாமம் செங்கழுநீர் விநாயகரென்பது. சிவபிரான் திருநாமம் சிதம்பரேசரென்பது. அம்பிகையின் திருநாமம் சிவகாமியம்மை யென்பது. இங்கே

* சென்னபட்டணத்துக்குச் சமீபமாயுள்ள ஆவடி ஸ்டேஷனில் இறங்கி இவ்வூர்க்குச் செல்லவேண்டும்.

தியாகேசப்பெருமான் ஸந்நிதியும் உண்டு. இத்தலத்தில் பிரமதேவர் சிவபெருமானை வழிபட்டு அமிர்தகலசத்தைப் பெற்றனர். அதனால் அப்பெருமானுக்குக் கலசத்தியாகரென்னும் திருநாமம் வழங்கலாயிற்று. சிவபெருமான் ஒருகால் இங்கே நடனஞ்செய்தருளியதாக ஓர் ஐதிஹ்யமுண்டு. சிவகங்கை யென்னும் தீர்த்தமொன்றும் திருவொற்றியூரிலுள்ளதைப்போல நந்தியோடை யென்னும் நீர்நிலையொன்றும் இங்கே உள்ளன. திருவொற்றியூரில் தியாகேசப்பெருமானுக்கு நடந்துவரும் விசேடங்களைப்போன்ற சிறப்புக்கள் இங்குள்ள மூர்த்திக்கும் நடைபெற்றன; வஸந்தோத்ஸவம் சிறப்பாக நடைபெற்று வந்தது. இந்த ஸ்தல சம்பந்தமான செய்திகள் கர்ண பரம்பரையில் வந்தனவாகத் தெரிகின்றனவேயன்றி வேறுவகை யாக அறியப்படவில்லை.

இந்நூலாசிரியராகிய ஸ்ரீ சுப்பிரமணியமுனிவரால் இத்தல சம்பந்தமாக இயற்றப்பெற்ற பிரபந்தங்கள் பல உண்டு. அவற்றையன்றி ஸ்ரீ சிவஞானமுனிவரால் இத்தலத்து விநாயகர் மீது இயற்றப்பெற்றதாகிய செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத் தமிழென்னும் பிரபந்தம் ஒன்றும், சிவபிரான்மீது இயற்றப் பெற்றதாகிய சிதம்பரேசர் பதிற்றுப்பத்தந்தாதி யென்ப தொன்றும், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றிய சிதம்பரேசர்மாலையென்பதொன்றும் தமிழ்நயந் தெரிந்து இன்புறுவோர்களுக்கு விருந்தாக விளங்குகின்றன.

கலைசைக்கோவையாகிய இது காப்புச்செய்யுளுள்பட 458 செய்யுட்கள் உடையது.

சற்றேறக்குறைய ஐம்பது வருஷங்களுக்கு முன்பு இந் நூற்பிரதியொன்று திருவாவடுதுறையாதீனத்துப் புத்தக சாலையிலிருந்து எனக்குக் கிடைத்தது. உடனே இதைப் படித்து இன்புற்றுப் பிரதி செய்து வைத்துக்கொண்டேன் பிறகு சோடசாவதானம் சுப்பராய செட்டியாரவர்களிடமிருந்த பிரதியோடும், திரிசிரபுரம் சி. தியாகராசசெட்டியாரவர்களிட மிருந்த பிரதியோடும் ஒப்பிட்டேன். பிற்காலத்தில் வேறு பிரதிகளின் உதவியும் கிடைத்தது.

என்னுடைய நண்பரும் வித்தியாவிநோதரும் தொட்டிக் கலைக் கேசவமுதலியாருடைய பரம்பரையினருக்கு உறவினரு மான. ராய்பகதூர் பூண்டி அரங்கநாத முதலியாரவர்களிடம் ஒருமுறை இந்நூலைப்பற்றிக் கூறிச் சில செய்யுட்களையும்

சொல்லிக்காட்டினேன். அவர்கள் இதனைப் பதிப்பித்து வெளியிடவேண்டுமென்று விரும்பினார்கள். அவர்களுக்கு அவ் விருப்பம் இருந்தமை 1888-ஆம் ௵ ஜனவரி ௴ 26-ஆம் ௳ அவர்கள், கும்பகோணம் காலேஜ் புரொபஸராக இருந்த ஸ்ரீ சாது சேஷையா அவர்களுக்கு ஆங்கிலத்தில் எழுதியுள்ள ஒரு கடிதப்பகுதியாலும் வெளியாகின்றது; அதன் கருத்து வருமாறு :

* '...பண்டிதர் சாமிநாதையர் தம்மிடம் கலைசைக்கோவையின் பிரதி ஒன்று இருந்ததாகக் கூறினார். அந்நூல் அச்சில் வரும்படி செய்வதற்கும் அதை வெளியிடுதற்குரிய செலவை ஏற்றுக் கொள்ளுதற்கும் ஸித்தனாக இருக்கிறேனென்பதைத் தயைசெய்து அவருக்குச் சொல்லவேண்டும்.'

அக்காலத்தில் இந்நூலை வெளிப்படுத்தக்கூடவில்லை. இறைவன் திருவருளால் இப்பொழுதேனும் நிறைவேறியது குறித்து மகிழ்கின்றேன்.

இதனைச் செந்தமிழ்ப் பத்திரிகையின் வாயிலாக வெளிவரச் செய்த அப்பத்திரிகையின் ஆசிரியர்பாலும், இதனை ஆராயும் போதும் பதிப்பிக்கும்போதும் உடனிருந்து உதவிபுரிந்த சிரஞ்சீவி வித்வான் கி. வா. ஜகந்நாதையர் முதலிய அன்பர்கள்பாலும் நன்றியறிவுடையேன்.

'தியாகராஜவிலாஸம்'

திருவேட்டீசுவரம்பேட்டை இங்ஙனம்,
12—5—35 வே. சாமிநாதையர்.

---

* '......Pandit Swaminatha Aiyer mentioned to me that he had a manuscript copy of கலைசைக்கோவை. Please tell him that I am ready to see it through the press and bear the cost of publishing it......'

# ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர் வரலாறு

## பிறப்புமுதலியன

இந்நூலாசிரியராகிய சுப்பிரமணியமுனிவர் சிதம்பரத்தைச் சார்ந்த காட்டுமன்னார்கோயிலில், ஸ்ரீ வீரநாராயணப்பெருமாள் கோயில் மேலைவீதியின் கீழ்சிறகிலுள்ளதொரு வீட்டிற் கார்காத்த வேளாளர்குலத்திற் பூநொடையார் கோத்திரத்திற் பிறந்தவர். சித்தாந்தசைவர்; துறவறம்பூண்டொழுகியவர்; முருகக்கடவுளை வழிபட்டு மந்திரஸித்திபெற்றவர். இவர் பிறந்த வருடமும் இவருடைய இல்லற வரலாறுகளும் இப்பொழுது தெரியவில்லை. ஆனாலும் விசுவாவசு ஞு சித்திரை மீ (சாலிவாகனசகாப்தம் 1708; கொல்லமாண்டு 960—961; கி.பி. 1786) பரிபூரணமான ஸ்ரீ சிவஞான முனிவருடைய பிரிவை யாற்றாமல், ''நினைத்தாற் சகிக்கப் போமோ'' என்னும் கீர்த்தனையை இயற்றியிருப்பதோடு, ஆவினன்குடிப்பதிற்றுப்பத்தந்தாதியென்னும் பிரபந்தத்தை அக்காலத்துக்குப்பின் கீலக ஞு தை மாதத்தில் (கி. பி. 1799) அரங்கேற்றியதாகத் தெரிகின்றமையால் இவர் இற்றைக்கு 150 வருடங்களுக்குமுன் இருந்தவரென்பது மட்டும் ஒருவாறு தெரிகின்றது.

## வித்தியாகுரு

இவர் சிவஞானபோதப் பேருரையின் ஆசிரியராகிய ஸ்ரீ சிவஞானமுனிவரிடம் தமிழ்மொழியிலுள்ள இலக்கண இலக்கியங்கள் பலவற்றையும் உரைநடைகளையும் சைவசித்தாந்த நூல்களையும் முறையே கற்றுப் பயின்று அவருடைய மாணாக்கர்களுள் ஒருவராகிச் செய்யுள் செய்தலிலும் நல்லாற்றல் வாய்ந்தவராயினர். அவரிடம் இவருக்கிருந்த மெய்யன்பிற்கு எல்லையில்லை; அவர்மீது இவர் இயற்றிய ''கருணைபொழி திருமுகத்தில்'', ''திண்ண வின்பச் சேவடியும்'', ''ஓதரிய வாய்மை'' என்னும் செய்யுட்களும், அவர் பரிபூரணமானது தெரிந்து ஒருவாற்றாலும் பிரிவாற்றாமல் வருந்தி இவரியற்றிய ''நினைத்தாற் சகிக்கப்போமோ வென்

சுவாமியை'' என்னும் கீர்த்தனையும் இதனைப் புலப்படுத்தும். பின்னும் அவருடைய பிரிவாற்றாத இவர், தொட்டிக்கலைச் சிதம்பரேசர் திருக்கோயிற் சந்நிதிமண்டபத்தில் அவருடைய திருவுருவத்தை அமைப்பித்து அதனை நாள்தோறும் போற்றி வழிபட்டு வந்தனரென்றுஞ் சொல்லுவர்; இது மேற் குறிப்பித்த செய்யுட்களுள், ''ஓதரியவாய்மை'' என்பதிலுள்ள,

''அழகுபொலி கலைசைச் சிதம்பரே சுரரடிக்
கதிமதுர கவிதைமாரி
மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
மன்னிவளர் சந்நிதியிலோர்
மணிவிளக் கென்னவளர் சிவஞான மாதவன்
மலர்ப்பதம் வணங்குவாமே''

என்பதனால் தெரிகின்றது.

## ஞானகுரு

திருவாவடுதுறையாதீனத்தில் 12-ஆம் பட்டத்தில் இருந்த திருச்சிற்றம்பலதேசிகர் காலத்தில் சின்னப்பட்டத்தில் இருந்த அம்பலவாணதேசிகரிடத்து இவர் சைவசந்நியாசமும் சிவதீட்சையும் ஞானோபதேசமும் பெற்றவர். இவர் திருச்சிற்றம்பல தேசிகர்மீது சிந்து முதலியன செய்திருத்தலும், இவரியற்றிய நூல்கள் வரைந்துள்ள எட்டுப்புஸ்தகங்கள் சிலவற்றில், திருக்கையாயபரம்பரைத் திருவாவடுதுறை நமச்சிவாயகுரு மரபில் அம்பலவாண தேசிகருடைய * ஞானபுத்திரனான சுப்பிரமணிய தம்பிரான் செய்தது இந்நூல்' என்று எழுதப்பட்டிருத்தலும் இதற்குத் தக்கசான்றாகும். திருச்சிற்றம்பல தேசிகர் எப்பொழுதும் சிவாகம ஆராய்ச்சியையே செய்துவந்தாரென்றும், அதனால் அவர் செய்தற்குரிய காரியங்களிற் பெரும்பாலனவற்றை அவர் கட்டளையால் அம்பலவாணதேசிகரே செய்துவந்தாரென்றும் கேள்வி உண்டு.

## கல்விவளர்ச்சி

திருவாடுதுறையாதீனத்தில் தம்மைப் போன்றவர்களும் தமக்கு மேலானவர்களுமாக இருந்த பல கல்வியாளர்களோடு இடைவிடாது பழகுதலும் மாணாக்கர்களுக்குப் பாடஞ்

* ஞானாசிரியரை ஞானபிதாவென்றலும் ஞானோபதேசம் பெற்றுக்கொண்டவரை ஞானபுத்திரரென்றலும் மரபு.

சொல்லுதலும் பிரஸங்கம் செய்தலும் ஆகிய இவைகள் இவருக்கு வாய்த்திருந்தனவாதலால் இவருடைய புலமை மேன்மேலும் மாட்சிமையுற்று விளங்கிற்று.

## குணவிசேடங்கள்

வித்தியாகுருவிடத்தும் ஞானாசிரியரிடத்தும் சிறந்த மெய்யன்புடையவர் இவர். சிவபக்தி, அடியார்பக்தி, நன்றிமறவாமை, ஸ்தலயாத்திரை செய்தலில் விருப்பம், தாம் கற்ற நூற்பொருள்களை உள்ளத்தில் நன்குபதித்துச் சமயம் வந்தபோது அழகுபெற அமைத்துப்பாடும் திறமை, எளிய நடையிலும் வேறு பலவகையிலும் விசித்திரமாகச் செய்யுளி யற்றும் ஆற்றல், இசைப்பயிற்சி முதலியன இவர்பால் அமைந் திருந்தன. இவர் இயற்றிய செய்யுட்களால் இவை விளங்கும்.

## சிறப்புப்பெயர்

கேட்டவர் வியக்கும்வண்ணம் இனிய செய்யுள் செய்தலில் வல்லுநராயிருந்தமையின் இவர் மதுரகவியென்று திருவாவடு துறையாதீனத்திற் சிறப்புப்பெயர்பெற்று விளங்கினார். தொட்டிக் கலையிற் பெரும்பாலும் இருந்தமையின் தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவரெனவும் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய தம்பிரானெனவும் இவர்பெயர் வழங்கும்.

## இவர்காலத்திலிருந்த தமிழ்வித்துவான்கள்

சிவஞானமுனிவருடைய மாணாக்கர் பன்னிருவருள் இவர் ஒருவரென்று தெரிதலால் அம்முனிவரும் அவருடைய மற்ற மாணாக்கர்களாகிய **இலக்கணம்சிதம்பரநாத முனிவர்**, **கச்சியப்ப முனிவர்**, இராமநாதபுரம் **சோமசுந்தரம்பிள்ளை** காஞ்சீபுரம் **சரவணபத்தர்** முதலியவர்களும், சென்னையில் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் விநாயக புராணம் இயற்றுகையில் இருந்தவரென்று சொல்லப்படும் சீகாழி **வடுகநாததேசிகரும்** இவர்காலத்திலிருந்த தமிழ்வித்துவான்களாவர்.

## ஆதரித்த செல்வர்கள்

இந்நூலில் கூறப்பட்டுள்ள தொட்டிக்கலைக் கேசவமுதலியா ரென்பவரும் வேதாசலமுதயாரென்பவரும் (71,293) இவரைப் பாராட்டி ஆதரித்தவர்கள். அவர்கள் துளுவவேளாளர்களுள் பூவிருந்தவல்லி வகுப்பினர். கேசவமுதலியார் மிக்க செல்வவான். கிழக்கிந்தியக்கம்பெனியில் ஸம்பிரதியாக இருந்தவர். தொழுவூர், ஆற்பாக்கம் முதலிய பல கிராமங்கள் அவருடையனவாக

இருந்தன. அவர் ஆட்சிக்குட்பட்டவை 'கேசவமுதலியார் ஸம்ஸ்தானம்' என வழங்கப்பட்டன. கேசவமுதலியாருடைய குமாரராகிய தெய்வசிகாமணிமுதலியா ரென்பவரும் கிழக்கிந்தியக்கம்பெனியில் பெரிய உத்தியோகத்தில் அமர்ந்திருந்தார். அவருடைய மூத்தகுமாரரே வேதாசல முதலியாராவர். அவரும் ஷைகம்பெனியில் உத்தியோகம் வகித்து வந்தார்.

வேதாசலமுதலியாருக்குச் சுப்பராயமுதலியார், கிருஷ்ணசாமி முதலியாரென்னும் இரண்டு தம்பியரும், பாலசுப்பராய முதலியார், தெய்வசிகாமணி முதலியாரென்னும் இரண்டு புதல்வர்களும் இருந்தனர். அவர் சித்திரம் எழுதுவதில் பேராற்றல் உடையவர். அவரால் எழுதப்பெற்ற கேசவ முதலியார் முதலியவர்களுடைய வண்ணப்படங்கள் சென்னை ஐயாப்பிள்ளை வீதியில் அவர் பரம்பரையினர் வசிக்கும் வீட்டில் இன்றும் இருந்து விளங்குகின்றன.

தொட்டிக்கலைக் கேசவமுதலியார் பரம்பரையினர் இப்பொழுது சென்னை, கோவிந்தப்ப நாயக்கன் தெருவில் திருவாவடுதுறை யாதீனத்துக்குரியதாக உள்ள மடத்தை அவ்வாதீனத்துக்கு வழங்கினர். அவ்விடம் முன்பு யானைக்கொட்டகை என்னும் பெயருடையதாக இருந்ததாம். கேசவமுதலியாரும் வேதாசல முதலியாரும் சுப்பிரமணிய முனிவர்பாற் பக்திபூண்டு தொட்டிக்கலையில் ஸ்ரீசிதம்பரேசர் சந்நிதியினருகே மடமொன்று கட்டுவித்து அதில் இவரைத் தங்கும்படி செய்து ஆசிரியராகக் கொண்டு குறிப்பறிந்தொழுகி மிக்க பணிவுடன் ஆதரித்து வந்தார்கள். அம் மடம் இப்பொழுதும் சாமியார் மடமென்று வழங்கப்படுகின்றது.

கேசவமுதலியாரும் அவருடைய பரம்பரையினரும் பல வித்துவான்களை ஆதரித்து வந்திருக்கின்றனர். சிவஞானமுனிவர், கச்சியப்பமுனிவர், தரங்காபுரம் ஷண்முககவிராயர், குமாரசுவாமிகவிராயர், இராமாநுஜகவிராயர் முதலியவர்கள் அவர்களால் ஆதரிக்கப் பெற்றவர்கள்.

சுப்பிரமணிய முனிவராற் பாராட்டப்பெற்ற வேதாசல முதலியாரின் தம்பியாகிய * கிருஷ்ணசாமிமுதலியாருடைய

---

* இவர் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களைக் கொண்டு சிதம்பரேசர்மாலை இயற்றுவித்தவர்; ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம், முதற்பாகம், பக்கம், 163, பார்க்க.

குமாரரான † கேசவமுதலியாரென்பவரியற்றிய திருவிளையாடற் சற்குருமாலை, பெரிய புராணக்கீர்த்தனை யென்னும் இரண்டு நூல்களின் அச்சுப் பிரதிகளை நான் பார்த்திருக்கிறேன். அவை முறையே 1861-ஆம் வருஷத்திலும், 1805-ஆம் வருஷத்திலும் பதிப்பிக்கப்பெற்றவை.

## பழகிய இடங்கள்

இந்நூலாசிரியர் இடையிடையே சென்று சிற்சில வருடங்கள் தொட்டிக்கலையில் இருந்துவந்ததன்றித் திருச்செந்தூர், திருக்குற்றாலம், பழநி திருத்தணிகை, வடதிருமுல்லைவாயில், திருவொற்றியூர், ஆயலூர், தொண்டைநாட்டிலுள்ள ஆவினன்குடி, திருவல்லிக்கேணி முதலிய ஸ்தலங்களுக்கும் யாத்திரையாகச்சென்று அவ்வவ்விடத்தே சிலசிலநாள் தங்கி வந்தனர். இதனை இவரியற்றிய பிரபந்தங்களும் தனிச்செய்யுட்களும் தெரிவிக்கின்றன.

## தனிப்பாடல்கள்

இவர் அவ்வச்சமயங்களிற் பாடிய ‡ தனிப்பாடல்களும் கீர்த்தனைகளும் பல. ஆதீனத்தில் தேவாரப் பணிவிடை செய்யும் ஓதுவார்களுட் குருசாமியோதுவாரென்று ஒருவர் இருந்தார்; அவர் இசைப்பயிற்சியும் இனிய சாரீரமும் உடையவர்; இவர்பால் அன்புபூண்டவர்; இவரியற்றிய பழநிக் குழந்தைவேலர் பஞ்சரத்தினமாலை முதலிய பிரபந்தங்களை இசைவரம்புடன் பாடி உவப்பித்துவருபவர். அவர் வழக்கப்படி ஒருநாள் அம்பலவாணதேசிகருடைய பூஜாகாலத்தில் மற்றவர்களோடுசேர்ந்து தேவாரங்களைப் பண்ணுடன் ஓதுவாராயினார். அப்பொழுது தரிசனத்திற்குச் சென்ற இவர் அவருடைய இனிய சாரீரம் மற்றையோர் சாரீரங்களினும் சிறந்து விளங்குதலை அறிந்து,

### கட்டளைக்கலித்துறை

''ஒருசாமி வாழ்திருக் கோமுத்தி யூர்தனி லுற்பவித்து
வருசாமி யெங்கள் வயித்திய லிங்கம் வலம்புரிந்து
தருசாமி முத்தமிழ்ச் சங்கீத சாமிநற் சாந்தகுணக்
குருசாமி தீங்குர லெந்நாளுங் கோகிலங் கோகிலமே''

---

† இவர் ராய்பகதூர் பூண்டி அரங்கநாதமுதலியாருடைய மாமனார்.

‡ சில தனிப்பாடல்களையும் அவற்றைப்பற்றிய வரலாறுகளையும் திருவாவடுதுறைக்கோவையிலுள்ள நூலாசிரியர் வரலாற்றிற் காணலாம்.

என்னும் செய்யுளையியற்றிப் பூசைமடத்திலிருந்து வெளிப்பட்ட ஆசிரியர்க்கு விண்ணப்பஞ்செய்து உவப்பித்தனர். வைத்தியலிங்க மென்பது குருசாமி யோதுவாருடைய தந்தையார் பெயர்.

## இயற்றிய நூல்கள்

இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பல. சில பழைய ஏட்டுச் சுவடிகளில் எழுதப்பெற்றிருந்த குறிப்புக்களாலும் பிறவற்றாலும் இவர் இயற்றியனவாக இப்பொழுது தெரிந்தவை வருமாறு :

* 1. கலைசைக் கோவை.
* 2. கலைசைச் சிலேடைவெண்பா,
3. கலைசைச் சிதம்பரேசர் சந்நிதிமுறை (இதிற் பத்தொன்பது பிரபந்தங்கள் உண்டு.)
4. கலைசைச் சிதம்பரேசர் வண்ணம்.
5. கலைசைச் சிதம்பரேசர் பஞ்சரத்தினம்.
6. கலைசைச் சிவகாமியம்மை பஞ்சரத்தினம்.
* 7. கலைசைச் சிதம்பரேசர் பரணி.
8. கலைசைச் சிதம்பரேசர் கட்டியம்.
* 9. திருவாவடுதுறைக் கோவை.
10. திருக்குற்றாலச் சித்திரசபைத் திருவிருத்தம்.
11. பழநிக் குழந்தைவேலர் பஞ்சரத்தினமாலை.
12. ஸ்ரீசுப்பிரமணியர் திருவிருத்தம்.
13. திருத்தணிகைத் திருவிருத்தம்.
14. வருடதிருமுல்லைவாயிற்கொடியிடையம்மைபிள்ளைத் தமிழ்.
15. ஆயலூர் முருகர்பிள்ளைத்தமிழ்.
16. திருச்செந்திற் சந்தவிருத்தம்,
17. ஆவினன்குடிக் கைலாயநாதர் பதிற்றுப்பத்தந்தாதி.
18. திருமாளிகைத்தேவர் திருவிருத்தங்கள்.
19. திருச்சிற்றம்பலதேசிகர் சிந்து.
20. திருச்சிற்றம்பலதேசிகர் சந்தவிருத்தம்.
21. அம்பலவாணதேசிகர் பஞ்சரத்தினமாலை.
22. அம்பலவாணதேசிகர் வண்ணம்.
23. அம்பலவாணதேசிகர் ஆநந்தக்களிப்பு.
* 24. சிவஞானமுனிவர் துதிவிருத்தங்கள்.
* 25. சிவஞானமுனிவர் கீர்த்தனை.

---

* இவை அச்சிடப்பட்டவை.

இவற்றுள் ஸ்ரீ சுப்பிரமணியர் திருவிருத்தமும், திருத்தணிகைத்திருவிருத்தமும் தம்பாலன்புடைய இருவர்களுக்கு முறையே நேர்ந்திருந்த குட்டநோயையும் அந்தகத்தன்மையையும் நீக்கியருளும்படி முருகக்கடவுளைப் பிரார்த்தித்து இவராற் பாடப்பட்டன வென்பர். கலைசைக்கோவையும் திருவாவடுதுறைக் கோவையும் பல வகையில் ஒப்புமையுடையனவாக விளங்குகின்றன.

இவருடைய வரலாறு திருவாவடுதுறையாதீனத்தில் 16 ஆம் பட்டத்திலிருந்த **ஸ்ரீ சுப்பிரமணியதேசிகரவர்**கள், மகாவித்துவான் ***ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்***, தொட்டிக்கலைக்கேசவ முதலியாருடைய பரம்பரையினரும் சென்னை ஐயாப்பிள்ளை தெருவில் இருப்பவருமாகிய ம.ா.ா.ஸ்ரீ கிருஷ்ணசாமிமுதலியாரவர்கள் முதலியோரும் வேறுசிலரும் கூறிய செய்திகளாலும், இவரியற்றிய நூல்களாலும், அவை வரைந்துள்ள கையெழுத்துப் பிரதிகளிலிருந்த குறிப்புக்களாலும் ஒருவாறு தெரியவந்தது

# நூல் ஆராய்ச்சி

இக்கோவையில் நூலாசிரியரால் அங்கங்கே பலபடியாக எடுத்துப் பாராட்டப்பெற்ற இந்த ஸ்தலசம்பந்தமான செய்திகளும் அமைக்கப்பெற்ற சொற்பொருள் நயங்களும் பண்டை நூற் கருத்துக்களும் பல. குறிப்புரையில் அங்கங்கே விளக்கப்பட்டிருப்பவற்றால் இவற்றை நன்கு அறியலாம்.

## 1. தலச்செய்திகள்

செங்கழுநீர்விநாயகர்:—''திகழ்தருமால்...........செங்கழுநீர்த் தனிக்கயமே'' (காப்பு), ''கலைசைத்தியாகரளித்தருளும், ஓடைகொள் செங்கழு நீர்க்குஞ் சரத்தை'' (289.)

சிவபெருமான்:—(i) சிதம்பரேசர்: 14-ஆம் செய்யுள் முதலிய பல;(ii) சிதம்பரநாதர்:89;(iii) சிதம்பரமகாதேவன்:204;(iv) சிதம்பரதேவன் : 212 முதலியன; (v) சிதம்பரநாயகர் : 450.

அம்பிகை :— ''எங்கள் மாதா வளர்சிவ காமி'' (293); ''கலைசைத் தியாகேசருஞ் சிவகாமியும்போல்'' (384); ''சிவகாமியிடம், பிரியாமல் வாழுங் கலைசைத் தியாகர்'' (428.)

**தியாகப்பெருமான்** :— 2, 3 முதலியன.

**தலம்** :— (i) கலசாபுரி : 310, 3?3; (ii) கலைசாபுரி : 5; (iii) கலைசை; (iv) கோவிருந்தபுரம் : 37, 54, 194, 214, 267, 315, 453; (v) தொட்டிக்கலை : 14, 71, 118, 212, 256.

**பிரமதேவர்க்கு அமிர்தகலசம் அருளியது:**— ''கலசத் தியாகரை மானநெஞ்சே......கலசத்தியாக மிவருந் தருவர்'' (5)' ''கலைசைத்தியாக ரெடுத்துமுன்னாள், தம்பாலிருந்த கலசத்தை வேதன்றனக்கு......அளித்துவிட்டால்'' (65), ''எண்கணர்க்கோர், இடங்கரன் றீந்த கலைசைத்தியாகர்'' (191), ''கும்பங் கொடுத்த கலைசைத் தியாகர்'' (451.)

**திருநடஞ்செய்தது** :— ''நிருத்தங் குனிக்குங் கலைசைத் தியாகர்'' (1), ''நடங்காட்டு மெங்கள் சிதம்பர வீசர்'' (14), ''நாடகத் தேவர் கலைசைத் தியாகர்'' (56) முதலியன.

**விழாக்கள்** :— (i) வஸந்தவிழா : ''கலைசைத் தியாகேசருக்குத் திருவசந்த, நன்னாளிற் சீதள வுற்சவஞ் செய்பவர் நல்லன்புபோல்'' (106); (ii) மாதவிழா : ''மாதவிழாச் சிறப்பேறு தொட்டிக் கலை வாழ் சிதம்பர தேவன் வெற்பில்'' (212).

***தீர்த்தங்கள்*** : (i) சிவகங்கை : "சிவகங்கை குடைந்துமிக விளையாடியோ" (69), "கலைசைத் தியாகர் சிவகங்கைநீர், தானே சென்றாடினன்" (105), "சிவகங்கையாடிப் பலன்பெற்று" (263), 'மல்குசிவகங்கையும்" (324), "கலைசைத் தியாகேசர் தோய்சிவகங்கையிலே" (418); (ii) நந்தியோடை : "நந்தியம் போடைக் கலைசைத்தியாகர்" (277), "கலைசைத் தியாகர் நயந்ததெண்ணீர், உற்றேறிய நந்தி யோடை" (308), "திருக்கலைசை மங்கைய ராடுந் திருநந்தியோடையும்" (324), "மலர்நந்தியோடைத்துறையிது" (366); (iii) பொது : 14, 43, 47, 58-9, 80, 169, 177, 265, 270, 426, 436, 444.

***உய்யானம்*** :— "தேனேறுய் யானக் கலைசை" (105.)

இத்தலத்தில் சிவஞானமுனிவரும், கச்சியப்பமுனிவரும், இந்நூலாசிரியரும், இவர்களுடைய மாணாக்கர்களும், பிறரும் இருந்து தமிழ் நூலாராய்ந்தும், சில நூல்கள் இயற்றியும் வாழ்ந் திருந்தனர். ஆதலின் இக்கலைசை தமிழ்த்தொடர்பும் வடமொழித்தொடர்புமுடையதாக இந்நூலில் அங்கங்கே பாராட்டப் பெற்றிருக்கிறது.

"எம்பாவை யேற்குங் கலைசைத் தியாகர்" (65), "காவியப் பாக்கொள் கலைசைத் தியாகர்" (144), "நாவலர் போற்றுங் கலைசை" (219), "ஆரியந் தமிழ் தேருங் கலைசை" (235), "மன்னுந் தமிழ்த்தென் கலைசை" (239), "தெரிதமிழார்ந்த கலைசை" (364), "கலைப்பாவலர்சூழ் கலைசை" (409.)

இது தொண்டைநாட்டில் இருப்பதையெண்ணி அந்நாட்டை யும் அதற்குரிய பாலாறு, நந்திவெற்பு என்பவற்றையும் இடை யிடையே இவ்வாசிரியர் பாராட்டுகிறார் :

***தொண்டைநாடு***:—"கலைசைத் தியாகர் குலவுதொண்டை நாட்டணி யன்னவர்" (58), "தொண்டை நாட்டார் கலைசைத் தியாகேசர்" (102), "தீங்கொன்றாத தொண்டைநன் னாட்டில்" (133), "கலைசைத் தியாகரை யேத்தி யிருவினையுங் கழித்தவர் தொண்டை நன் னாடு" (295), "மகிழ் தொண்டை நாட்டன்பர்" (309). "கலைசைத்தியாகர்க் கினியதிருத் தொண்டைத் தொன் னாடனையாள்" (415), "கலைசைத்தியாகர் மகிழ், பஞ்சரம் பொன்சொரி *தண்டக நாட" (91), "தண்டகநாடர் கலைசைத் தியாகர்" (148), "கலைசைத் தியாகர்தந் தண்டகநாட், டகநா யகனென" (382), "கலைசைத் தியாகேசர் தண்டக தேசமன்னாய்" (443).

---

* தண்டக நாடு—தொண்டை நாடு.

*பாலாறு:—கலைசைத்தியாகர்நன் னாட்டொழுகும் பாலாறு'' (53), ''கலைசைத்தியாகர் வரத்தின்வரும் பாலாறு'' (147), ''பாலி யாறொன் றிருத்தியதே (211), ''கலைசைத் தியாகர் புரியருள் போல், வற்றாத பாலித்துறைவர்'' (269), ''பாலாறு போல்வரு வேன்'' (275), திருமணிப் பாலியிற் பாய்ந்தெடுத்தான்'' (317), ''கலைசைத் தியாகர் வளர்சடைநீர்த், தண்ணிற் சிறந்தவெண் பாலாற்று முத்தம்'' (333), ''பாலிநன்னாடு'' (351), ''தோயுந் தண்பாலி நுரையா மெனும்வெள்ளைத் தூசு'' (404), ''பாலி நன்னாடர்'' (431.)*

*நந்திவெற்பு:—''பாலாறு வந்திழி நந்திவெற்போ'' (53), ''நந்தி நாகந் தனின்முனி வோர்வாழ் குகை'' (131), ''கலைசைச் சிதம்பர வீச னந்தி வெற்ப'' (252), ''கோலா கலமுட னந்திக் குன் றுள்ளன கொண்டுவரும், பாலாறு'' (275.)*

## 2. பிறதலச் செய்திகள்

*(1) திருவண்ணாமலை:—''அண்டர்கொண் டாடுங் கலை சைத் தியாக ரருணைவெற்பர்'' (101.)*

*(2) திருக்காளத்தி:—''ஒருவேடன் கண்ட தென்கயிலாயம்'' (110), ''தெக்கண மாகயி லாயம்'' (128.)*

*(3) பொதியில்:—''கலைசைத் தியாகர் மகிழ்ந்ததமிழ் மலை யத்த'' (135.)*

*(4) திருப்பனங்காடு, திருப்பனந்தாள் முதலியன:—''பனையை யிடங்கொள் கலைசைத் தியாகர்'' (166.)*

*(5) மதுரை:—''சங்கத் தமிழ்நிறை கூடல் வணிகர்தந் தைய லர்க்குச், சங்கத்த மிட்ட கலைசைத் தியாகர்'' (292.)*

*(6) விருத்தாசலம்:—''கலைசைத் தியாகர் முதுகுன்றுளோர்'' (299), ''கலைசைத் தியாகர் பழமலை'' (375.)*

*(7) காஞ்சீபுரம்:—''தழைந்து சந்த தங்கச்சி மேயவர்'' (417.)*

*(8) சீகாழி:—''கலைசைத் தியாகர்க் கினிய திருப்புகலி''(420)*

## 3. நாயன்மார்களும் திருவாதவூரடிகளும்

*திருஞானசம்பந்தர்:—''முன்னைநாட் பரவை, உற்றிடஞ் சென்று கலைசைத் தியாக ருரைத்தருளிச், சொற்றிடங் கொண்டு வரல்பார்த்து நின்ற வன்றொண்டர்'' (55.)*

*கண்ணப்பநாயனார்:—''அன்றோர் திண்ணனா ரெய்தகைக் ககத்தால், மாய்ந்த வராகம்'' (92), ''ஒருவேடன்'' (110), ''அக் கணப்பன்னெம் மரபோ னொருவன்'' (128.)*

**திருவாதவூரடிகள்:**—"அவ்வாத வூரர்முன் றேரர்வெவ் வாயை யடக்கியபோல்" (332.)

## 4. சைவசித்தாந்த நூற்கருத்துக்கள்

**ஆணவத்தின் இயல்பு** :— "செம்பார் களிம்பெனச் சிற்றுயிர் தோறுஞ் செறிந்தமல, வெம்பாசம்" (8), "எவ்வழி யுஞ்சுழன் றேங்கிக் கிடந்த வெமக்குமலத், தெவ்வழி வித்தருள் செய்தார்" (85.)

**சஞ்சிதவினை** :— "தொகைக்கிடந் தந்தவென் சஞ்சிதக் குன்றறத் தூளிசெய்து, வகைக்கிடந் தந்த கலைசைத் தியாகர்" (18).
**அபேதநிலை** :— "கலைசைத் தியாகரை நண்ணினர்போல், பேதஞ்செயாதவள்" (38), "எனையுந் தன்வண்ண மாக்குங் கலைசைத் தியாகர்" (297.)

**சுத்ததத்துவம்** :— "சுத்த தத்துவங்கள், ஐந்து முபகரித் தாற் போலு மானந்தம்" (44.)

**இறைவன் திருவுருவம்** :— "அருவன்றி யேயு முருவன்றி யாண்பெண் ணலியுமல்லா, ஒருவன் றியாகப் பெருமான்" (83.)

**அருட்சத்தி** :— "உபகரித் தாருயிர்க்கு, மத்திநின் றேற்றுங் கலைசைத் தியாகர் மகிழுமருட், சத்தியைப் போல்" (152.)

**தாமதகுணம்** :— "சித்தாங் கலைசைத் தியாகர் நொடித் தலைச் செய்யுமந்நாட், கொத்தார் தமோமயம் போலுமிக் கங்குல்" (216.)

**ஞானியர் இயல்பு** :— "தத்துவக் கூட்ட முழுவதுஞ் சோதித் துத் தாகமுடன், சித்துரு வான கலைசைத் தியாகரைத் தேடுநர்" (365.)

**சிவபெருமானே குருவாக வருவரென்பது** :— "குருவாய்வந் தன் பர்க்கு முப்பொருள் காட்டிக் குறைவிலின்பம், தருவார் கலைசைத் தியாகர்" (368,)

**அபேதமுதலியமூன்று** :— "உன்னு மபேத முதன்மூன்றும்" (392.)

**நவசக்தி** :— "நவசத்தி கட்கு முரியோன் சிதம்பர நாதன்" (395.)

## 5. நீதிகள்

**கொடையாளர் இயல்பு** :— "ஒன்றுந் தாராதவ ரென்றுந் தரா ரிவ் வுலகிலெல்லாம், என்றுந் தருபவ ரின்றுந் தருவர்" (39.)

**சொல்லுறுதியில்லார்** :— ''நல்ல மார்க்கமதா, முன்னொன்று கூறிக் கலைசைத் தியாகரை முன்னலர்போல், பின்னொன் றுரைத் திடுந் தன்மையர்க் கேதென்று பேசுவதே'' (159.)

**பழகிப்பிரிபவர்** :— ''அடுத்துப் பழகிப் பிரிபவர் போலில்லை யன்னியரே'' (171.)

**பெரியோர் இயல்பு** :— ''நற்குணப் பெரியோர், நிறைமொழி குன்றிற்குள் றாததுண் டோமண்ணி னேரிழையே'' (307), ''நல் லோர், நலகால் விருப்ப மொழிவர்கொலோ'' (408), ''நெறி யாய்ந்த மேலவர் வேட்கைக் கடும்பரி நெஞ்சுறினும், சிறியா ரிடத்திற் செலுத்துவரோ'' (428.)

**கணவரே மனைவியர்க்குத் தனித்துணை** :— ''ஒருகேளிரு மில்லை கண்டாய்கொண் டானி னுலகிடத்தே'' (430.)

## 6. தமிழ்

**முத்தமிழ்** :— ''கொத்துறு முத்தமிழ் வேலை'' (45)
**தமிழ்ச்சுவை** :— ''அந்தமி ழின்சுவை'' (385)

## 7. திருக்குறள்

''வள்ளுவர்சொல், முப்பாலும் பார்ப்பவர் போனான்கு பாலு முறையுறப் பார்த்து'' (33) என்ற விடத்தில் இவ்வாசிரியர் திருக்குறளில் அறம் பொருள் இன்பம் வீடென்னும் நாற்பகுதிகளும் இருத்தலைக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றார்.

''என்வாய், ஐந்தாலுங் கொள்ளவொர் தெள்ளமிர் தப்பிழம் பாய்நின்றதே'' (146), ''தொடைகொண்ட கோதையை நீயின்றை வாயினுந் துய்த்திடலால்'' (387) என்பவற்றில், ''கண்டுகேட் டுண் டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள'' என்னுங் குறட்கருத்தும், ''எழுமைப் பிறப்புந் தொடர்ந்துதவும், கல்வியென் றாலஃ தியாவருங் கற்குங் கடனுளதே'' (435) என்பதில், ''ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவர்க், கெழுமையு மேமாப் புடைத்து'' என்னுங் குறட்கருத்தும் அமைந்துள்ளன, ''தற்காத்து நின்வேய்த், தோளிதற் கொண்டவற் பேணி யவரைச் சுவைதருபாற், பாளித நாளு மிசைவித்துப் பூரிக்கும் பான்மையளே'' (389) என்பது'

''தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலால் பெண்'' என்னுங் குறளோடும்,

''ஒறுத்தார்க் கொருபொழு தின்பம் பொறுமை யுடையவர்நீர், நிறுத்தா ருரைப்பர்'' (416) என்பது, ''ஒறுத்தார்க் கொரு நாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந் துணையும் புகழ்', என்பதனோடும், ''அன்பர் காமுறமங், கலநாளு மோங்கிடத் தந்தானென் மைந்தனிற் காந்தைக்குநன், கலனா வதுநன்மக் கட்பேறெனும்பயன் கண்டனமே'' (429) என்பது, ''மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன், நன்கல நன்மக்கட் பேறு'' என்பதனோடும், ''கல்வி கற்றிலர்தாம், பயவாக் களரனையார்'' (436) என்பது, ''உள்ரென்று மாத்திரைய ரல்லாற் பயவாக், களரனையர் கல்லா தவர்'' என்னும் குறளோடும் சொற்பொரு ளொப்புமை உடையனவாக விளங்குகின்றன.

## 8. அகப்பொருட் கருத்துக்கள்

பின்னும், இந்நூலாசிரியர் பண்டை நூலாசிரியர்களது புலனெறிவழக்கத்தை நன்குணர்ந்து இந்நூலில் பல அரியசெய்தி களை அங்கங்கே அமைத்திருக்கின்றார் :

தலைவன் தலைவியர்களுக்கு இடையே நிகழும் அன்பு பல பிறவிகளில் தொடர்ந்துவரும் உழுவலன்பென்பதை, ''எழுமை யும் பூண்ட தொடர்புடையீ ரெங்கட்கு'' (272), என்பதிலும். அவ்விருவரும் ஊழ்வினை இடைநின்று செலுத்த ஒன்றுபடுவ ரென்பதை, ''உன்னையு மென்னையு மொன்றாகக் கூட்டிய வூழ்'' (26), ''ஒருவிதி கூட்ட முயங்கினரால்'' (321) என்பவற்றிலும், அவ்விருவரும் இருதலைப்புள்ளின் ஒருயிர்போலப் பிரிவின் றியைந்த துவரா நட்பின ரென்பதை, ''ஒருவாவிருதலைப் புட்போ னமக்குயிரொன்றெனமுன், திருவாய்மலர்ந்தருள் செய்ததங் காதலர்'' (287) என்பதிலும் புலப்படுத்துகின்றார்.

பாங்கி ஐயந்தீர்தற்குரிய ஏதுக்களாகிய நாற்றம், தோற்றம், ஒழுக்கம், உண்டி, செய்வினைமறைப்பு, செலவு, பயில்வு என்னும் ஏழையும் இவர் முறையே அமைந்திருக்கின்றார் (70.) தலைவன் வினாவுதற்கண் பண்டை நூல்களில் அருமையாகக் காணப்படும் வன்றிவினாதல் என்னும் துறையை இவர் அமைத்துள்ளார் (83.) என்னுடைய தமிழாசிரியராகிய **ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சீகாழிக்கோவை** பாடஞ்சொல்லும்போது வறிதுநகைதோற்றல் என்னும்துறை கவியின்கூற்றாக இருக்க வேண்டுமென்று கூறினார்கள். பெரும்பாலான கோவைகளில் அங்ஙனமே இருக்கும். சிலவற்றில் அங்ஙனம் அமையவில்லை. இவர் இக்கோவையில் அத்துறையைத் தலைவன்கூற்றாக அமைத்திருக்கின்றார்.

தலைவனைப் பிரிவதனால் தலைவியின் மேனியிலுள்ள மாமையென்னும் பேரழகு நீங்கிப் பசலைபடரும்; தலைவன் வந்துவிட்டால் அது நீங்கும்; இக்கருத்து, "தூணோர் புயத்தன்பர் சேர்ந்தாலகன்றவர் தூரஞ்சென்றால், ஊணேது மற்றவர் போல்விரைந்தொன்றி யொளிவளையாய், வீணே பசலை விருந்தாக வுண்ணுமென் மெய்யழகே" (231) என்பதில் அழகாக அமைக்கப்பட்டிருக்கிறது. தலைவியின் மேனியிலுள்ள மாமைநிறம் பாதிரிப்பூவைப் போல இருக்குமென்பது பழநூற்கருத்து; அதனையறிந்த இவர் அக்கருத்தை, "தையல்வணம், சினைப்பா டலத்தின் பழம்பூவதாகிச் சிதைகின்றதே" (262) என்று பொருத்தியுள்ளார். மகளிர்க்கு நாண்சிறந்ததென்பதும் அதனினும் சிறந்தது கற்பென்பதும் இலக்கணவரையறை; அதனை இவர், "பேணிய வாவியிற் பெற்றிடுந்தாயிற் பெரிதெனச்சொல், நாணினு நற்பொருள் கற்பாவதேயென்று நங்கையர்க்கே" (328) என்பதில் விளக்கி யிருக்கிறார். கற்புடைமகளிர் தெய்வத்தையும் தொழாநிலை யுடையரென்பதை "உரத்திற் சிறந்தொரு தெய்வந் தொழாத வுறுதி" (347) என்பதனாற் குறிப்பிக்கின்றார்.

## 9. பழைய உவமைகள்

"காந்தங் கண்ட விரும் பென்ன" (12);

"மீகாம னில்லாத நலம்போல்" (31);

"நூல்வலைக்கே மதுகைப் புலிவதுக் குண்டென்ன" (49);

"சந்திரனைக் கண்டுவந்த சகோரந் தனையொத்ததே" (129);

"கடக்கரிதான், உண்டவெள்ளிற்கனிபோல்" (320);

"பாவா யுறுகுழல்போல்" (353.)

## 10. சிலவகை வழக்குகள்

"இந்த வீரர்கள் பேசிய வாயைநன் னீரின் விளக்குவையே" (48);

"கூட்ட விருப்பமனப், பூட்டைத் திறந்தினிதாக் காட்டுமா லிவர் பூங்கண்களே" (93);

"இப்பாவி சொன்னசொற் றீங்கும் பொறுத்தொழி யென் றனையே" (139);

"நம், கருத்தின் முளைத்த வொரு புதவின் றனைகண்டனளே" (225);

"பெண்ணாச் சமைத்த **வினையே பொல்லாத** பெருவினையே" (327);

"சுசியார் வனமும் வனமாஞ் **சிவசிவ** துன்னிடினே" (330.)

## 11. இசை நூற் கருத்துக்கள்

"அந்தி வந்திடுமுன், **செவ்வழி** யொன்றுரையீர்" (85);

"ஒண் குறிஞ்சி, பாடியங் காவிற் பயிலுமின்னார்கள்"(97);

"குணக்கிற் புகர்தோன் றளவும் **பெருங்குறிஞ்சிப் பண்ணே** யெடுத்துப் பகர்ந்துறங் காரிப் பதியவரே" (218);

"இன் **மேகராகக்குறிஞ்சி**யைப் பாடு" (410);

"**விறலியிங் கெய்திச் சுருட்டி** யெடுக்கும் விதியுளதோ" (412.)

## 12. குறிப்பாற் பொருள் தருவன

(1) **எழுத்துக்களைப் பற்றிய குறிப்புகள்** :— அரி (குதிரை) யைக் 'கடையிலரிசி' (156) என்றும், அளி (வண்டு)யை, 'இடையிலமளி' (269) என்றும், தலையை, 'முதலிலு மதலை' (414) என்றும், மலையை 'இடையில் மதலை' (414) என்றும், கவி (குரங்கை)யை 'இடையற்ற கல்வி' (434) என்றும், கல் (கற்பாயாக) என்பதைக் 'கடையற்ற கல்வி' (434) என்றும் குறிப்பிப்பா இவ்வாசிரியர். 'நடுக்கப்படுபழி' (380) என்பதனால் பகழியென்பதையும், 'இத்தலை சேருங்கல்' (444) என்பதனால் இகலென்பதையும் புலப்படுத்துகின்றார்.

(2) **மாத்திரைக் குறிப்பு** :— கரவிமலரைச் சொல்லவந்தவர் அளவொன் றேறிய கவி' (210) என்று குறிப்பிப்பர்.

3. **வெளிப்படை** :— ஆடையை உடுக்குங் கலையென்றும் நூல்களை ஒதுங்கலையென்றும் சந்திரகிரணத்தை ஒர் புள்வாய் மடுக்குங்கலையென்றும் மானை வலைக்குட் படுக்குங்கலை யென்றும் புலப்படுத்துவர்; 82. ஆகாயத்தை அருவான கோவென்றும் தலைவனை உருவானகோவென்றும் கூறுவர்; 558. மலரை அளிசேரல ரென்றும் பழிமொழியை அளிசேர்கிலாவல ரென்றும் குறிப்பிப்பர்; 244.

(4) **பிறவகைக் குறிப்புகள்** :— வேங்கைமரத்தை, 'தீத்நீண்டு கையார்' (164) என்பர்; இது **திணைமாலைநூற்றைம்பதிற்** கண்டது. தாமரையை 'வண்டுகொண்ட நாமங்கொள்போது' (316) என்பர்.

தலைவன் தலைவியை நினைந்து இரவில் வருதலை விலக்கக் கருதிய தோழி அவன்வருப்வழி தீங்குநேருந்தன்மையினதென்பதைச் சொல்லும் பகுதியில், ''எங்கடவப் பேறான நீவருங் கால்வரைத் தோவொன்று பின்றொடர்ந்து, வேறா நிகழ்த்தியதேல் வல்லளோவுய்ய மென்கோடியே' (157) என்று கூறுவதாக ஆசிரியர் அமைத்துள்ளார். மலையிலுள்ள தெய்வம் அவனுயிரைக் கவர்ந்து விடுமென்பது தோழியின்கருத்து; எனினும் அதனை வாயாற் சொல்ல அஞ்சுகின்றாள். குறிப்பாக 'வேறாநிகழ்த்தியதேல்' என்று புலப்படுத்துகின்றாள். பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனொடு தலைவி ஊடும்போது தன்பாற் பொருந்துதலை விலக்கி, ''என், தலைப்பாலனையுஞ் சவலையதாக்குதல் தக்கதன்றே'' (409) என்று குறிப்பாற் கூறுகின்றாள்.

## 13. யமகம், திரிபு, ஏதுகைநயம்

இந்நூலுட் பலசெய்யுட்கள் திரிபாகவும் யமகமாகவும் அமைந்துள்ளன. அவை எளிதிற் பொருளுணரத்தக்கனவாக இருத்தல் இந்நூலாசிரியரின் புலமைத்திறத்தைக் காட்டுகின்றன; சிலசில இடங்களில் எதுகையின்பொருட்டு வகையுளியை இவர் அமைத்திருக்கின்றார்.

வழியெதுகைநயம் அமைந்தபாடல்கள் இதில் அங்கங்கே காணப்படும். அவற்றுட் சில வருமாறு :

*''ஆக்கந் திரண்டதும் பாக்கமெங் கேசொலு மாயிழையீர்...*
*ஏக்கந் தவிர்ந்திரு நோக்கந் தெரிந்தங்க ணேகுதற்கே' (78);*

*''என்னம் படவுடல் பின்னம்பட'' (83)*

## 14. மடக்கு

இக் கோவையில் பலவகையான மடக்குக்கள் எடுத்தாளப் படுகின்றன :

*''அங்கங் கஞ்க்கணி யங்கெங் கணிந்தன னங்கனையாய்'' (21).*

*''அவையவங் கட்கினை யென்னசொன் னாலு மவையவமே'' (36);*

*''சரமே விழிகுஞ் சரமே தடமுலை தண்சதபத், திராம முகத்தித் திரமே திருவுரு'' (54)?*

*''பிடியே நடைகைப் பிடியே யிடைகுழற் பின்னலரா, மடியே வடமும் மடியே'' (57)?*

"நாட்டணி யன்னவர் நாட்டவை நாட்டத்தை நாட்டப்பட்டால்" (58);

"மாராய நின்மங்கை மாராயந் தன்னை மருவுகவே" (68);

"வேங்கையின் பால்வந்த தோவொரு வேங்கை" (81);

"உழையுழை மேயச் சுகஞ் சுகமார" (86);

"தாமரை போன்றுறு தாமரை" (90);

"பனிப்புறத்தைக், குஞ்சரத் தோடொரு குஞ்சர மஞ்சி" (91);

"சுகமே மொழிகிஞ் சுகமே யிதழா சுகம்விழிபன், னகமே மருங்கு னகமே தனதட நன்றிகொன்றார், அகமே குழன்முண்டக மேபொற் பாதம்" (98);

"ஆம்பலி னாம்பற் பிறந்தில" (121);

"செப்பிடிற் சேர்த்துத்தன் செப்பிடு சாந்தமுன் செப்பிடுமே" (124);

"கொள்ளைவெம் மாலை யெழுப்பவிம் மாலை குறுகியதே" (155);

"இனியார் பிரியி னினியாரைக் காண்பம்" (168);

"பயந்து, பயந்தந் தவள்கண் விழித்தின் றதட்டிப் பயந்தருமுன்" (196);

"உழைகொண்ட திங்க ளுழைகொண்டதே" (249);

"கருந்தும்பி மும்மதங் கார்போற் சொரியக் கருந்தும்பி சூழ்ந், தருந்தும் பொருப்ப" (258);

"கோகைகூவெங் காலெனக் கோடையின் கால்செல" (289);

"சுசியார் வனமும் வனமாம்" (330);

"ஒருகயந் தள்ளி யொருகயம் வீழ்ந்தெடுத்தோன்" (345);

"பற்ப்ங்கள் பற்பங்க ளாக வரும்பனியே" (445.)

## 15. சிலேடை

பலவகையான சிலேடைகளை இதன்பாற் காணலாம்.

"மலரைப் பழித்த வடியீர்நுங் கண்ணுக்கொவ் வாமையன்றோ, அலரைப் பொருந்தி வெறிகொண்டு வண்டிங் கலைகின்றதே" (11);

''கடங் தாட்டிநிரை, வண்டாடுங் கையிற்கண் வையம் படைத்திட்ட வல்லபத்தால், கொண்டாடு மும்மை விதியென்று கூறிக் குவலயமே'' (15);

''நான்றா விருந்த துனக்குமுன் சொற்கு ஈடுவின்மையே'' (133);

''அகலிகைக் காசைப்பட் டாயிர மம்பக மம்மகவான், உழ லின்மெய் பெற்றுவந்தும்'' (420);

13, 208, 220, 343, 398-ஆம் செய்யுட்களையும் பார்க்க.

## 16. தொனி

ஒருசெய்தியைச் சொல்லும்பொழுது வேறொருபொருளும் தோற்றும்வண்ணம் அமைந்த செய்யுட்கட் பல :

''நற்பத்தி யாரங்கொள் பாலிகை சேர்தொண்டை நாட்டணி வாய், உற்பத்தியான நிலா'' [19);

''சிங்கம் பிடிக்கக் கலையுஞ்செங் காந்தளிற் றெய்வவண்டும், தங்கமென் சூதுக்கு வம்பையுங் காருக்குத் தாரையுஞ் சேர்த்து'' (23);

''கொக்குச்சிக் கேறி யிருணிறப் பூங்குயில் கூவினவே'' (455);

8—10, 20, 33, 42, 47-8, 50, 84-5, 120, 164, 166, 194, 289 ஆம் செய்யுட்களையும் பார்க்க.

## 17. வடசொற்களும் தொடர்களும்

சில வடசொற்களையும் சொற்றொடர்களையும் திரித்தும் திரியாமலும் இவர் வழங்குவர்: சோத்திரானந்தம், 79; தீற்கம், 276; பற்பங்கள். 455; சரணபத்மங்கள், 149; நவரத்னம், 149; பாதபத் மங்கள், 335.

சில தொடர்களைத் தமிழ்முடிபுப்படி அமைப்பார்:

சிதம்பரவீசர், 20; முதலியன

## 18. அரும்பதங்கள்

ஆட்டி பெண், 342; உங்கு, 87; உங்ஙனம், 28; உவள், 263; காளையம் - போர், 449; சேகு - வைரம், 12; மோய் - தாய், 312; தங்கச்சி, 417; தாரி - வழி, 235; பாதை - வழி, 325.

## 19. முருகக்கடவுள்பாலன்பு

இந்நூலாசிரியர் முருகக்கடவுள்பா லன்புடையவர். அதனைப் பின்வரும் செய்யுட்பகுதிகளா லறியலாம்:

''திருத் தணியா ரருளென்ன வேதணிப்பா ரண்ண றாபத் தையே'' (60);

''விருப்பொடருண கிரிநாதரன்று விதம்விதமாய்ப், பொருப் புறை வேலவர் வள்ளியொ டாடிறும் பூதுரைத்த, திருப்புகழ் கேட்டறியீரோ'' [96);

''அங்கதிர் காமத்தன் கைவேற்கண்ணாள்'' (169);

''சண்முகத்தான் றிருமுன் வரங்கிடந் தியான்பெற்ற மொய் குழலாள்'' (348.)

## 20. செய்ந்நன்றியறிவு

தம்மை ஆதரித்தவர்களிடத்தில் இவருக்குள்ள செய்ந்நன்றி யறிவு பின்வருவனவற்றாற் புலப்படும்.

''தொட்டிக், கலைக்கே சவன்மெய்ப் புதழ்போல் விளங்குங் கதிர்ப்பிறையை'' (71);

''கலைசைத் தியாகர் தமக்கினிய, வேதா சலத்தின் புகழ் போல் விளங்குக வெண்சங்கமே'' (293);

இத்தகைய செல்வர்கள் நல்லறம் புரிந்து வாழ்ந்துவந்த கலைசை இந்நூலாசிரியரால் ''அறவாணர் வாழுங் கலைசை'' (199) என்று பாராட்டப்பெறுகின்றது.

# கலைசைக் கோவை.

காப்பு.

*செங்கழுநீர்விநாயகர்.*

உருக்கோவை யங்கொள் கலைசைத் தியாகரை யோர்ந்துரைக்கும்
திருக்கோவை யான்முழு துந்துறை செய்யத் திகழ்தருமால்
மருக்கோவை வாயுமை மைந்தன் கலைசையுள் வாரிசனைந்
தருக்கோவை யாழியன் சூழ்செங் கழுநீர்த் தனிக்கயமே.

நூல்.

## 1. கைக்கிளை.

*காட்சி*

1. திருத்தங்கு பங்கயஞ் செங்கழு நீர்குமிழ் சீதளங்கூர்
மருத்தங்கு கோங்குசெங் காந்தள்கொண் டற்புத மல்கியொல்கி
நிருத்தங் குனிக்குங் கலைசைத் தியாகர் நிறையருள்போல்
உருத்தங்குதெய்வக்கொடியொன்றுதோன்றியொளிர்கின்றதே. *1*

## குறிப்புரை

### காப்பு

உரு-உருவத்தையுடைய, கோ-பூமியை, வையம் கொள்-தேராகக் கொண்ட. திருக்கோவையால்-அழகிய கோவையென்னும் பிரபந்தத்தால், துறை - அகப்பொருட்டுறை; நீர்த்துறையென்பது வேறுபொருள், மரு - மணம், கோவை வாய் உமை - கோவைப்பழத்தையொத்த சிவந்த வாயையுடைய உமாதேவியார், வாரிசன் - பிரமன் ஐந்தருக்கோ - இந்திரன். வை ஆழியன் - கூர்மையான சக்கரத்தையுடைய திருமால். செங்கழுநீர்த் தனிக்கயம் - செங்கழுநீர்விநாயகர், செங்கழு நீரையுடைய ஒரு குளமானது நான் துறைசெய்யத் திகழுமென்பது மற்றொருபொருள்.

### நூல்

*1.* இவ்வகை நூல் ஐந்திணைக்கோவையென்று கூறப்படுவதற்கேற்ப முறையே மருதம், நெய்தல், முல்லை, பாலை, குறிஞ்சி என்ற ஐந்து நிலத்திற்கு முரிய பங்கயம் முதலிய கருப்பொருள்கள் இச்செய்யுளில் வந்தமை காண்க.

### ஐயம்.

2. பொன்னுல கோகம லாலய மோபொறி வாளரவம்
மன்னுல கோவிந்த மண்ணுல கோவிசை வல்லவர்வாழ்
மின்னுல கோதென் கலைசைத் தியாக விமலர்வெற்பில்
என்னுல கோரு மயல்கூர நின்ற விவரிடமே. 2

### துணிவு.

3. சூடக்கண் டாயடிப் பத்மங்கள் பூவினிற் சூடியபூ
வாடக்கண் டாய்வண்டு கூடக்கண் டாயிரு வாட்கணிமை
ஆடக்கண் டாய்மன மேயிந்தக் கொம்ப ரணங்கல்லடீங்
கோடக்கண் டாளுங் கலைசைத் தியாக ருயர்வரைக்கே. 3

### குறிப்பறிதல்.

4. மறுப்புகு தாத கலைசைத் தியாக மணிவிருப்பும்
வெறுப்புமில் லார்க்கருள் வார்வெற்பி லிந்தமின் மெய்யிலெல்லா
வுறுப்பு மொருதன்மை யாக விருதன்மை யுற்றுவிழிக்
கறுப்பும் வெளுப்பும்வன் னஞ்சோ டமுதத்தைக் காட்டிடுமே. 4

## 2. இயற்கைப்புணர்ச்சி.

### இரந்து பின்னிற்றற்கெண்ணல்.

5. நலசத் தியர்தென் கலைசா புரியுறை நாதரெல்லாம்
வலசத் தியாகர் கலசத் தியாகரை மானநெஞ்சே
சலசத்தி யன்னவர் பின்னின் றிரந்திடிற் றாங்குதனக்
கலசத் தியாக மிவருந் தருவர் களிப்புறவே. 1

---

2. கமலாலயமோ - தாமரைமலராகிய இடமோ, இசை வல்லவர் - கந்தர்வர், என்னுலகோரும் - எத்தகைய உலகத்தினரும்.

3. பூவினில் - பூமியின்கண், வாட்கண் இமைஆட, கொம்பர் - பூங்கொம்பு போல்வாள். அணங்கல்லள் - தெய்வ மகளல்லள்; மானிடமகளேயென்றபடி.

4. மறு - குற்றம், கண்ணின் கறுப்பு நஞ்சையும் வெளுப்பு அமுதத்தையும் காட்டின; நஞ்சென்றது பொதுநோக்கத்தை; அமுதமென்றது சிறப்பு நோக்கத்தை.

பி-ம். ''நஞ்சோ டமுதமுங் காட்டினவே''

5. நல சத்தியர் - நல்ல ஆற்றலையுடையவர். சத்தி ஆகர்; சத்தி - உமை. கலசத்தியாகர் : இத்தலத்திலுள்ள சிவபெருமான்; பிரமதேவருக்குக் கலசம் கொடுத்தமையின் இத்திருநாமம் வந்ததென்பர், சலசத்தி - திருமகள்; சலசம் : தாமரைமலர், தனமாகிய கலசங்கள். தியாகம் - கொடை.

## இரந்து பின்னிலைநிற்றல்.

6. ஓங்கற் சிலையர் கலைசைத் தியாக ருயர்வரைமேல்
நீங்கற் கரிய பரிவுட னேநின்ற நேரிழையீர்
ஈங்கற் புதக்கச் சிளநீரை நீரின் றெமக்களித்துத்
தாங்கற் கரிய விரகா னலத்தைத் தணித்திடுமே. 2

## முன்னிலையாக்கல்.

7. தொழுதா யிரந்திரு நாமங்க ளோதிடுந் தொண்டரைச்சேர்
பழுதாறு நீக்குங் கலைசைத் தியாகர் பருப்பதத்திப்
பொழுதாயத் தோடலர் குற்றாட லின்றிப் புரிகுழலீர்
எழுதாத சித்திரம் போனிற்ற லென்னை யியம்புமினே. 3

## வண்டோச்சி மருங்கணைதல்.

8. செம்பார் களிம்பெனச் சிற்றுயிர் தோறுஞ் செறிந்தமல
வெம்பாசந் தீர்க்குங் கலைசைத் தியாகர்தம் வெற்பிலிம்மான்
வம்பாருங் கொம்ப ரிடையரை நீவிர் வருத்தஞ்செய்தே
ஐம்பால் குடியா விருந்தீ ரறனன் றளியருக்கே. 4

---

6. *கலைசை: தொட்டிக் கலையென்பதன் மரூஉ. கச்சையுடைய இளநீரென்றது தனங்களை. விரக அனலம்; அனலம் - தீ. தீயைத் தணிக்க இளநீர் தரவேண்டுமென்றது ஒரு நயம்.*

7. *பழுது ஆறும் - உட்பகையாகிய காமம் முதலிய அறுவகைக் குற்றங்களையும், அலர் குற்று - மலர் கொய்து.*

8. *வம்பாரும் கொம்பர் இடையரை - மணம் நிறைந்த பூங்கொம்பைப் போன்ற இடையை. ஐம்பால் குடியா - கூந்தலைக் குடியிடமாகக் கொண்டு. அளியர் - வண்டுகள். பூங்கொம்பை (க் கையில்) உடைய இடைச்சாதியினருக்கு வருத்தம் செய்து (அவர் வைத்திருந்த) வியப்பைத்தரும் பாலைக் குடித்திருத்தல் அன்பைடையவர்களுக்குத் தர்மமன்று என்பது தொனிப்பொருள். ஐ - வியப்பு. அளியர் - அன்பையுடையவர்.*

*பி - ம். 'அழகன் றளியருக்கே'*

## இதுவுமது.

9. நீடுபொன் மாடக் கலைசைத் தியாகர் நெடுங்கிரிமேல்
வாடுலங் காநின்ற கண்மட மாதொரு மாத்திரையில்
நாடுமற் றல்கிடச் செய்தாறு கால்வள நன்றுபெற்றும்
ஊடுறு மாக்கள் குடியாவிக் கூழை யுவந்தனரே. 5

## மெய்தொட்டுப் பயிறல்.

10. விடையாள ரெங்கள் கலைசைத் தியாகரை மேவுமருள்
நடையார் பெறுநற் றவப்பயன் போல நறுநுதலாள்
இடையாமந் நூல்கொண் டிசைத்தோதி யத்தமெய் யெய்தப்பெற்றுக்
கிடையாப் பதங்களு நேரேகைக் கொள்ளக் கிடைத்ததுவே. 6

## பொய் பாராட்டல்.

11. பலரைப் புணர்ந்த விருட்பாவை நீத்தருள் பார்ப்பதிகா
தலரைக் கலைசைத் தியாகேச ரைத்தணந் தாரிற்றெய்வ
மலரைப் பழித்த வடியீர்நுங் கண்ணுக்கொவ் வாமையன்றோ
அலரைப் பொருந்தி வெறிகொண்டு வண்டிங் கலைகின்றதே. 7

---

9. வாள் துலங்காநின்ற. ஒரு மாத்திரை இல் நாடு - நடு; என்றது இடையை. அல்கிட - குறைய, தங்க. ஆறுகால் - ஆறு பாதத்தையுடைய வண்டு; ஆறும் கால்வாய்களும். மாக்கள் - வண்டு, மனிதர். கூழை - கூந்தல், கூழினை. ஒரு மாத்திரைப் பொழுதில் நாட்டினைத் தம்பால்கொண்டு, அதிலுள்ள ஆறுகளாலும் கால்வாய்களாலும் உண்டாகும் வளத்தைப் பெற்றிருந்தும் மனிதர்கள் கூழை விரும்பினர்; இஃது என்ன வியப்பென்பது தொனிப்பொருள்.

10. இடையாகிய அந்த நூலைக்கொண்டு. ஓதி - கூந்தல், படித்து. அத்தம் - கை, பொருள், மெய் - உடம்பு, உண்மை, பதங்கள் - அடிகள், பதவிகள். நூலைக்கொண்டு படித்து ஓதி அதன் பொருளால் உண்மையை அடையப் பெற்றுக் கிடைத்தற்கரிய பதவிகள் அடைந்தேனென்பது தொனிப் பொருள்.

11. இருட்பாவை - ஆணவமலமாகிய ஒரு மங்கையை. நீத்தருள் - நீக்கியருள்கின்ற. தணந்தாரில் - பிரிந்தவர்களைப் போல. தெய்வ மலரை - தாமரை மலரை; "கடவுளொண்பூ" (பெரும்பாண். 290.) அலரை - பூவை, பழிமொழியை. வெறி - வாசனையை, பித்தினை.

## இடம்பெற்றுத்தழால்.

12. சேகாந் தருக்கள் புறஞ்சூழ் கலைசைத் தியாகர் வெற்பில்
நீகாந்தங் கண்ட விரும்பென்ன வீர்த்தென்னை நிற்கையினால்
ஏகாந்தமான விடமிஃ தன்றிமற் றில்லைநல்லாய்
யோகாந்தமான சுகமாரு தற்கிடை யூறில்லையே. 8

## வழிபாடு மறுத்தல்

13. தளவேந்தர் வாழுங் கலைசைத் தியாகர் தரணியிற்குந்
தளவேரி யந்தொடை தாழவென் னாணமுன் றன்னிடத்தே
தளவேய்ந் தனனிறை கற்புற் றவர்க்கொரு தாழ்வுளதோ
தளவே யொதுங்கத் தனியிடந் தாதமி யேன்றனக்கே. 9

## இடையூறு கிளத்தல்

14. நடங்காட்டு மெங்கள் சிதம்பர வீசர் நளினமலர்த்
தடங்காட்டுந் தொட்டிக் கலையனை யீரமிர் தத்தைமுத்து
வடங்காட் டியதன மந்தரங் காட்டிமை தீட்டுகண்கள்
விடங்காட்டு மத்தியென் றோமறைத் தீரிரு
மென்கைகொண்டே. 10

## இதுவுமது.

15. செண்டாடு மால்விடை யூருங் கலைசைத் தியாகர்வெற்பில்
கண்டாடு மின்சொற் கனியித ழீர்கடங் காட்டிநிரை
வண்டாடுங் கையிற்கண் வையம் படைத்திட்ட வல்லபத்தால்
கொண்டாடு மும்மை விதியென்று கூறிக் குவலயமே. 11

---

12, சேகு - வைரம்; யோகாந்தமான சுகம் - யோகமுடிவி லுள்ள இன்பம்; யோகம்: சிலேடை.

13. தளவேந்தர் - படைகளையுடைய அரசர். குந்தள வேரி அம் தொடை - கூந்தலிலுள்ள தேனையுடைய அழகிய மாலை. எனது நாணம் தள்ள. ஏய்ந்தனன் - பொருந்தினேன். தளவே - முல்லைக்கொடியே.

14. முத்துவடத்திற்கு அமிர்தம் உவமை, தனமாகிய மந்தரம். அத்தி - கடல்.

15. செண்டாடும் மால்விடை: "செண்டாடும் விடையாய்" (தே.) கண்டு - கற்கண்டு. கடம் - தனமாகிய குடம், கலசம். வண்டு - வளை. கண் வையம் படைத்திட்ட - கண்ணாகிய கூர்மையையுடைய அம்பை மறைத்த, இடத்தையுடைய பூமியைப் படைத்த. வல்லபம் - ஆற்றல். விதி - பிரமன், குவலயம் கூறிக் கொண்டாடும்.

## நீடுநினைந்திரங்கல்.

16. வாது வராலொடு செய்பதத் தீரகழ் வாய்நின் றும்பல்
வாதுவ ரீர்க்குங் கலைசைத் தியாகர் வரையினிலோ
வாது வருத்து மலரம்பி னானையும் வாட்டங்கண்டு
வாதுவர் வாயமிர் தந்துவ்வென் றென்று வழங்குவதே. 12

## மறுத்தெதிர்கோடல்.

17. வீணைக் கரத்தர் கலைசைத் தியாகர் விதித்தவருள்
ஆணைக் கடங்குமல் லாதுநம் மன்பர்தம் மாசையென்னும்
கோணைக் களிறு மதமிகுந் தாலச்சங் கொள்ளையிட்டென்
நாணைக் கவளங்கொள் ளாமல் விடாதினி நன்னெஞ்சமே. 13

## வறிதுநகைதோற்றல்.

18. தொகைக்கிடந் தந்தவென் சஞ்சிதக் குன்றறத் தூளிசெய்து
வகைக்கிடந் தந்த கலைசைத் தியாகரை வாழ்த்தலின்றிப்
பகைக்கிடந் தந்தவ ரிற்றென்ன நாணறல் பார்த்தென்செவ்வாய்
நகைக்கிடந் தந்த தினியார்க்கு நல்கு நகைக்கிடமே. 14

---

*16. வரால் - ஒருவகை மீன். அகழ் - அகழி. உம்பல் வாதுவர் ஈர்க்கும் - யானைகளைப் பாகர் இழுக்கும், வரையினில் ஓவாது. மலரம்பினான் - மன்மதன். வா - வருவாயாக. அமிர் தம் து; து - உண்க, வழங்குவது என்று.*

*பி-ம். 'வராலொடு செய்யுங்கண்ணீர்'*

*17. வீணைக்கரத்தர்: ''எம்மிறை நல்வீணை வாசிக்குமே'. (தே.) கோணை: கோண் - வலி; ஐ: சாரியை; ''கோணைக் களிற்றுக் கொடித்தேர்'' **சீவக. 28.***

*18. சஞ்சிதக்குன்று அற - சஞ்சித வினைகளாகிய மலை அற்றுப்போகும்படி செய்து உவகைக்கு இடம் தந்த. இற்றென்ன - அழிந்தாற்போல. நாண் - நாணம், இனி யார்க்கும் நகைக்கு இடம் நல்கும்.*

## முறுவற்குறிப்புணர்தல்.

19. சிற்பத்திற் செய்தபொன் மாடக் கலைசைத் தியாகர்வெற்பில்
கற்பத்தின் மேவிய காரிகை யார்மெச்சுங் காரிகையார்
நற்பத்தி யாரங்கொள் பாலிகை சேர்தொண்டை நாட்டணிவாய்
உற்பத்தி யான நிலாவுள்ள மேநம்மை யுய்விக்குமே. 15

## முயங்குதலுறுத்தல்

20. செறியும் பசும்பொழில் சூழ்தென் கலைசையிற் செங்கைமழு
மறியுஞ் சுமந்த சிதம்பர வீசர் வரைமின்மெய்யாம்
முறியுந் தனங்களுந் தானே தான்முறை யென்றளிக்கக்
குறியுங் குணங்களு நான்கண்டு தோய்தரக் கூடியதே. 16

## புணர்ச்சியின் மகிழ்தல்.

21. சீரின் பரப்புடை யார்வாழ் கலைசைத் தியாகர்வெற்பில்
பாரின்பஞ் சிற்றின்ப மென்பா ரவரவர் பக்குவத்தால்
ஓரின்ப விம்ப விவளித ழூறலை யுற்றருந்தப்
பேரின்ப மாகப்பெற் றேனினி யேதொரு பேரின்பமே. 17

---

19. சிற்பத்தில் - சிற்பநூல் விதிப்படி. கற்பம் - தேவலோகம். காரிகையார் - அரம்பைமகளிர், அழகையுடைய தலைவி. பத்தி ஆரம் - வரிசையாகிய முத்துக்களை; என்றது பற்களை. பாலிகை- உதடு. தொண்டைநாட்டு அணிவாய் - கொவ்வைக் கனியை உவமையாககாட்டும் அழகிய வாய், நிலா வென்றது புன்சிரிப்பின் வெள்ளொளியை. அன்பையுடையவர்களை அழகாகக் கொண்ட, பாலாறு சேரப்பெற்ற தொண்டைநாடு என்பது மற்றொரு பொருள். பத்தியார் அம் கொள்; பாலிகை - பாலாறு.

20. மெய்யா முறி - உடம்பாகிய தளிர்; உண்மையாகிய ஆவணவோலை. தனங்கள் - கொங்கைகள், பொருள்கள். மின் கூடியது; மின்னென்றது தலைவியை.

21. பாரின்பத்தை, அவரவர் பக்குவத்தால் சிற்றின்பம் என்பார், விம்பம் - கொவ்வைக்கனி,

### புகழ்தல்.

22. தேவாதி தேவர் கலைசைத் தியாகர் சிலம்பின்மின்னார்
மாவார் படலையங் கூந்தற் குடைந்து மருவுகொன்றை
தாவாத கொம்பெனுங் கையா லடியுறை தன்றலையில்
பூவாய செம்பொன் சொரிந்துகண் மாரிபொழிகின்றதே 18

### ஏற்புறவணிதல்.

23. சிங்கம் பிடிக்கக் கலையுஞ்செங் காந்தளிற் றெய்வவண்டும்
தங்கமென் சூதுக்கு வம்பையுங் காருக்குத் தாரையுஞ்சேர்த்
தங்கங் களுக்கணி யங்கங் கணிந்தன னங்கனையாய்
பங்கங்க டீர்க்குங் கலைசைத் தியாகர் பணியென்னவே. 19

## 3. வன்புறை.

### அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

24. திரணம் பெறாவிந்தச் சிற்றடி யேற்குச் சிலம்பணிபொற்
சரணங்க ணல்குங் கலைசைத் தியாகர் சயிலத்திலா
பரணக் கொடியிடை நாணியஞ் சேலுன் பருவத்தந்தக்
கரணங்க ளொப்பவ ரொப்பனை யேயென்றன் கைப்பணியே. 1

---

22. மா - வண்டு, படலை - மாலை. அடி உறை - காணிக்கையாக. கண்மாரி - கள்ளாகிய மழை; கண்ணீராகிய மழை. கொன்றைக்காய் கூந்தலுக்கு உவமை கூறப்படும்; "மகளிர், கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றை" குறுந். 21.

23. சிங்கமென்றது இடையை. கலை - ஆடை, கலைமான். காந்தளென்றது கையை. வண்டு - வளை, வண்டு. சூதென்றது தனங்களை. வம்பு - கச்சு, சண்டை, காரென்றது கூந்தலை. தாரை - மாலையை, மழைத்தாரையை. அங்கங்கு அணிந்தனன். முன்னிரண்டடிகளிலுள்ள வேறுபொருள் அறிதற்பாலது.

24. திரணம்பெறா - துரும்பளவும் பற்றாத. ஆபரணத்தையுடைய. கொடியிடை: அன்மொழித் தொகை; விளி. உன் பருவத்தையுடைய உன் அந்தக்கரணங்களை ஒப்பவரென்றது தோழியரை. ஒப்பனை - அலங்காரம்.

## பெருநயப்புரைத்தல்.

25. சுத்தங் கொடுக்குங் கலைசைத் தியாகர் சுடர்க்கிரிமேல்
சத்தங் கொடுக்குந் தடத்தில்வண் டேகொங்கு தங்கலங்கற்
கொத்தங் கொடுக்குங் குழலாள் வதனக் குமுதமென
முத்தங் கொடுக்குங் குமுதமுண் டோசொலு முன்னர்வந்தே. 2

## தெய்வத்திறம் பேசல்.

26. அன்னையொப் பான கலைசைத் தியாக ரருளுந்தியீன்
மின்னைமின் னாழிகொண் மேகத்தி னாகத்தின் விட்டதுபோல்
உன்னையு மென்னையு மொன்றாகக் கூட்டிய வூழிருக்க
என்னைகொ னீதளர்ந் தேங்கிமை யாப்ப திளங்கொடியே. 3

## பிரியேனென்றல்.

27. காதார் குழையர் கலைசைத் தியாகர் கயிலைவெற்பில்
போதாருங் காவைப் பிரிந்தஞ் சிறைத்தும்பி போதலுண்டோ
ஆதார் நீநிறை யாதேய மாகி யமைந்தனனால்
நீதா னிரங்கலை நான்பிரி யேனென்று நேரிழையே. 4

## பிரிந்துவருகென்றல்.

28. அருக்கத்தி பூண்ட கலைசைத் தியாகர்த மன்பருள்ளத்
துருக்கத்தி னுக்குட னேவரல் போலகன் றுங்ஙனம்போய்
மருக்கத்தி கைக்குழ லாயிங்கு நின்று வகையுடன்கொய்
குருக்கத்தி மென்றளிர் வாடுமுன் னான்வந்து கூடுவனே. 5

---

25. சுத்தம் - முத்தி. வதனக் குமுதமென்றது வாயை.

26. உந்தி ஈன் மின்னை - கடல்பெற்ற திருமகளை, மின் ஆழிகொள்மேகம் - திருமால்; ஆழி - சக்கரம். அருள்விட்டது போல். மையாப்பது - மயங்குவது; 'மலர்காணின் மையாத்தி நெஞ்சே'' (திருக்குறள், 1112); ''கூத்தவை யேத்துங்கொடித் தேரான் கூடியபின், வேத்தவையுண் மையாக்கும் வேந்து'' பு.வெ. 201.

27. தும்பி - வண்டின்சாதியுட் சிறந்தது.

28. அருக்கு - எருக்கம்பூ. அத்தி - எலும்பு. உருக்கம் - நெகிழ்ச்சி : ''நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும் பொன் னார்சடைப் புண்ணியன்'' (தே.) மரு கத்திகை - மண முடைய மலர்மாலை.

## இடமணித்தென்றல்.

29. கம்மூர்கண் காட்டல் கலசத் தியாகர் கலைசையன்னீர்
எம்மூர்ச் சிகர நிரைக்கோ புரங்க ளிடைப்பதித்த
அம்மூருஞ் செக்கர் நிறமாணிக் கத்தி னடரொளிபாய்ந்
தும்மூர்வரைப்புறம்பொற்கொண்டல்போலென் றுமூர்தருமே. 6

## இதுவுமது.

30. தகட்டிதழ்க் கொன்றைக் கலசத் தியாகர் தடங்கலைசை
முகட்டெழின் மாளிகை யெம்மூர் மலர்ப்பட்ட மொய்த்துலவும்
பகட்டின நாளும் மூர்வரைச் சாரற் பசுந்தினைமேய்ந்
தகட்டினைச் சாய்த்து வருமா லயர்வுற லாரணங்கே. 7

## 4. தெளிவு.

31. காமனைக் காய்ந்த கலைசைத் தியாகரைக் கைதொழுமீ
காமனில் லாத கலம்போலென் னுள்ளங் கலங்கிமயங்
காமானன் னீதியிற் றேற்றிவைத் திங்கெனைக் கற்பமுறும்
காமனை யொப்பவ ரெங்ககன் றாலுமென் கண்ணவரே.

## 5. பிரிவுழிமகிழ்ச்சி.

### செல்லுங்கிழத்தி செலவுகண்டு உளத்தொடு சொல்லல்

32. சூடகக் காந்தண்மைக் கூந்தலங் கேந்தமின் சூழ்ந்தவிரும்
பாடகக் கால்கண்கண் முன்பின் பெயர்தரப் பையநெஞ்சே
நாடகத் தேவர் கலைசைத் தியாகர்த நாகத்தின்மேல்
ஆடகப் பூங்கொம்பர் போற்செல்லு மானம தாருமிரே. 1

---

*29. கம் ஊர் கண் காட்டல்; கம் - நீர்; காட்டல் காட்டாதே; அழாதே யென்றபடி. சிகரம் - கலசஸ்தூபி. அம் ஊரும் - அழகு பரவிய.*

*30. தகடு - பொற்றகடு. பட்டம் - ஓடை. பகட்டு இனம் - எருமைக் கூட்டம். அகட்டினை - வயிற்றை.*

*31. மீகாமன் இல்லாத கலம் - மாலுமி இல்லாத கப்பல். மயங்காமல் நன்னீதியில். கற்பம் - தேவலோகம். காமன் - இந்திரன்; கா - கற்பகதரு; "காமனத்தால் விழலூதி" **திருவரங்கத்.** 70.*

*32. சூடகம் - வளை. காந்தளென்றது கையை. பாடகம் - ஒருவகைக் காலணி. கால்கள் முன்னும் கண்கள் பின்னும் பெயர்தர; நிரனிறை.*

பாகனொடுசொல்லல்.

33. வைப்பார் வையிற்சகி மார்வரல் பார்த்தருள் வள்ளுவர்சொல்
முப்பாலும் பார்ப்பவர் போனான்கு பாலும் முறையுறப்பார்த்
தப்பார் சடையர் கலைசைத் தியாக ரருளினுக்கே
ஒப்பாக வொல்குதல் காண்வல வாவென் னுயிர்க்குயிரே. 2

## 6. பிரிவுழிக் கலங்கல்.

ஆயவெள்ளம் வழிபடக் கண்டிது மாயமோ வென்றல்

34. காயவெள் ளங்கொள் கலசத் தியாகர் கலைசையன்னார்
ஆயவெள் ளந்தொழ வார்திரு வோலக்க வாக்கங்கண்டால்
மாயவெள் ளத்தது மோகினி யோவிவ் வடிவெடுத்தென்
நேயவெள் ளங்கொண் மனம்போல வந்திங்கு நேர்பட்டதே. 1

வாயில்பெற்று உய்தல்.

35. நீராடும் வேணிக் கலைசைத் தியாகர்முன் னேர்ந்தவில்வேள்
போராட னீக்கவொர் தூதுபெற் றாமுய்ந்து போதிநெஞ்சே
தாராடு குந்தளத் தார்விழி வண்டு தனக்கினிய
ஓரா யிழைமுகச் செந்தா மரையுற் றுலாவருமே. 2

---

நாடகம் - நடனம். நாகம் - மலை.

33. வை - கூர்மை. முப்பால் - திருக்குறள். நான்கு பாலும் - நான்கு பக்கங்களையும்; அறம் முதலிய நான்கு பகுதிகளுமென்பது மற்றொரு பொருள். அப்பு - நீர்; ஆகாயகங்கை.

34. காய வெள்ளம் - ஆகாய கங்கை. தொழ ஆர் - தொழும்படி தங்கிய, திருவோலக்க ஆக்கம் - பலரும் காண வீற்றிருத்தலை. மாயவெள்ளத்தது - மிக்க மயக்கத்தைத்தருவது; வெள்ளம் - மிகுதி.

35. குந்தளத்தார் - கூந்தலையுடையார். வண்டு உலாவருமென்க. தலைவி கண்கள் உயிர்ப்பாங்கியை நோக்குகின்றன. அப்பாங்கியால் நாம் தலைவியை இனி அடையலாமென்பது கருத்து.

## பண்புபாராட்டல்.

36. சிவையொரு பாகர் கலைசைத் தியாகர் சிலம்பிலிம்மான்
சுவைதரு கொங்கை யிளநீர்க ளாமெனிற் சொல்லிளநீர்க்
குவைகச் சிடாதிடை நூலெனி லையங் கொடாதுமற்றை
அவையவங் கட்கிணை யென்னசொன் னாலு மவையவமே. 3

## பயந்தோர்ப்பழிச்சல்.

37. இக்கோ விருந்த புரத்துத் தியாகர்தம் மின்னருள்போல்
அக்கோலங் காட்டி யளித்தவென் னாவியை யன்றுதந்த
தக்கோ ரிருவரும் வாழிய ரோதருத் தாழவட
திக்கோனெண் ணத்தழைந் திக்கோ வுளமட்டுஞ் சித்திபெற்றே.4

## கண்படை பெறாது கங்குல்நோதல்.

38. நாதஞ்செய் பாதர் கலைசைத் தியாகரை நண்ணினர்போல்
பேதஞ்செ யாதவ ளென்னைக் கலந்து பிரிந்துழிவேள்
போதஞ்செய் வானுற வுள்ளேறும் வெப்பம் புறங்கொடுப்பச்
சீதஞ்செய் யாதென் பனிநீர்பெய் யாமந் திரம்பெற்றுமே. 5

---

36. சிவை - உமை. மான்போன்ற தலைவியின். கச்சு - வார். ஐயம் - சந்தேகம். அவையவம் - உறுப்புக்கள், அவை வீண். ''கச்சுக் கிடக்கிலுந்தித் திச்சுக் கிடக்குமிரு கொங்கையாள்'' **குற்றாலக்குறவஞ்சி**, 9.

37. கோவிருந்தபுரம் - தொட்டிக்கலை. அக்கோலம் - அழகியகோலம்; அ - அழகு. ஆவியென்றது தலைவியை. இருவர் - தலைவியின் தாய் தந்தையர். தாழ - பணிகேட்ப. வடதிக்கோன் - குபேரன். இக்கோ - இந்தப் பூமி.

38. நாதம் - ஒலி; இங்கே சிலம்பொலி. வேள் - காமன். போது அஞ்சு எய்வான் உற - ஐந்து மலரம்புகளை எய்தற்கு வர. உள் ஏறும் வெப்பம் - காம வெப்பம். பனிநீர்பெய் யாமம் திரம் பெற்றும் - பனிநீரைப் பெய்கின்ற யாமம் நிலைபெற்றும்; காலம் குறிஞ்சிக்குரிய கூதிராதலின் பனிநீர்பெய் யாமமென்றார்.

## 7. இடந்தலைப்பாடு.

### தந்த தெய்வந் தருமெனச் சேறல்.

39. ஒன்றுந் தராதவ ரென்றுந் தராரிவ் வுலகிலெல்லாம்
என்றுந் தருபவ ரின்றுந் தருவர்நெஞ் சேயிமையோர்
துன்றுங் கலைசைத் தியாகேசர் வெற்பிளஞ் சோலையின்வாய்ச்
சென்றுமின் றுந்தரு முன்னவ ளைத்தந்த தெய்வமதே. 1

### முந்துறக் காண்டல்.

40. தண்ணுரு வாயுமிவ் வாயத்தி னீங்குஞ் சதுரரிற்றீர்ந்
தெண்ணுரு வான கலைசைச் சிதம்பர வீசரிடக்
கண்ணுரு வாமுக முத்தாட வந்திந்தக் காவின்மலர்ப்
பெண்ணுரு வாய்நின்ற தாற்பண்டு நான்செய் பெருந்தவமே. 2

### முயங்கல்.

41. நிதிவாய்த்த செல்வக் கலைசைத் தியாகர் நெறியினிற்கும்
விதிவாய்த் திலர்குறை வென்னச்சின் னாள்கலை வீறுகுன்று
மதிவா யமுதுண் புலவோர்க் கிவண்முக மாமதியிற்
பதிவா யமிர்தம் பருகுமென் போலின்று பாக்கியமே. 3

### புகழ்தல்.

42. சேணுற்ற மாடங்கள் சூழ்தென் கலைசைத் தியாகர்வெற்பில்
ஏணுற்ற கற்புடை யாடன் புருவத் தெழிற்குடைந்து
மாணுற்ற வேணுத்தன் கண்ணம் பொழுக வணக்கஞ்செய்து
நாணுற்று நின்றிடு மால்பிடிப் பார்கையி னாடொறுமே. 4

---

39. 'சென்றும்' என்பது 'செல்வோம்' என்னும் பொருள்பட இங்கே அமைக்கப்பட்டதுபோலும்.

40. தண் உரு-மெல்லிய உருவம். எண் உரு-அஷ்டமூர்த்தம். இடக் கண்ணென்றது சந்திரனை. முத்தென்றது வேர்வையை.

41. புலவோர்க்கு - தேவர்க்கு. புலவோர்க்குப் பாக்கியம் இன்று.

42. ஏண் - நிலைபேறு. வேணு - மூங்கில், தன் கண் அம்பு ஒழுக - தன்னிடத்தில் பாணங்கள் செல்ல, தன் கண்ணீர் ஒழுக. அம்பு - பாணம், நீர். வணக்கம்செய்து - வளைந்து, பணிந்து; நாண் - நாணி, நாணம்.

### ஆயத்துய்த்தல்.

43. கல்லார வாவிக் கலைசைத் தியாகர் கனகிரிமேல்
எல்லா மணிகளுக் குஞ்சிறப் பாய்விலை யிட்டறியா
வில்லார் கதிர்விடு மாணிக்கம் போல விளங்கியுன்றன்
நல்லாயத் தோடிடை யில்லாத வொண்ணுத னண்ணுகவே. 5

## 8. பாங்கற்கூட்டம்.

### தலைவன் பாங்கனைச் சார்தல்.

44. இந்துறை மாடக் கலைசைத் தியாகரை யேத்தலர்போல்
நைந்துநைந் தேங்கனெஞ் சேநந்த நண்பனை நண்ணிவருத்
தந்துடை யாயென்றித் தன்மைசொன் னாற்சுத்த தத்துவங்கள்
ஐந்து முபகரித் தாற்போலு மானந்த மாக்குவனே. 1

### பாங்கன் தலைவனை உற்றது வினாதல்.

45. வளைத்தனை யோபல மாமுனி மாற்றலர் மாய்ந்திடப்போர்
விளைத்தனை யோவன்றிக் கொத்துறு முத்தமிழ் வேலையின்வாய்த்
திளைத்தனை யோதென் கலைசைத் தியாகர் சிலம்பன்னதோள்
இளைத்தனை யோவிதென் னேயறை வாயென் னிறையவனே. 2

### தலைவன் உற்றதுரைத்தல்.

46. நெருங்கலை வாரிநஞ் சுண்ட தியாகர் நெடுங்கலைசை
தருங்கலை வாரி நிரம்பிய வெண்மதி தண்ணறுங்கா
வருங்கலை வாரி னகிலமின் னார்முகில் வாயொளிப்ப
ஒருங்கலை வாரித யத்தினுற் றேனண்ப வோர்ந்துகொள்ளே. 3

---

43. கல்லாரம் - செங்கழுநீர்.

44. இந்து - சந்திரன். ஏங்கல் - ஏங்காதே. வருத்தத்தைத் துடைப்பாய்.

45. முனி - வில். கொத்துறு முத்தமிழ்; ''கோக்குந் தமிழ்க்கொத்தனைத்தும் வாழி'' (தக்க 814); ''தமிழ்க்கொத்தி னாலே'', ''செழுந்தமிழ்க் கொத்து'' (திருவால கடவுள். 17; 18:7). இளைத்தனையோ: ஓ: இரக்கக் குறிப்பு. முதலிலுள்ள மூன்று ஓகாரங்களும் வினா.

## கற்றறி பாங்கன் கழறல்.

47. சீதக் கமலத் தடஞ்சூழ் கலைசைத் தியாகரருள்
வேதக் கடலி னெறியறி வேந்தற்கும் வேந்தவொரு
மாதக் கவலையுற் றேனென்று தேம்பிமெய் வாடன்மிக
நோதக்க தாலிது வோதிட்ப மானநின் னுண்ணறிவே.

## கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.

48. காரங் கிரீவர் கலசத் தியாகர் கலைசையன்னார்
ஆரங்கொள் வாயி னமிர்தமு மூரு வரம்பையும்பொற்
றோங்க மோங்கு சுவர்க்கமுங் காணிற் சிலதவிந்த
வீரங்கள் பேசிய வாயைநன் னீரின் விளக்குவையே.

---

கலை வாரின் நகிலம் - கலையையும் வாரையும் அணிந்த தனங்களையுடைய. மின்னார் - தலைவி, முகிலென்றதுகூந்தலை; ''தலைக்கேறு தொங்கலிற் கட்டுண்டு'' (49) என்பர்பின். 'மதி மின்னார் முகில்வாய் ஒளிப்ப' என்றது ஒரு நயம். அலைவு ஆர் இதயத்தின் உற்றேன் - அலைதல் நிறைந்த உள்ளத்தோடும் வந்தேன்.

47. ஒரு மாதினது கண்ணாகிய வலை; அக்கம் - கண். ஒரு மாசக்கவலை யென்பது மற்றொரு பொருள். வாடல் - வாடுதல். நோதக்கது - நோவத்தக்கது.

பி-ம். 'மெய் வாடிமிக'

48. கிரீவர் - கழுத்தையுடையவர். ஆரம் -முத்து; என்றது பற்களை. ஊரு அரம்பை - துடையாகிய வாழை. பொற்றேரங்கம் - ரதாங்கம் (சக்கரம்); என்றது சக்கராயுதத்தை, சக்கராயுதம் முகத்திற்கு உவமை கூறப்படும்; ''தண்டு தோள்வளை கழுத்துநுதல் சாபம் விழிவாள் சக்ர மானன மெனத்தேவர் தானவர்களைப், பண்டு நீரமு தருத்துமுரு வத்திலிவையே பஞ்சவாயுதமு மல்லதிவை யென்ன படையே'' (713) என்னும் **தக்கயாகப்பரணித்** தாழிசையில் மோகினியின் முகத்திற்குச் சக்கரம் உவமையாகக் கூறப்பெற்றிருத்தல் காண்க. சுவர்க்கம் - தனங்கள். சிலத - தோழனே. அமிர்தத்தையும் ஊர்வசியையும் சுவர்க்கலோகத்தையும் கண்டாலென்பது மற்றொருபொருள்; ஊரு அரம்பை - துடையிற்றோன்றிய தெய்வமகளாகிய ஊர்வசி,

49. விலைக்கே யெனைகொள் கலைசைத் தியாகர்வில்
வெற்பொருநூல்
வலைக்கே மதுகைப் புலிதுவக் குண்டென்ன மாதொருத்தி
தலைக்கேறு தொங்கலிற் கட்டுண்டு நெஞ்சந் தளர்ந்தனைநன்
னிலைக்கே முலகினு மொப்பின்றி நின்ற நெடுந்தகையே. 6

## கிழவோன் வேட்கைதாங்கற்கருமை சாற்றல்

50. திடத்தாய் சிலத கலைசைத் தியாகர் செழுஞ்சிலம்பின்
இடத்தா ரணங்கென் னறிவாம் பயமுற்று மேந்துதனக்
குடத்தான் முகந்துண்ண வற்றிய நானந்தக் கொம்பர்கடி
தடத்தாடி னாலன்றி யாறாதென் காமத் தழலிதுவே. 7

## பாங்கன் தன்மனத்தழுங்கல்

51. மைந்தோதி வில்லர் கலைசைத் தியாகர் வளர்சடைமேல்
இந்தோவில் லோநுத றந்தோமின் னோவிடை யென்னுயிர்க்குப்
பந்தோவெற் போதன நந்தோ மிடறென்று பன்னிப்பன்னி
அந்தோ புலம்புறு மாலண்ணன் மொய்ம்பெங் கடங்கியதே. 8

## பாங்கன் தலைவனோடழுங்கல்

52. ஆளா வெனைக்கொள் கலைசைத் தியாகரை யாதரியார்
தோளாச் சுரைபுரை காதிற் புகாதசொற் போலவென்சொல்
கேளா தொழித்தது மென்றீ வினைப்பய ன்கேழின்மன்னா
தாளார மேருத் தளர்ந்தா லெவரிங்குத் தாங்குவரே. 9

---

*49. மதுகை - வலி. தொங்கல் - மாலை.*

*50. திடத்து ஆய். பயம் - நீர்.*

*51. மைந்து ஒகி - வலியையுடைய மலை. தந்து - நூல். உயிரென்றது தலைவியை.*

*52. தோளாச் சுரை - தொளையிடாத சுரைக்காய் கேழ் இல் - ஒப்பில்லாத.*

## பாங்கன் எவ்விடத் தெவ்வியற்றென்றல்.

53. நாலாறு நல்குங் கலைசைத் தியாகர்நன் னாட்டொழுகும்
பாலாறு வந்திழி நந்திவெற் போகொல்லிப் பண்பயின்று
காலாறு சுற்றுங் கமலவைப் போவிடங் காவிலுன்பால்
மாலாறு வைத்தவட் கென்வண்ண மன்ன வழங்கெனக்கே. 10

## தலைவன் அஃது இவ்விடத் திவ்வியற்றென்றல்.

54. சரமே விழிகுஞ் சரமே தடமுலை தண்சதபத்
திரமே முகஞ்சித் திரமே திருவுரு சேர்ந்தவர்க்கு
வரமே யளிக்குங் கலசத் தியாகர்வண் கோவிருந்த
புரமே யிடமுன்னை நாளென்னை வாழ்வித்த பொற்றொடிக்கே. 11

## இறைவனைத் தேற்றல்.

55. சற்றிடம் யான்சென் றனையாளைக் கண்டுனைச் சார்தருவேன்
நற்றிடங் கொண்டிங்கு நிற்றிமன் னாமுன்னை நாட்பாவை
உற்றிடஞ் சென்று கலைசைத் தியாக ருரைத்தருளிச்
சொற்றிடங்கொண்டுவரல்பார்த்து நின்றவன்றொண்டரொத்தே. 12

## குறிவழிச் சேறல்.

56. ஆடுங் கொலோசுனை பாடுங் கொலோவிசை யம்மனைபந்
தாடுங் கொலோமலர் சூடுங் கொலோவகி லாண்டமுய்ய
ஆடுங் கருணைக் கலைசைத் தியாக ரசலத்தர்கொண்
டாடுஞ் சயசிங்கம் வாடும் படிசெய் தகன்மயிலே. 13

---

53. நாலாறு - நான்கு மார்க்கம்: சரியை முதலியன. காலாறு - வண்டு. மாலாறு - மயக்க வெள்ளத்தை. வண்ணம் - இயல்பு.

54. சரம் - அம்பு. சதபத்திரம் - தாமரை மலர்.

55. சற்று இடம் - சிறிதுதூரம். நல் திடம். பாவை - பாவை நாய்ச்சியார். உற்ற இடம். வன்றொண்டர் - சுந்தரமூர்த்தி நாயனார்.

56. சயசிங்கமென்றது தலைவனை.

பி - ம். ‘வாடும் படிசெய் தகன்றவரே’

## இறைவியைக் காண்டல்.

57. பிடியே நடைகைப் பிடியே யிடைகுழற் பின்னலரா
மடியே வடமும் மடியே யதிலுண்டு மைக்கணஞ்சேல்
அடியேனை யாளுங் கலைசைத் தியாகர்வெற் பண்ணல்சொன்ன
படியே தெரிசித்த லாலிவ ளேயந்தப் பைங்கொடியே. 14

## இகழ்ந்ததற் கிரங்கல்.

58. ஈட்டற மோங்கிட வேந்துநம் வேந்த ரெறிதிரைநீர்க்
கோட்டகஞ் சூழ்ந்த கலைசைத் தியாகர் குலவுதொண்டை
நாட்டணி யன்னவர் நாட்டவை நாட்டத்தை நாட்டப்பட்டால்
வாட்ட முறாரல்லர் முன்பெள் ளியதென் மதியின்மையே. 15

## தலைவனை வியத்தல்.

59. சேற்றம் புயத்தடஞ் சூழுங் கலைசைத் தியாகர்வெற்பில்
தோற்றந் தருமென் முலையாள் விழியெனுஞ் சூருடைவெங்
கூற்றங் குதித்தெதிர் பாயவஞ் சாதுபல் கூற்றுக்களால்
மாற்றந்த மந்திர மெவ்வாறு பெற்றனன் மன்னவனே. 16

## தலைவியை வியத்தல்.

60. பணியா பரணர் கலைசைத் தியாகர் பனிவரைமேல்
அணியார் சுடரிரு வேலேந் தியநம் மரசிருகண்
மணியாடு பாவையின் மேன்மைய ரேயிவர் வாய்ந்ததிருத்
தணியா ரருளென்ன வேதணிப் பாரண்ண றாபத்தையே. 17

---

57. பிடியே நடை கைப்பிடியே இடை: "இடையு நடையு மொருபிடியென்ன வெழுதுவனே" (*சீகாழிக்.* 1:4). பின்னல் அரா - தலைப்பின்னல் பாம்பு. மடி - வயிறு. வடம் - ஆலிலை; வயிற்றுக்கு உவமை. மும்மடி - மூன்று மடிப்பு. அதில் - அவ் வயிற்றில்.

58. கோட்டகம் - குளம். அணியை யன்னவரென்றது தலைவியை. நாட்டம் வை நாட்டம் - கண்களாகிய கூரிய வாள்.

59. சூர் - அச்சம். கூற்றுக்களால் - வார்த்தைகளால்.

60. பணி - பாம்பு. திருத்தணி - திருத்தணிகை. தாபம் - காம வெப்பம். தணியார், தணிப்பாரென்றது சொல்முரண்

## தலைவன்றனக்குத் தலைவிநிலை கூறல்.

61. திண்டே ருலாவு மறுகார் கலைசைத் தியாகர்வெற்பில்
தண்டே னலங்கலந் நோளாய் கலைக்கடற் சாரமுற்றும்
உண்டே வருமொர் முகில்பார்த் தொருவல்லி யொல்கிநிற்கக்
கண்டேன்பண் டேர்தரு வண்டேறி வாழுமக் காவகத்தே. 18

## தலைவன் சேறல்.

62. வலித்தென்னை யாளுங் கலைசைத் தியாகர் வரைப்புறத்தே
சலித்தலின் றென்மனத் தாமரை யேந்திய தாண்மலர்மேற்
கலித்திடு கிண்கிணிக் கொத்துஞ் சிலம்புங் கலின்கலினென்
றொலித்திடத்தான்றனிபாடுங்கொலோவென்னுயிர்த்துணையே. 19

## தலைவன் தலைவியைக்காண்டல்.

63. எங்களை கண்டென் கலைசைச் சிதம்பர வீசர்வெற்பில்
திங்களின் வாயெழு வெண்கதி ராலென்றன் சித்தவிடா
யுங்கடுங் காமப் பிணியுந் தணித்தென் னுயிர்தனியே
மங்கள மின்கொடி போனின்ற வாவிந்த வார்பொழிற்கே 20

## கலவியின் மகிழ்தல்.

64. பத்திக் கிரங்குங் கலைசைத் தியாகர் பனிவரைமேல்
எத்திக்குஞ் சூழ்தரு கூர்ங்கணல் லாரிவ ரீர்ங்கனிவாய்த்
தித்திக்குமட்டுத்தெவிட்டா துண்டேனுக்குச்சேரிற்கைப்பாய்த்
தத்திக் குமட்டு மருந்தாஞ் சுரருண்ணு் தண்ணமுதே. 21

---

61. முகிலென்றது தலைவனை. வல்லியென்றது தலைவியை; வல்லி - கொடி.

62. வலித்து என்னை ஆளும் - என்னைத் தடுத்தாட் கொள்ளும். இன்று - இல்லாமல்.

63. எம் களைகண் - எம்முடைய ஆதாரமாகிய, திங்களென்றது முகத்தை. வாய் - இடம், வாய். வெண்கதிரென்றது நகையை. நிலவின் கதிர் அமுதமயமாதலின், விடாயும் பிணியும் தணித்தென்றான். உயிரென்றது தலைவியை.

64. மட்டு - தேன். கைப்பாகித் தத்திக் குமட்டும்; தத்தி - வெளிப்பட்டு. மூலிகைகள் சேர்த்துண்டாக்கப்பட்டமையின் கைப்பாய்க் குமட்டும் மருந்தென்றார்; மருந்து - அமுதம்.

## புகழ்தல்.

65. எம்பாவை யேற்குங் கலைசைத் தியாக ரெடுத்து முன்னாள்
தம்பா லிருந்த கலசத்தை வேதன் றனக்குணர்ந்துன்
அம்பார மென்முலைக் கொப்பின்மை யாமென் றளித்து விட்டால்
கொம்பான நுண்ணிடை யாயினி நேரென்ன கூறுவதே. 22

## தலைவியைப் பாங்கியொடுவருகெனப் பகர்தல்.

66. தேங்கிய நீரொலி யோங்குங் கலைசைத் தியாகர்கையில்
தாங்கிய மானு முமையவ ளேந்து தனிக்கிளியும்
நீங்கியிங் கென்னெதிர் வந்தா லெனச்சென்று நீவருங்கால்
பாங்கிதன் னோடிங் கினிவர வேண்டும் பனிமொழியே. 23

## தலைவியைப் பாங்கிற் கூட்டல்.

67. சிற்பர னாரெஞ் சிதம்பர வீசர் திருக்கலைசைப்
பற்பல போதுகள் சேர்ந்துழித் தெய்வப் பரிமளஞ்சேர்
கற்பகப் போதொன்று சார்ந்தது போலக் கனங்குழையாய்
வெற்பக நீசென்று நின்னெழி லாயத்தை மேவுகவே. 24

## இதுவுமது.

68. காராருங் கண்டர் கலசத் தியாகர் கலைசைவெற்பில்
ஓராவி தன்னுட் பலபூ மலர்ந்திட் டுறநடுவண்
சீரார்செந் தாமரை யொன்றலர்ந் தென்னத் தெரியிழைநீ
மாராய நின்மங்கை மாராயந் தன்னை மருவுகவே. 25

---

65. எம் பாவை - எம்முடைய செய்யுட்களை.

பி - ம். 'நேரென்ன கூறுவனே'

67. சேர்ந்துழி - சேர்ந்த இடத்தில்; உழி - இடம்.

68. ஆவி-பொய்கை. மாராயம்-பெருஞ்சிறப்பு. மங்கைமார் ஆயம்.

## 9. பாங்கிமதியுடன்பாடு.

### ஐயமுற்றோர்தல்.

69. வளையாத சூலர் கலைசைத் தியாகர் வரையின்மலர்
களையாய்ந்தெடுத்துத்தொடைதொடுத்தோவண்டல் கார்க்குழலி
குளையாயத் தோடயர்ந் தோசிவ கங்கை குடைந்துமிக
விளையாடி யோவறி யேனிவண் மேனி மெலிந்ததுவே. 1

### ஐயந் தீர்தல்.

70. உண்டோர் புதுமண முண்டோ ரழகுண் டொழுக்கமிப்போ
துண்டோ தனங்கைத் தலுண்டோர்தொழிற்கரவுண்டொருவல்
உண்டோ ரிடநிற்ற லாதலி னாலிவ ளூற்றறிந்த
துண்டோர் மணந்தென் கலைசைத் தியாக ருயர்வெற்பிலே. 2

### பிறைதொழுகென்றல்.

71. சிலைக்கேயொப் பாமெண் புயத்தார் கலசத் தியாகர்முடித்
தலைக்கேறி யம்மை சிவகாமி நெற்றியிற் சாய்ந்துதொட்டிக்
கலைக்கேச வன்மெய்ப் புகழ்போல் விளங்குங் கதிர்ப்பிறையை
அலைக்கேதஞ் செய்குழ லாய்தொழ வேதகு மங்கைகொண்டே 3

### இதுவுமது.

72. ஆனேறு மையர் கலைசைத் தியாக ரளித்ததந்திக்
கூனேறும் வெள்ளை யொருகொம்பின் வெண்பிறைக்
கோலங்கண்டால்
தேனேறு பாணிக் கமலங்கள் கூம்பிடுஞ் செய்கையைப்போல்
தானே குவியுமிப் பாணிக் கமலமுந் தண்கொடிக்கே. 4

---

69. மலர்களை ஆய்ந்து. கார்க்குழல் இகுளை; இகுளை - தோழி. வண்டலை ஆயத்தோடு அயர்ந்தோ; வண்டல் - விளையாட்டு.

70. ஐயந்தீர்தலுக்கு ஏதுவாகிய நாற்றம், தோற்றம், ஒழுக்கம், உண்டி, செய்வினை மறைப்பு, செலவு, பயில்வு என்பவை முறையே இதிற் சொல்லப் பட்டிருக்கின்றன. மணம் - தலைவனைச் சார்ந்ததனாலுண்டாகியது.

71. சிலை - மலை. தலைக்கு - தலையில். நெற்றியைப் போல வளைந்து. கேசவன் - கேசவ முதலியார்; ஓருபகாரி. அல்லைக் கேதஞ்செய் - இருளைத் துன்புறுத்துகின்ற.

72. தந்தியென்றது விநாயகரை. கொம்பின் - கொம்பைப் போன்ற. பாணிக் கமலம் - நீரிலுள்ள தாமரை மலர், கையாகிய தாமரை மலர்.

## சுனைநயப்புரைத்தல்

73 அருளுங் கலைசைத் தியாகேசர் தம்மை யடுத்தவர்கண்
இருளினை வாங்கித் தமதருட் சோதியை யீந்தெனவுன்
பெருவிழிக் கார்கவர்ந் துன்வாயில் வெண்மை பெறத்தந்ததோ
மருவிமின் னேயங்கு நீமகிழ்ந் தாடு மலர்ச்சுனையே. 5

## சுனைவியந்துரைத்தல்.

74. நெய்யிலைச் சூலர் கலைசைத் தியாகர் நெடுங்கிரிமேல்
மெய்யினில் வேர்வு நவமா விளமுலை மீதெழுதும்
தொய்யிலுந் தான்பெற லாமெனின் யானுந் துடியிடையாய்
தையிலு மாசி தனிலுஞ்சென் றாடுவன் தண்சுனையே. 6

## தகையணங்குறுத்தல்.

75. முருக்கலர் வெண்மை கருவிளம் போது முழுச்சிவப்பா
இருக்குமல் லான்மற் றுனக்கு மவட்கு மெழிலொன்றுசீர்
பெருக்குங் கலைசைத் தியாகேசர் வெற்புறை பேரணங்கே
மருக்குயத் தாளை வரக்கண்டு நீசெல்க வாழிடமே. 7

## நடுங்கநாட்டம்.

76. பாவந் துமிக்குங் கலைசைத் தியாகர் பருப்பதத்து
வாவந் துலவையிற் குத்திற்றன் னோவம் மருங்கொதுங்கித்
தீவந் துடனணைந் தாற்போ லயிலைத் திரித்ததன்வெங்
கோவந் துகள்பட வென்றா ரொருவரெங் கோமளமே. 8

---

73. இருள் - ஆணவமலம். ஈந்தென - ஈந்தாற்போல. விழிக்கார் - கண்ணிலுள்ள கருமையை. வாயில் - உதட்டில்.

74. வேர்வும் - வேர்வையையும், நவமா - புதிதாக.

75. முருக்கலர் - முள்ளுமுருங்கையின் மலர்; என்றது உதட்டினை, கருவிளம்போது என்றது கண்களை.

76. பருப்பதத்து உவா வந்து; பருப்பதம் - மலை; உவா - யானை. உலவையில் - கொம்பினால். வேலுக்குத் தீ உவமை. கோவம் - கோபம்.

## பெட்டவாயில்பெற் றிரவுவலியுறுத்தல்.

77. கார்மாதை யாதரித் தென்று மவளுப காரத்தினால்
பார்மாதைத்தோண்மிசைத்தாங்கிமன்வாழும்பரிசினைப்போல்
சீர்மாதர் மல்குங் கலைசைத் தியாகர் சிலம்பினம
தேர்மாதி னாவியை யாஞ்சென் றிரந்திட்ட மெய்துவமே 9

## ஊர் வினாதல்.

78. தூக்கமுற் றாரிற் புதியேன் சுழன்றிந்தச் சூழலுற்றேன்
ஆக்கந் திரண்டதும் பாக்கமெங் கேசொலு மாயிழையீர்
போக்கங் கொருவுங் கலைசைத் தியாகர் பொருப்பிலென
தேக்கந் தவிர்ந்திரு நோக்கந் தெரிந்தங்க ணேகுதற்கே.

## பெயர் வினாதல்.

79. ஆராமஞ் சூழ்ந்த கலைசைத் தியாக ரசலத்துங்கள்
ஊராத ரத்தொ டுரைக்கவொண் ணாவகை யொன்றுளதேல்
கூராரும் வேற்கட் கொடியிடை யீரன்பு கூர்ந்தனிர்நும்
பேராகி லுஞ்சொல்லு வீர்சோத்தி ரானந்தம் பெற்றிடவே. 11

## வேழம் வினாதல்.

80. சேலோடு வண்டணை வாவிக் கலைசைத் தியாகர்வெற்பிற்
பாலோடு தேனித மூறுசெவ் வாய்நற் பணிமொழியீர்
மாலோடு மும்மதங் காலோட நான்சிலை வாங்கியெய்த
கோலோடு மஞ்சியிங் கேவந்த தோவொரு குஞ்சரமே. 12

---

77. கார்மாதை - வெற்றிமகளாகிய கொற்றவையை. மன் - அரசன், ஏர்மாதென்றது தலைவியை. ஆவியை - உயிர்போன்ற தோழியை. தோழிக்குக் கொற்றவை உவமை.

78. ஆக்கம் - செல்வம். பாக்கம் - பக்கத்திலுள்ள ஊர். போக்கு - குற்றம்.

79. ஆராமம் - சோலை. சோத்திரானந்தம் — சுரோத்திரானந்தம் - செவியின்பம்.

80. வண்டு - சங்கு. மால் - மயக்கம். காலோட - கால் வழியோட; கால் - வாய்க்காலுமாம். கோல் - அம்பு.

### வேங்கை வினாதல்.

81. தீங்கையெல் லாந்தவிர்த் தாளுங் கலைசைத் தியாகர்வெற்பில்
கோங்கைவென் றோங்குங் குவிமுலை யீரெரி கூர்ந்தபடை
தாங்கையிற் கொண்டுபன் மாவீட்டும் போதித் தடம்புனத்தார்
வேங்கையின் பால்வந்த தோவொரு வேங்கைதன் வீறழிந்தே 13

### கலை வினாதல்.

82. உடுக்குங் கலைகளன் றோதுங் கலையுமன் றும்பரிம்பர்
அடுக்குங் கலைசைத் தியாகேசர் வெற்பினி லாங்கொர்புள்வாய்
மடுக்குங் கலையிந்து போன்முகத் தீர்கண் மணிவலைக்குள்
படுக்குங் கலையொன்று வந்ததுண் டோவிப் பசும்புனத்தே. 14

### வன்றி வினாதல்.

83 அருவன்றி யேயு முருவன்றி யாண்பெண் ணலியுமல்லா
ஒருவன் றியாகப் பெருமான் கலைசையை யொப்புடையீர்
பெருவன் றிறலுடை யென்னம் படவுடல் பின்னம்படக்
கருவன்றி யொன்றிங்கு வந்ததுண் டோசொலுங் கற்புடனே. 15

---

*81.* தாம் கையில் கொண்டு. மா - விலங்குகளை. வீட்டும் போது - அழிக்கும்போது. புனத்தில் ஆர்ந்த. வேங்கை- ஒருவகை மரம், புலி.

*82.* உடுக்கும் கலைகள் - ஆடைகள். ஓதுங்கலை - நூல். ஓர்புள் - சகோரப்பறவை; 129. கலை இந்து - கலைகளையுடைய சந்திரன். கண்ணையும் மணியையும் உடைய வலைக்குள்ளே படுக்கும் கலை; மான். கண் - வலையின் இடைவெளி. மணி - இரும்பு உருண்டை. தான் தலைவியின் கண்வலையில் அகப்பட்டது புலப்படத் தலைவன் இங்ஙனம் கூறினான்.

*83.* வன்றிறல் - மிக்க வலி. என் அம்பு அட. கரு வன்றி - கரிய பன்றி; பன்றி வன்றி யெனவும் வழங்கும்; "தங்குறிப்பி னோருந் தலைச் சென்று கண்டக்கால், எங்குறிப்பி னாமென் றிகழ்ந்திரார் - நுங்குறிப்பின், வென்றி படர்நெடுங்கண் வேய்த்தோளீர் கூறீரோ, வன்றி படர்ந்த வழி" **தொல்**. களவு, சூ. 11, ந. மேற்.

## இடை வினாதல்

84. பிடியைத் துரந்துங் கலைசைத் தியாகர் வியன்கிரிமேல்
பிடியைக் கடந்த நடையுடை யீர்நற் பெரியதன
முடியைத் தரித்துநற் பூபாரங் கொண்டு முறைநிறுத்தும்
கொடியைக் கரந்துவைத் தீரென்ன காரணங் கூறுமினே. 16

## வழி வினாதல்.

85. எவ்வழி யுஞ்சுழன் றேங்கிக் கிடந்த வெமக்குமலத்
தெவ்வழி வித்தருள் செய்தார் கலைசைத் தியாகர்வெற்பில்
மைவழி கூந்தன் மயிலனை யீரந்தி வந்திடுமுன்
செவ்வழி யொன்றுரை யீரினி யான்மெலச் செல்வதற்கே. 17

## மொழியாமை வினாதல்.

86. காவாமற் காக்குங் கலசத் தியாகர் கலைசையன்னீர்
ஆவா வுழையுழை மேயச் சுகஞ்சுக மாரவிங்கே
ஓவா வினாவுடை யேற்கு வயாவைத் தொருகுமுதப்
பூவாய் திறந்துரை யாடா வகையென் புகன்மின்களே. 18

## யாரேயிவர் மனத்தெண்ணம் யாதெனத் தேர்தல்.

87. சிங்கியங் கண்டர் கலைசைத் தியாகர் சிலம்பகநீர்
தங்கிய வூரெது நும்பெய ரேதென்பர் தைத்தவண்டோ
டுங்கிபம்போந்த துண் டோவென்பர் வாய்திறந் தொன்றுரையா
இங்கித மென்னென்ப ராலிவ ராரெண்ணம் யாதிவர்க்கே. 19

---

84. தன முடி - கொங்கையாகிய முடி, பொன்னாலாகிய முடி. பூ பாரம் - பூவாலாகிய கனம், பூமிபாரம். கொடி - கொடிபோன்ற இடை, துவசம், பொன்முடியைத் தரித்துப் பூமியாகிய பாரத்தை ஏற்றுக்கொண்டும் துவசத்தை மறைத்த தற்குக் காரணம் யாதோ என்பது வேறுபொருள், பி-ம். ''நம்பெரிய''

85. மலத்தெவ் அழிவித்து - மலமாகிய பகையை அழியச் செய்து. செவ்வழி - செவ்விய வழி; ஒருபண்; அது மாலைக்காலத் திற்குரியது.

86. ஆவா ! இரக்கக்குறிப்பு. உழை உழை மேய - மான்கள் பக்கத்தில் மேய, சுகம் சுகம் ஆர - கிளிகள் இன்பத்தை நிறையப் பெற; ''சுகமே சுகமே இரும்'' **(அருணைக்கலம்பகம்.)** வயா - வருத்தத்தை.

87. சிங்கி - விடம். வண்டு - அம்பு. இங்கிதம் - குறிப்பு.

## எண்ணம் தெளிதல்.

88. காற்றயி னாகர் கலசத் தியாகர் கலைசைமணல்
ஊற்றம்பெனமிகும்வேட்கைகொண்டேயிவரொன்றன்பினொன்
றேற்றம தாக வினாய்நிற்ப ராலிவை யெண்ணிடுங்கால்
தேற்றம தாகு மிவள்பொருட் டேயென்றென் சிந்தனைக்கே. 20

## இருவருமுள்வழி ஒருமையிற் போதல்.

89. நம்மலந் தீர்க்குங் கலைசைச் சிதம்பர நாதர்வெற்பில்
செம்மல ரோன்பெற்ற சித்தியும் புத்தியும் சேர்ந்திருந்தாங்
கம்மது வார்பொழி லம்மட வரர்மணந் தாரவர்க்கண்
டெம்மனத் திட்டமெல் லாஞ்சொல்ல வேநல்லவேல்வையிதே 21

## கையுறையேந்திநின் றவ்வகை வினாதல்.

90. அரையொன்று நாகர் கலைசைத் தியாக ரறையருவி
நிரையொன்று குன்றத்தி லென்கைச்சிலீமுக நேர்ந்துதைப்பப்
புரையொன்று தண்பனிக் காலத்திற் றாமரை போன்றுறுதா
மரையொன்று வந்ததுண் டோமட வீருங்கள் வார்புனத்தே. 22

---

88. காற்றை உண்ணுகின்ற பாம்பை அணிந்தவர். மணல் ஊற்று அம்பென - மணலூற்றில் ஊறுகின்ற நீர்போல; "ஊற்று மணலெனத் தன்னடிக் கென்னெஞ்சுருகிடச்செய், கோற்றொடி பாகன்" (**கோடீச்சுரக்.** 402.) இவள் பொருட்டே யென்று தேற்றமதாகும்; தேற்றம் - தெளிவு.

89. சித்தியும் புத்தியும் விநாயகருடைய தேவிமார்களின் திருநாமங்கள். மனத்து இஷ்டம். ஏல்வை - காலம்.

90. அரை - இடை. அறை - முழங்குகின்ற. சிலீமுகம்-அம்பு. புரை - குற்றம். பனிக்காலத்தில் தாமரை கருகும்; "தாமரை முகங்கள் வாட்டுந் தண்பனிக் காலம்" (**நைடதம்.**) தாம் மரை ஒன்று - தாவுகின்ற மரையென்னும் மிருகம் ஒன்று.

## பாங்கி எதிர்மொழி கொடுத்தல்.

91. செஞ்சர ணன்பர்க் களிப்பார் கலைசைத் தியாகர்மகிழ்
பஞ்சரம் பொன்சொரி தண்டக நாட பனிப்புறத்தைக்
குஞ்சரத் தோடொரு குஞ்சர மஞ்சிக் குருதிபொங்க
மஞ்சர வஞ்செய் புனத்தெங் கனாவிலும் வந்திலதே. 23

## பாங்கி இறைவனை நகுதல்.

92. தேய்ந்தநுண் சிற்றிடை யாய்தென் கலைசைத் தியாகர்வெற்பில்
பாய்ந்தசிங் கேறன்னர் மாம்பத் திரமெனும் பத்திரத்தால்
காய்ந்தவ ராகமன் றோர்திண்ண னாரெய்த கைக்ககத்தான்
மாய்ந்தவ ராகத்தின் மேலாஞ் சதிரின் மறைந்ததுவே. 24

## பாங்கி மதியினில் அவரவர் மனக்கருத்துணர்தல்.

93. ஏட்டையை நீக்குங் கலைசைத் தியாகர்வெற் பேந்துதினைக்
காட்டைப் புரக்குங் கருத்தே யிவட்கின்றிக் காவலர்மா
வேட்டைக்கு வேட்ட வருமல்லர் கூட்ட விருப்பமனப்
பூட்டைத் திறந்தினி தாக்காட்டு மாலிவர் பூங்கண்களே. 25

---

91. பஞ்சரம் - செருந்திமரம்; "செருந்திபொன் சொரிதருந் திருநெல்வேலியுறை செல்வர்தாமே" (**தேவாரம்.**) தண்டகநாடு - தொண்டைநாடு. பனிப்புறத் தைக்கும் சரத்தோடு-நடுங்கும்படி தைத்த அம்போடு. குஞ்சரம்-யானை. மஞ்சு அரவம்செய்.

92. மாம்பத்திரம் எனும் பத்திரத்தால்-மாவிலை என்னும் வாளால்; பத்திரம்-இலை,வாள். காய்ந்த வராகம்-கோபித்த பன்றி. திண்ணனார்-கண்ணப்பநாயனார். ககம்-அம்பு. சதிரின்-திறமைப்பாட்டால்.

93. ஏட்டை-தளர்ச்சி. வேட்டவரும்-விரும்பியவரும்கூட்டம்-கூடுதல். பூட்டை-பூட்டினை.

## 10. பாங்கியிற் கூட்டம்

### தலைவன் உட்கோள் சாற்றல்.

94. செங்கே ழிதழிக் கலைசைத் தியாகர் சிலம்பிலுமக்
கிங்கேய் கவண்வைத் தெறிவான்சிந் தாமணி யென்பதுவும்
சங்கேந்தி மார்பின் மணியுங் கொணர்ந்து தரவும்வல்லேன்
பங்கே ருகமனை யீரென்னை யாளும் பணிவிடைக்கே. 1

### பாங்கி குலமுறை கிளத்தல்.

95. நாரங்கொள் வேணிக் கலைசைத் தியாகர்நன் னாட்டிறைவா
ஆரங்கள் வேட்டவர் நற்சுகந் தாதி யணிவரல்லாற்
பீரந் தருமலர் வேண்டு வரோநின் பெரும்பிணையல்
பாரம் பரியமன் றாற்சூட்ட லென்குறப் பைங்கொடிக்கே. 2

### தலைவன் தலைவிதன்னின் உயர்த்தல்.

96. மருப்பொதி சோலைக் கலைசைத் தியாகர் வரைமடவீர்
விருப்பொ டருண கிரிநாத ரன்று விதம்விதமாப்
பொருப்புறை வேலவர் வள்ளியொ டாடிறும் பூதுரைத்த
திருப்புகழ் கேட்டறி யீரோ விஃதென்னை செப்பியதே. 3

### பாங்கி அறியாள்போன்று வினாதல்.

97. ஆடிய பாதர் கலைசைத் தியாகர்வெற் பாடருவி
ஓடிய பைஞ்சுனைச் செங்கழு நீர்பறித் தொண்குறிஞ்சி
பாடியங் காவிற் பயிலுமின் னார்களெம் பார்த்திபனே
கோடியின் மேலுளர் யாருன துள்ளங் குழைத்தவரே. 4

---

94. கேழ்-நிறம். இதழி-கொன்றை. ஏய் கவண்-பொருந்திய கவணில். சங்கேந்தி-திருமால். மணி-கௌத்துப ரத்தினம். பங்கே ருமாகிய மனையையுடையீரென்றான், தலைமகளைத் திருமக ளாகப் பாவித்து.

95. நாரம்-நீர்; என்றது கங்கையை. ஆரங்கள் வேட்டவர்-மாலைகளை விரும்பியவர். பீரந்தருமலர் - பீர்க்கம்பூ; இது தலைவிக்கு உவமை. பாரம்பரியம்-பரம்பரைக்கு உரியது.

96. மரு-மணம். இறும்பூது-வியப்பு.

97. குறிஞ்சி-குறிஞ்சிப்பண்.

## இறையோன் இறைவிதன்மை இயம்பல்.

98. மகமேரு வில்லர் கலசத் தியாகர் வளர்கலைசைச்
சுகமே மொழிகிஞ் சுகமே யிதழா சுகம்விழிபன்
னகமே மருங்கு னகமே தனதட நன்றிகொன்றார்
அகமே குழன்முண் டகமேபொற் பாதமென் னாருயிர்க்கே. 5

## பாங்கி தலைவியருமை சாற்றல்.

99. வெள்ளாறு சூடுஞ் சிதம்பர வீசர் வியன்கலைசை
வள்ளா லெமது நகராச னீன்ற வரமயிலைத்
தெள்ளார் கலியினிற் றிங்களின் பின்வரு சீரணங்கை
எள்ளா வெளியளென் றெண்ணுதி போலு மிதயத்திலே. 6

## தலைவன் தலைவி இன்றியமையாமை இயம்பல்.

100. அரக்கவி ராம்பலஞ் செவ்வா யணங்கணி யார்கலைசை
புரக்கவல் லாரெஞ் சிதம்பர வீசர்மெய்ப் போகமென்னும்
சரக்கறை யாயின தையலை நீதமி யேற்களிக்க
இரக்கமுன் பால்வரு மேனிற்கு மாலுமி ரென்றனுக்கே. 7

## பாங்கி நின்குறை நீயே சென்றுரையென்றல்.

101. அண்டர்கொண் டாடுங் கலைசைத் தியாக ருணைவெற்பா
வண்டலர் போதக்ந் தானேசென் றாடும் வகையதுபோல்
கொண்டலங்கோதைக்குநீயேசென்றுள்ளக்குறையையெல்லாம்
கண்டறை மோவெம்ம னோரின்ன கூறல் கடவதன்றே. 8

---

98. சுகம்-கிளி. கிஞ்சுகம்-முள்ளுமுருங்கைப்பூ. ஆசுகம்-அம்பு. பன்னகம்-பாம்பு. நகம்-மலை. நன்றிகொன்றார் அகம்(மனம்) இருண்டிருக்கும். முண்டகம்-தாமரை.

99. வெள்ளாறு-கங்கை. நகராசன்-மலைக்குத் தலைவன். ஆர்கலியினில்-கடலில். அணங்கென்றது திருமகளை. எள்ளா-இகழ்ந்து.

100. அரக்கு-செந்நிறம். சரக்கறை-பொக்கிஷம்; "சரக்கறை யோவென் றனிநெஞ்சமே" திருநா. தே.

101. வண்டு:எழுவாய். அலர்போது அகம்-மலர்கின்ற மலரினுள்ளே. அறைமோ-சொல்வாயாக; மோ: முன்னிலையசை.

## பாங்கியைத் தலைவன் பழித்தல்.

102. தோட்டார்குழலிக் கென்சோர்வையெல்லாஞ் சொல்லித்தோயு மின்பம்
கூட்டா யெனவுன்னை யானிரந் தேனெதிர் கூறித்தொண்டை
நாட்டார் கலைசைத் தியாகேசர் பாதத்தை நாடிப்பற்ற
மாட்டார் நிலையையொத் தாயிது வோவுன் மதிநுட்பமே. 9

## பாங்கி பேதைமை யூட்டல்.

103. இதைக்குறு வேலிக ணாட்டவெண் கோட்டுக் கிருங்கரியை
வதைக்குந்தன் கேளிர் மறம்போல வஞ்சியும் வன்சமனை
உதைக்குஞ் சரணர் கலைசைத் தியாகரை யுன்னலர்போல்
பதைக்கும் பிறரனுக் கந்தெரி யாத பரிசினளே. 10

## காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்.

104. ஆலைக் கழனிக் கலைசைத் தியாக ரணிவரைமேல்
சோலைக் கிடைவந்து சோர்ந்துநின்றேற்குச் சுவைமொழியாம்
பாலைப் பவளவள் ளத்தூ டளித்துப் பசிதணித்த
மாலைக் குழலியை நீயறி யாளெனன் மாலுரையே. 11

## பாங்கி முன்னுறுபுணர்ச்சி முறையுறக் கூறல்.

105. தேனேறுய் யானக் கலைசைத் தியாகர் சிவகங்கைநீர்
தானேசென் றாடினன் பின்பாட வோர்துணை தான்கொள் வனோ
மீனேயு நோக்கி யுனக்கன்ன ளாயிடின் மேலும்வெற்பா
ஊனே யுயிரென்ன வொன்றாகி யொன்றுக வுங்களிலே. 12

---

102. தோடு-பூவிதழ். கூட்டாய்-கூட்டுவாய் - தொண்டை நாட்டில் ஆர்ந்த.

103. இதை-புதுக்கொல்லையில். அனுக்கம்-வருத்தம்.

104. ஆலை-கரும்பு. பவளவள்ளமென்றது வாயை. மாலுரை -மயக்கத்தால்வந்த சொல்.

105. தேன்-வண்டு. ஆடினன்-மூழ்கிய ஒருவன்.

## தலைவன் தன்னிலை சாற்றல்.

106. தென்னார் கலைசைத் தியாகேச ருக்குத் திருவசந்த
நன்னாளிற் சீதள வுற்சவஞ் செய்பவர் நல்லன்புபோல்
இந்நா ளெமக்கன்பு வைத்துப சாந்த மெதுசெய்மினும்
என்னா மின்னாகந் தழுவச்செய் யாவிடி னேந்திழையே. 13

## பாங்கி உலகியல் உரைத்தல்.

107. கட்டா ரழகியைக் காமுறி னீயுண்மை காட்டிருபத்
தெட்டா கமஞ்சொல் கலைசைத் தியாக ரிமயப்பெண்ணைத்
தொட்டானந் தத்திரு நாணணிந் தாங்கிந்தத் தொல்லுலகில்
பட்டாங்கி லுள்ள படியே வரைந்துகொள் பார்த்திபனே. 14

## தலைமகன் மறுத்தல்.

108. திருந்தார் புரந்தழற் கிட்டார் கலைசைத் தியாகர்வெற்பில்
பெருந்தாகங் கொண்டுழல் வானைக் குளந்தொட்டுப்பின்புதுநீர்
அருந்தாங் கெனச்சொன்ன வாதர வாகு மணங்கனையாய்
வருந்தாதம் மாதை மணம்புரிந் தாடென்ற வாய்மொழியே.15

## பாங்கி அஞ்சி அச்சுறுத்தல்.

109. பாங்காடும் வேட்டைக் கெமர்வரு வாரவர் பார்க்கின்வெகு
தீங்காய் விளையு நிசிவந்த தியாங்களுஞ் செல்குவமால்
பூங்காவி லேறுங் கலைசைத் தியாகர் பொருப்பிலினி
ஏங்காம லிப்புனம் விட்டைய நீயு மெழுந்தருளே. 16

---

106. தென் - தென்னை, அழகு. வசந்தநன்னாள் - வஸந்தோத்ஸவ தினம். மின் என்றது தலைவியை.

107. கட்டாரழகு - பேரழகு. இருபத்தெட்டு ஆகமங்களைச் சொல்லிய. திருநாண் - மாங்கலியம். பட்டாங்கிலுள்ளபடியே - உண்மை நூலிலுள்ளவாறே; ''மாவேத நீதி யொழுகல்பட் டாங்கிந்த வையகத்தே'' (**திருவாவடுதுறைக் கோவை, 110**); ''பட்டாங்கி லுள்ள படி'' **நல்வழி**.

108. குளந்தொட்டு - குளத்தைத் தோண்டி, அருந்து ஆங்கு. ஆடு - கூடுவாயாக.

109. ஆடும் - விளையாட்டாகச் செய்யும். செல்குவம் - செல்வேம். மால் - மேகம்.

### தலைவன் கையுறை புகழ்தல்.

110. தன்கையிற் கங்கொள் கலைசைக் கலசவு தாரன்வெற்பில்
மின்கையிற் கொண்டு தரிக்கத் தருமொரு வேடன்கண்ட
தென்கயி லாயம் வடகயி லாயத்துஞ் சீர்த்திகொண்ட
தென்கையிற் பூந்தழைக் கொப்பாந் தழையில்லை
யெங்கணுமே. 17

### பாங்கி கையுறை மறுத்தல்.

111. வானாடர் சூழுங் கலைசைத் தியாகர் வளரும்வெற்பா
கானார்நின் கைத்தழை மானாள்பொற் றேரல்குற் காணிலெமர்
ஆனா தயிர்ப்பரிக் குன்றத்த தன்றிதென் றையுறவு
நானா விதங்கொள்வ ராலிது வாங்குத னன்மையன்றே. 18

### ஆற்றா நெஞ்சினோடு அவன் புலத்தல்.

112. முருகுஞ் சுரும்புஞ் செறிகுழ லாள்பத மூன்றுமன்பு
பெருகுநம் பாலென் றிருந்தநெஞ் சேநடம் பேரன்பர்கண்
டுருகும் படிசெய் கலைசைத் தியாகரை யுன்னலர்போல்
கருகும் படிநம்மி னிம்மாந் தழைசெய் கருமமென்னே. 19

### பாங்கி ஆற்றுவித்தகற்றல்.

113. தெருள்வான் கலைசைத் தியாகேச ரன்பரிற் செப்பியம்மான்
அருள்வாங் குவனுந்தி யெல்லா யிரங்கரத் தாலடைந்த
இருள்வாங்கி யாங்கெழும் போதிங்கு வாவத் திரவலருன்
பொருள்வாங்குதன்மையின்வாங்கிக்கொள்வேனின்
கைப்பூந்தழையே. 20

---

*110.* கம் - தலை. கலசவுதாரன் - கலசத்தை அளித்தவர். மின் - தலைவி. வேடன் - கண்ணப்பநாயனார். தென் கயிலாயம் - திருக்காளத்தி மலை. தழையின் உயர்வு 128-ஆம் செய்யுளிலும் இங்ஙனமே கூறப்படும்.

*111.* அயிர்ப்பர் - சந்தேகிப்பர். இது இக்குன்றத்தது அன்று என்று. நானாவிதம் - பலவிதம்.

*112.* முருகு - வாசனை. பதம் மூன்றும் - முக்காலத்திலும். பெருகும் - பெருகுவாள். நம்மின் - நம்மைப்போல. கருமம் - தீவினை.

*113.* அன்பரின் - அன்பரைப்போல. அம்மான் - அந்தத் தலைவியொடு. உந்தி - கடலில். எல் - சூரியன், கரத்தால் இருளை வாங்கி; கரம் - கிரணம்

### மடலே பொருளென மதித்தல்.

114. அடலேற தேறுங் கலைசைத் தியாக ரருட்பணிக்காம்
உடலே றுயிரென்ன வென்னுயிர்க் கோருயி ராவிருந்தார்
கடலேய் விழிதந்த காமக் களிமயக் கத்தைநெஞ்சே
மடலே யமிர்தசஞ் சீவினி யாக்கொண்டு மாற்றுவமே. 21

### பாங்கிக்கு உலகின்மேல்வைத்து உரைத்தல்.

115. வேய்வார்மென் றோளியர் காதற் கடலிடை வீழ்ந்துமிகச்
சாய்வார் கிழிபிடித் தூர்வார் மடல்பின் றடங்குவடு
பாய்வா ரிமாசல ராசன் குமாரி பணைமுலைகள்
தோய்வார் கலைசைத் தியாகேசர் வெற்பிலஞ் சொற்கிளியே 22

### அதனைத் தன்மேல்வைத்துச் சாற்றல்.

116. காசியின் மேன்மைக் கலைசைத் தியாகர்மெய்க்
காட்சியைப்போல்
பூசிவெண் ணீறெருக் கம்பூ வணிந்தென்பு பூண்டுநல்லாய்
பாசிழை யார்வடி வார்படங் காட்டிப் பனைமடலாம்
வாசியை நாளையுன் னூர்வயி னூர்ந்து வருகுவனே. 23

### பாங்கி தலைமகளவயவத்தருமை சாற்றல்.

117. மத்தம் புனையுங் கலைசைத் தியாகர் வரைக்கரசே
நத்தஞ்சு கந்தரத் தாள்கருங் கூந்த னறையெழுதி
முத்தம் பதிந்த முறுவற்செவ் வாயின் மொழிவரைந்திச்
சித்தம் பரநடுத் தீட்டுவ ரோவந்தத் தேவருமே. 24

---

114. இருந்தார் - இருந்த தலைவியினுடைய. மடல் - பனைமடலாற்செய்த குதிரை. அமிர்த சஞ்சீவினி - மரணத்தை நீக்குவதொரு மூலிகை.

115. காதற்கடல் - காமமாகிய கடல். சாய்வார்: எழுவாய். கிழி - தலைவன்தலைவியரின் உருவமெழுதப்பட்ட படத்தை. குவடு - மலை. இமாசலராசன் - மலையரசன்.

116. பாசிழையார் - தலைவியினது. வாசியை - குதிரையை.

117. மத்தம் - ஊமத்தை. நத்து அஞ்சு கந்தரத்தாள் - சங்கு அஞ்சும் கழுத்தை உடையாள். நறை - நறுமணத்தை. பதிந்த - பதிந்தாலொத்த, இச் சித்து அம்பரம்போன்ற நடுவை; அம்பரம் - ஆகாயம்; நடு - இடை.

### தலைமகன் தன்னைத்தானே புகழ்தல்.

118. நெறித்தமெல் லோதிநல் லீரென்றன் வல்லவ நீர்மைசற்றும்
குறித்தறி யீர்திருத் தொட்டிக் கலையிற் குளிர்ந்தநிலா
எறித்தமின் வேணிச் சிதம்பர வீசர்தம் மின்னருளால்
பொறித்தபொற் பாவையு ளாவியுங் கூடப் புகுவிப்பனே. 25

### அலர்முலைப் பாங்கி அருளியல் கிளத்தல்.

119. அன்றிலம் பிள்ளையுந் தூக்கணம் புள்ளினத் தஞ்சினையும்
ஒன்றிய வெண்குரு கின்முட்டை கூட்டொடு மோங்கும்வெற்பா
மன்றினின் றாடுங் கலைசைத் தியாகரை வாழ்த்தலர்போற்
கொன்றிப் பனைமடல் கொள்ளார் குணப்பெருங் குன்றத்தரே. 26

### பாங்கி கொண்டுநிலை கூறல்.

120. எல்லாந் தெரிக்குமென் சொல்லா லினியந்த விந்திரையின்
நல்லார்புல்லாரெனினாண்பெண்ண தாய்மண்ணினண்ணிநிற்கும்
புல்லார்நல் லாரெனக் கொண்டுன் குறைமுடி பூங்கலைசை
அல்லார் மிடற்றர் சிதம்பர வீசர்வெற் பாதிபனே. 27

---

*118.* நெறித்த - நெளித்த. வல்லவநீர்மை - ஆற்றலின் இயல்பு. பொறித்த - எழுதிய.

*119.* தூக்கணம்புள் - தூக்கணங்குருவி. சினை - முட்டை. வெண் குருகு - நாரை. கூட்டொடும் கொன்று.

*120.* இந்திரையின் - திருமகளைப்போன்ற. நல்லாரென்றது தலைவியை புல்லாரெனின் - கூடாராயின். ஆண்பெண்ணதாய் - ஆண்வடிவம் பெண் வடிவமாகி; திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் ஆண்பனை பெண்பனை யானதை உட்கொண்டு கூறியது இது. புல்லாரென்றது பனைமரத்தை; ''புறக்காழனவே புல்லென மொழிப'' (**தொல்.**) நல்லார் - நல்வர். நல்லார் புல்லாரானால் புல்லாரை நல்லாராகக்கொள்க என்றது ஒருநயம்.

தலைவிஇளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.

121. கற்றில கண்கள் களவுகண் மென்முலை காண்பதற்குச்
சற்றில வாம்பலி னாம்பற் பிறந்தில தண்கலைசை
நற்றியா கேசர்நன் னாட குறுமுளை நாட்டுகொம்பர்
பற்றிடு மோவென்கொல் பேதைக் கிரந்து பகர்கின்றதே. 28

தலைவன் தலைவி வருத்தியவண்ண முரைத்தல்.

122. களியானைத் தோலர் கலசத் தியாகர் கழலிறைஞ்சும்
அளியார்க் களிக்குங் கலைசையன் னாய்சிறி யானொருசிற்
றுளியாற் சிலையின் வலிகுறைத் தாங்கன் றுனதுயிராம்
கிளியார் மொழிவிழி வேலாலென் னுள்ளங் கிழித்தனளே. 29

பாங்கி செவ்வியருமை செப்பல்.

123. வாரா ளொருவிளை யாட்டினுக் கெங்கும் வளர்த்தகிள்ளை
பாராள் கலைசைத் தியாகர்வெற் பாமதன் பார்த்துருகும்
ஏராள்பொன் னூசலி லேறாளென் னோநினைந் தெங்களையும்
சேரா ளவளுக் கடியேனெவ் வாறு தெரிவிப்பதே, 30

தலைவன் செவ்வியெளிமை செப்பல்.

124. கொப்பிடு மஞ்செவிப் பஞ்சடி யாயருள் கூர்ந்தெனையும்
கைப்பிடித் தாளுங் கலைசைத் தியாகர் கயிலைவெற்பில்
மைப்பிடி போனடை மானுக்கு நான்வந்த வாறுசற்றே
செப்பிடிற் சேர்த்துத்தன் செப்பிடு சாந்தமுன் செப்பிடுமே. 31

---

121. கண்கள் களவுகளைக் கற்றில. முலை இல. ஆம்பலின் ஆம் பல் பிறந்தில - ஆம்பலைப் போன்ற செவ்வாயில் ஆகும் பற்கள் முளைக்கவில்லை. குறுமுளை - கொடியின் குறிய முளை யானது. கொம்பர் - கொள்கொம்பை.

122. அளியார்க்கு - அன்பை உடையவர்கட்கு. சிலை - கல்

123. ஏர் - அழகு.

124. கொப்பு - காதிலிடும் ஒருவகை அணி. பஞ்சு - செம் பஞ்சுக் குழம்பு. செப்பிடின் - சொன்னால். தன்செப்பென்றது தலைவியின் நகில்களை. தன் நகில்களிலுள்ள சந்தனம் உன் நகில்களில் படும்படி தழுவிக் கொள்வாளென்பது கருத்து.

### பாங்கி என்னை மறைத்தபின் எளிதென நகுதல்.

125. நன்னறும் போது நெடுநாரு மோர்வயி னண்ணிடினும்
இன்னணி கூரப் பிணைப்பாரில் லாம லிணைந்தொன்றுமோ
பின்னக மோலிக் கலைசைத் தியாகர் பெரியவெற்பா
நின்னகத் தெண்ணமற் றென்னையல் லாம லிறைவுறுமே. 32

### அந்நகை பொறாது அவன் புலம்பல்.

126. நிழலார் மழுவர் கலைசைத் தியாகர் நெடுங்கிரிமேல்
குழலார் மொழிமட வாடந்த காமக் கொடுங்கனல்கூர்ந்
தழலாயுள் வேசறும் வேலையி னீயெனை யாற்றலின்றித்
தழலா கியநகை நெய்தனைப் பெய்தனை தாழ்குழலே. 33

### பாங்கி தலைவனைத் தேற்றல்.

127. பன்னூறங் கையகத் தெய்தினும் வாய்மைப் பயன்றருமோர்
நன்னூல் வழிச்செல்வர் போற்பலர் பாங்கியர் ஞாங்கருற்றும்
என்னூ தியச்சொல் வழியெம் பிராட்டி யிசைந்து றுமால்
பொன்னூர் கலைசைத் தியாகர்வெற் பாவுறல் புன்கணையே 34

### பாங்கி கையுறை யேற்றல்.

128. அக்கணப் பன்னெம் மாபோ னொருவன்முன் னாதரித்த
தெக்கண மாகயி லாயத்திற் றோன்றுஞ் சிறப்பதனால்
முக்கண ரெங்கள் கலைசைத் தியாகரை மோகிப்பர்போல்
இக்கண மேற்பன்மன் னாநின்கை மாந்தழை யேந்திழைக்கே.
35

---

125. பிணைப்பார் - தொடுப்பார். ஒன்றுமோ; ஓ: எதிர் மறை. பின்னகம் - சடை. மோலி - கிரீடம். நிறைவுறுமே: ஏ, எதிர்மறைப் பொருளிலும் வினாப் பொருளிலும் வந்தது.

126. நிழல் - ஒளி. வேசறும் வேலையில் - துன்புறும் சமயத் தில். தழல் - வெப்பம். நகை நெய்தன்னை-சிரிப்பாகிய நெய்யை.

127. பன்னூல் தம் கையகத்து எய்தினும், செல்வர்போல் - செல்பவரைப்போல். ஞாங்கர் - பக்கத்தில். ஊதியம் - இலாபம். புன்கண்ணை - துன்பத்தை. உறல் - அடையாதே.

128. அக் கண்ணப்பராகிய எம்மரபில் அவதரித்தவர். தெக்கணமாகயிலாயத்தில் - சீகாளத்தி மலையில். தழை, காளத்தி யில் உண்டான பெருமைபற்றி ஏற்றுக் கொள்ளுவேன்.

## கிழவோன்ஆற்றல்.

129. மந்திர ரூபர் கலைசைத் தியரகர வளரருள்போல்
தந்திர மோங்கிய பாங்கிதன் வாண்முகத் தண்மதிபார்த்
திந்திரன் வாழ்வுந் துரும்பாக வெண்ணியின் றென்னிதயம்
சந்திர னைக்கண் டுவந்த சகோரந் தனையொத்ததே. 36

## இறைவன்றனக்குக் குறைநேர்பாங்கி இறைவிக்கு அவன்குறையுணர்த்தல்.

130. கல்லாரக் கண்ணி கலசத் தியாகர் கலைசைவெற்பில்
வல்லா ரொருவர் வருவர்வந் தாலொன்றும் வாய்திறந்து
சொல்லாரென் கண்ணெதிர் நிற்பாரப் பாற்புனச் சூழல்விட்டுச்
செல்லார் தழைகளெல் லாந்தரு வாரென் செயத்தக்கதே. 37

## இறைவி அறியாள்போன்று குறியாள் கூறல்.

131. நாகந் திசைகொள் கலைசைத் தியாகரென் னாதர்நந்தி
நாகந் தனின்முனி வோர்வாழ் குகைக்கு நயந்துமத
நாகங்கை யான்மயிற் றோகை யலகிட்டு நன்னுதலாய்
நாகந் தருசெம் மணிவிளக் கேற்றிடு நாடொறுமே. 38

---

129. கண்டு உவந்த.

130. கல்லாரம் - கருங்குவளை: கண்ணி: விளி. **திருச்சிற்றம்பலக் கோவையார்**, 82-ஆம் செய்யுளின் பொருளை இப்பாடல் ஒருவாறு ஒத்துள்ளது.

131. நாகம் திசைகொள் - ஆடையாகத்திசையைக்கொண்ட; நாகம் - ஆடை. தியாகர் என்னும் நாதர், நந்திநாகம் - நந்தி மலை; நாகம் - மலை. மதநாகம் - யானை; எழுவாய். நாகம் தரு - பாம்புதந்த. ''கின்னர முரலுமணங்குடைச் சாரல், மஞ்ஞையாலு மரம்பயி லிறும்பிற், கலைபாய்ந் துதிர்த்த மலர்வீழ் புறவின், மந்தி சீக்குமாதுஞ்சு முன்றிற், செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக், களிறுதரு விறகின் கேட்கும், ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே'' (பெரும்பாண். 494 - 500) என்ற அரிய பகுதி இங்கே நினைவிற்கு வருகின்றது.

### பாங்கி இறையோற்கண்டமை பகர்தல்.

132. மைந்தானை யூருங் கலைசைத் தியாகர் வரையினிற்கூர்
அந்தானை யொண்கண்ணி யுன்மேல் விருப்பின னாகிமதம்
சிந்தானை யொன்றிங்கு வந்ததுண் டோவெனத் தேடியன்று
வந்தானை யின்றுகண் டேன்புனத் தூடென் மறைப்பதுவே.39

### பாங்கிறைத் தலைவி மறைத்தல்.

133. மன்றாட வல்ல கலைசைத் தியாகர் வரைமங்கைதீங்
கொன்றாத தொண்டைநன் னாட்டிற் றழைகைக்கொண்டுங்கொதுங்கி
நின்றார் தமைநம் புனத்தய லேகண்டு நீமதித்தல்
நன்றா விருந்த துனக்குமுன் சொற்கு நடுவின்மையே. 40

### பாங்கி என்னை மறைப்பது என்னெனத்தழால்.

134. அளிக்குங்கண் ணாளர் கலைசைத் தியாகருக் கன்பரைப்போல்
தெளிக்குமென் சொன்னயம் பார்த்துமுன் கண்ணருட்சீதவெள்ளம்
குளிக்குந் தவமுடை யேன்றனக் குண்மைக் குறிப்புணர்த்தா
தொளிக்குங் கருத்தென்னை யென்னுயி ராகிய வொண்ணுதலே. 41

### பாங்கி கையுறை புகழ்தல்.

135. மலையத் தகுவன யாரென்ன கூறினு மாதர்நல்லாய்
மலையத் தகுவன வல்லநம் மன்பர்க்கு வாய்த்தனவ
மலையத்தர் நித்தர் கலைசைத் தியாகர் மகிழ்ந்ததமிழ்
மலையத் தரும்பிட்டுத் தொட்டிந்த வார மருத்தழையே. 42

---

*132.* மைந்து ஆனை - வலியையுடைய இடபத்தை. அம் - அழகிய. தானை - ஆயுதம். மதம் சிந்துகின்ற ஆனை.

*133.* உங்கு ஒதுங்கி. நடுவின்மை - இடையில்லாமை, நடுநிலை இல்லாமை. நடுவின்மை உள்ளதென ஒருசொல் வருவிக்க.

*134.* தெளிக்கும் - தெளிவுறச்செய்யும்.

*135.* மலையத்தகுவன - அணிந்துகொள்ளத்தக்கவை. மலையத்தகுவன அல்ல - மாறுபடத்தக்கவை அல்ல. வாய்த்தன. அமலை அத்தர். தமிழ்மலையத்த - தமிழையுடைய பொதியின் மலையின்கண் உள்ளன. ஆரம் மரு தழை - மணம் பொருந்திய சந்தனத்தழை, தொட்டுமலையத்தகுவன.

## தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல்.

136. நடிக்குந் தயாளர் கலைசைத் தியாகர்பொன் னாகத்தந்தார்
முடிக்குமைம் பாலி யிறாற்றிரள் கீண்டு முருகையுரல்
அடிக்குஞ் சரம்பிடிக் கூட்டுதல் பார்த்தன் றசுரருயிர்
குடிக்குமஞ் சேயனை யானெனைப் பார்த்துக் குழைந்திடுமே.43

## மறுத்தற் கருமை மாட்டல்.

137. தீயாடு செங்கைத் தலத்தார் கலைசைத் தியாகர்வெற்பர்
ஓயாமற் றந்த தழைக்கோ ரளவில்லை பூங்கவர்க்கென்
வாயாரச் சொன்னபொய்க் குந்தொகை யின்றிந்த மட்டுமினிப்
பேயாடல் பார்க்கினும் பாரே னவரிடர் பெண்ணமுதே. 44

## தலைவன்குறிப்புவேறாக நெறிப்படக்கூறல்.

138. செப்பனை வோர்களுங் காணக் கலைசைத் தியாகவெங்கள்.
அப்பனை வேண்டி யருக்கென்பு நீறணிந் தண்ணலவன்
ஒப்பனை வல்லி யுதியன் பகைவந் துதித்திடவே
இப்பனைகொள்ளுங்கொலோவென்னவோ
பின்னுமெண்ணுவதே. 45

---

*136.* பொன்நாகத்து - மேருமலையில், ஐம்பாலி - கூந்தலை உடையாய். இறால் - தேன்அடை. முருகை - தேனை. உரல் அடிக்குஞ்சரம், சேய் அனையான்; சேய் - முருகக்கடவுள், எனைப்பார்த்துக்குழைந்திடுமே : இக்கருத்து, "புணர்துணையோ டாடும் பொறியலவ னோக்கி, இணர்ததை பூங்கான லென்னையு நோக்கி, உணர்வொழியப் போன வொலிதிரைநீர்ச் சேர்ப்பன்" (*சிலப். கானல்.*) என்னும் செய்யுளின் பொருளைத் தழுவிவந்தது.

*137.* தொகை இன்று. "நந்தா வொளியர் திருவெங்கை நாட்டி னமக்களிப்பச் சந்தா டவியு ளிறைவர்கொய் யாப்பைந் தழையுமில்லை, முந்தா வவர்க் கெதிர் நானுரை யாப்பொய்ம் மொழியுமில்லை, வந்தா லினியெனக் கில்லை பொன் னேயொரு வார்த்தையுமே" (*திருவெங்கைக்கோவை, 127*) என்னும் செய்யுளைத் தழுவிவந்தது இது.

*138.* செப்பு அனைவோர்களும். அருக்கு - எருக்கம்பூவையும். என்பையும் நீற்றையும். ஒப்பனைவல்லி - அலங்காரத்தையுடைய கொடிபோல்வாய். உதியன் பகை - சேரனுடைய விரோதம் இப்பனைகொள்ளுங்கொலோ — இந்தப் பனைமடல்களைக குதிரையாகக் கொள்வானோ

### தோழி தலைவியை முனிதல்.

139. கைப்பாகும் பேரலர் வாராது காத்துன் கருத்தின்வழி
தப்பாம னிற்பவர்க் கெம்பெரு மாட்டி தயா நிறைத்து
முப்பாழு நீக்குங் கலைசைத் தியாகரை முன்னலர்போல்
இப்பாவி சொன்னசொற் றீங்கும் பொறுத்தொழி
யென்றனையே. 46

### தலைவி பாங்கியை முனிதல்.

140. சுற்றம் பரிசனத் தன்புடை நீதுள வோன்மறையைப்
பெற்றம் பரிகொள் கலைசைத் தியாகர் பிறங்கலன்பர்
அற்றம் பரிவொடு சொற்றாய் சொனதறி யாமையென்றென்
குற்றம் பரிகரி யென்றா யெல்லாமென் குறையென்பதே. 47

### தலைவி கையுறையேற்றல்

141 ஊரு வரத்தழை கொண்டணி யாவிடி னூடிமடல்
ஊருவர் மன்னர் தழையுடுத் தாலல ரோதியிந்த
ஊருவர்ப் பாமென் கலைசைத் தியாகர்வில் லோதிநல்லாய்
ஊருவர் நீரலர் தீங்கரும் பாங்கை யுறைநமக்கே. 48

### இறைவி கையுறை ஏற்றமை பாங்கி இறைவற் குணர்த்தல்

142. அலைமேல் வருமங்கை யான்போ யளித்தலு மங்கைக்கொண்டு
தலைமேற் கொண்டேபின் கலைசைத் தியாகர் தமனியமா
மலைமேற்செங்கோடலுங்கொண்டலுங் கண்டென
வண்டழையை
முலைமே லணைத்துக் கொண் டாடிய மோகமொழிவரிதே. 49

---

139. கைப்பு ஆகும் பேர் அலர் - வெறுப்பு உண்டாதற்குக் காரணமான பெரிய பழிமொழி.

140. சுற்றம் உறவினர். பரிசனம் - ஏவல் செய்வோர். துளவோனைப் பெற்றமாகவும் மறையைப் பரியாகவும் கொண்ட; பெற்றம் - இடபம். அற்றம் - சோர்வு.

141. ஊரு வர - துடையில் பொருந்தும்படி. தழை - தழையாலாகிய உடையை. மடல் - பனைமடல்மாவை. ஊர் உவர்ப்பு ஆம் - ஊராருடைய வெறுப்பு உண்டாகும். வில் ஓதி - வில்லாகிய மேருமலை. அலர் ஊர் உவர் நீர் - பழிமொழி பாக்கின்ற உவர்ப்பு நீராகும். கையுறை நமக்குக் கரும்பாம். கையுறையைக் கொள்வேனென்பது கருத்து.

142. செங்கோடல் - செங் காந்தள்; இது கைக்கு உவமை. மேகம் கூந்தலுக்கு உவமை.

### பாங்கி தலைமகற்குக் குறியிடங் கூறல்.

143. கருப்பாலை யார்க்குங் கலைசைத் தியாகர் கயிலைவெற்பா
திருப்பாற் கடலிடை மால்கண் வளருஞ் சிறப்பதுபோல்
உருப்பாய் பளிக்கறை மேனீலக் கற்சுனை யொன்றுளதால்
விருப்பார யாங்கள் பகல்விளை யாடும் வியலிடமே. 50

### பாங்கி குறியிடத்திறைவியைக்கொண்டு சேறல்.

144. காவியப் பாக்கொள் கலைசைத் தியாகர் கனகமன்றுள்
ஓவியப் பாவையொப் பாய்சுனை மூழ்கி யுழைகிடந்த
ஆவியப் பானல்கொய் தம்மாந் தளிர்பறித் தங்ஙனமோர்
மாவியப் பார்தரு செம்மலை நோக்குவம் வாவிரைந்தே. 51

### பாங்கி தலைவியைக்குறியிடத்துய்த்து நீங்கல்.

145. திகிரிநின் றோட்குடைந் தேயுகு முத்தமுன் சீறடிக்கே
திகிரியம் பாறை யுறுத்துமிங் கேநிற்க சென்றுமுன்னான்
திகிரியந் தேரல்கு லாய்தென் கலைசைத் தியாகர்நந்தித்
திகிரியஞ் சாரல் வழிசீத் தொதுக்கித் திரும்புவனே. 52

### இறைவி இறையோனிடத் தெதிர்ப்படுதல்.

146. நந்தாத செல்வக் கலைசைத் தியாகரை நாடிமுன்னான்
சிந்தா குலமறப் பூசித்த புண்ணியந் தேம்பொழில்வாய்க்
கந்தாவ தின்றி வறியேன் றவித்திடு காலத்தென்வாய்
ஐந்தாலுங் கொள்ளவொர் தெள்ளமிர் தப்பிழம் பாய்நின்றதே.

---

143. வியல் இடம் - பரந்த இடம்.

144. காவியப்பா - காவியங்களிலுள்ள செய்யுட்களை. உழை - பக்கத்தில். ஆவி - குளம். பானல் - நீலோற்பலம். செம்மலை - சிவந்தமலை, தலைவனை.

145. திகிரி - மூங்கில். திகிரியம் பாறை - வட்டமாகிய பாறை. திகிரி அம் தேர்; திகிரி - உருளை. நந்தித்திகிரி—நந்திமலை வழிசீத்து - வழியைத் தூத்து.

146. கந்தாவதின்றி - பற்றுக்கோடில்லாமல். வாய் ஐந்து – பொறிகள் ஐந்து; "பொறிவாயி லைந்து". "கண்டுகேட்டுண்டு யிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள" (**குறள்.**) புலனியம் அமிர்தப்பிழம்பாய் நின்றது.

### புணர்ச்சியின் மகிழ்தல்

147. மாலா தரிக்குங் கலைசைத் தியாகர் வரத்தின்வரும்
பாலா றுடனொரு தேனாறு வந்தொன்று பட்டிடினும்
வேலா வலயத்தின் மேலாம் விருப்புடை யேற்களித்த
ஆலால மன்னகண் ணாளிதழ்த் தேனையொப் பாவதின்றே. 54

### புகழ்தல்.

148. தண்டக நாடர் கலைசைத் தியாகர் சராசனமாக்
கொண்டபொன் மேருவிற் றாரகை சூழ்ந்தெனக் கூர்ந்திலகும்
வண்டர ளத் தொடை சேர்முலை யீருங்கள் வாயினின்சொற்
கண்டதன் பின்னல்ல வோகண்டு நாளுங் கரைகின்றதே. 55

### தலைமகன் தலைமகளை ஆயத்துவிடுத்தல்.

149. அரணங்கள் சூழ்தென் கலைசைத் தியாகர்தம் மன்பருக்கே
சரணபத் மங்களைத் தந்தாளு மீசர் தடங்கிரிமேல்
பிரணவ மந்திரங் கட்குமுன் னாநிற்கும் பேறதுபோல்
திரணவ ரத்னமன் னாயுன தாயஞ் சிவணுகவே. 56

### பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

150. தோகாயுன் மூரற்கு நேரற்ற வாரந் துடைத்தகற்றிப்
பாகாயசொல்லிநின்மெய்க்குமங்கைக்கும்வெம்பார்வைக்குநேர்
ஆகாவ சோகரிந் தம்புய நீலங்கொய் தியான்கொணர்ந்தேன்
நீகாண் கலைசைத் தியாகேசர் நீண்முது குன்றினின்றே. 57

---

147. மால் ஆதரிக்கும் - திருமால் அன்பு செய்யும். வேலாவலயத்தின் - கடலைக்காட்டிலும். அளித்த தேனை.

148. தண்டகநாடு என்பது தொண்டை நாட்டின் பெயர்களில் ஒன்று. சராசனம் - வில். கண்டு - கற்கண்டு. கரைகின்றதென்பதற்கு வருந்துகின்றதென்பது குறிப்புப்பொருள்.

149. பிரணவம்: எழுவாய். திரள் நவரத்னம். ஆயம் - மகளிர்கூட்டம். சிவணுக - பொருந்துவாயாக.

150. அரம் - முத்துக்களை. ''வழிசீத்தொதுக்கித் திரும்புவனே'' (145) என்று முன்னர்க்கூறியதற்கேற்ப, ''ஆரந்துடைத்தகற்றி'' என்றாள். மெய்க்கு நேராகா அசோகை அரிந்தும் அம் கைக்கு நேராகா அம்புயத்தையும் பார்வைக்கு நேராகா நீலத்தையும் கொய்தும் கொணர்ந்தேன் என நிரனிறையாகக் கொள்க.

## பாங்கி தலைவியைப் பாங்கிற் கூட்டல்.

151. பாலாம் பகத்தர் கலைசைத் தியாகர் பனிவரைமேல்
பாலார் மொழிபல் பரிமளப் போது பறித்துனதைம்
பாலாரச் சூட்டுபு சித்திரித் தேனினிப் பண்புடனிப்
பாலாசி னீங்கிச்செல் வாம்நம தாயம் பயிலிடமே. 58

## பாங்கி தலைவியை நீங்கித் தலைவற்கு ஓம்படைசாற்றல்.

152. இத்திரு வின்பொருட் டேதே துழைத்தன னெங்கள்வெற்பா
அத்திறன் யாவு மறிவா யுபகரித் தாருயிர்க்கு
மத்திநின் றேற்றுங் கலைசைத் தியாகர் மகிழுமருட்
சத்தியைப் போனடு நின்றளித் தேனையுந் தாங்குகவே. 59

## பாங்கி தலைமகனை உலகியன் மேம்பட விருந்து விலக்கல்.

153. வள்ளித்தண் கந்த மதுவும் வலைப்பட்ட மான்றசையும்
தெள்ளித் திரட்டிய செந்தினை மாவையுந் தித்திக்கநீர்
அள்ளிப் புசித்தெம் பழங்குடிற் றங்கி யணைந்தவிராத்
தள்ளிப்பின் னேகுங் கலைசைத் தியாகர் தனிநகர்க்கே, 60

## விருந்திறை விரும்பல்.

154. நனைப்போ தணியு நறுங்குழ லீர்தம்மை நாடிநெஞ்சில்
நினைப்போர்க் கருளுங் கலைசைத் தியாகர் நெடுங்கிரிமேல்
தினைப்போ னகமு மறியூ னுணவுந் தெரிந்தளித்தால்
வினைப்போக மன்றந்த மெய்ப்போக மாகும்
விருந்தினர்க்கே. 61

---

151. பால அம்பகத்தர்-நெற்றிக்கண்ணை உடையவர். பாலார்மொழி-பாலைப்போன்ற சொற்களைஉடையாய். உனது ஐம்பால் ஆர. சித்திரித்தேன்-அலங்கரித்தேன். இப்பால் ஆசின் நீங்கி-இவ்விடத்தை விரைவில் விட்டுநீங்கி.

152. உழைத்தனன்-வருந்தி முயன்றேன். மத்தி-நடு. ஏற்றும்-முத்தியின்பத்தைப்பெறுவிக்கும்; ''முத்தியென் னப்படு மங்கையைச் சேர முயல்பவரும், சத்தியென்னப்படு மீச னருளன்றிச் சார்தலுண்டோ, சுத்திபெற்றார்தொழும் சொன்னத் தியாகர் துறைசைவெற்பிற், சித்திர தீபத் துயிர்ப்பாங்கியாற்சுகஞ் சேருதுமே'' (**திருவாவடு துறைக் கோவை, 80.**) என்ற செய்யுளிலும் பாங்கிக்கு அருட் சத்தியை உவமை கூறியிருக்கின்றனர்.

153. வள்ளித்தண் கந்தம் - வள்ளிக்கிழங்கு.

154. நனைப்போது - தேனையுடைய மலர்; மொட்டறா மலருமாம். தினைப்போனகம் - தினையாற் செய்த உணவு. மெய்ப்போகம் - முத்தியின்பம்.

## 11. பகற்குறி.

### கிழவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கல்.

155. வெள்ளைவண் டூர்செய்க் கலைசைத் தியாகரை மேவலர்போல்
வள்ளையை மோதுங்கண் ணாயன்பர் சேய்மையர் வாரியிலேழ்
கிள்ளையந் தேரினன் வீழ்ந்தொளித் தான்மதி கீண்டெனக்கே
கொள்ளைவெம் மாலை யெழுப்பவிம் மாலை குறுகியதே. 1

### பாங்கி புலம்பல்.

156. சடைநெடு மோலிக் கலைசைத் தியாகர் சயிலத்தென்னை
உடையவள் சோரவிம் மாலையம் போதிங் குறவருவித்
திடையற வின்றிர வித்தேர் விரைந்திழுத் தேகுதலால்
கடையி லரிசி வடவையின் வேவக் கடவதுவே. 2

### தலைவன் நீடத் தலைவி வருந்தல்.

157. தென்மாலை யுண்ணும் பணியார் கலைசைத் தியாகர்வெற்பில்
பன்மாலை கொண்டுநற் பண்ணைமின் னார்வந்தெம் பாலுறுமுன்
என்மாலை வேலொடும் வந்தில ரென்னல மேய்ந்துண்டுநென்
னன்மாலை தேர்க்கொரு காலோ னுடன்சென்ற நல்லவரே. 3

---

155. வண்டு - சங்கு. செய் - வயல். வள்ளை - வள்ளைக் கொடிபோன்றகாது. ஏழ்கிள்ளை - ஏழுகுதிரைகள். மதி - புத்தியை மாலை எழுப்ப - மயக்கத்தை உண்டாக்க.

156. என்னை உடையவளென்றது, தலைவியை கடையில் அரிசி - கடையெழுத்து இல்லாத அரிசி; அரி - குதிரை. கடையிலுள்ள அரிசி வடவைக்கனலில் வேவக் கடவதென்று இதில் தோற்றுவது ஒருநயம்.

157. தென்மாலை - தென்றற்காற்றை. பன்மாலை - பல வரிசை. பண்ணைமின்னார் - விளையாட்டு மகளிர். என் - என்ன காரணம். நென்னல் மாலை. தேர்க்கு ஒருகாலோன் - சூரியன்; கால் - சக்கரம். தலைவன் மாலைக்காலத்தில் சூரியன் அஸ்தமிக்கும்போது பிரிந்தானென்பது கருத்து.

## தலைவியைப் பாங்கி கழறல்

158. திருவாளர் வாழுங் கலைசைத் தியாகர்நற் றேசத்தையை
மருவார் குழலி யிரண்டா முருபின் மதித்திடனீ
அருவான கோவெங்கும் போய்வரு மாறில்லை யம்புவிமேல்
உருவான கோவெங்கும் போய்வரு மாலொவ்
வொருதொழிற்கே. 4

## தலைவி முன்னிலைப்புறமொழி மொழிதல்.

159. பொன்னொன் றிலாத வறியரைப் போலுறும் புன்மையல்லால்
மன்னொன்று மாறு மறக்கிலென் னாநல்ல மார்க்கமதா
முன்னொன்று கூறிக் கலைசைத் தியாகரை முன்னலர்போல்
பின்னொன் றுரைத்திடுந் தன்மையர்க் கேதென்று பேசுவதே. 5

## தலைவி பாங்கியொடு புலம்பல்.

160. தோயும் பொழுது முலைத்தடந் தோய்தலில் லாவிடத்தும்
ஏயும் குளிர்பனி நீருஞ்செந் தீயு மெனச்சுகமும்
காயும் பரிவையும் காட்டுவர் செம்பொற் கனங்குழையாய்
ஆயுங் கலைகொள் கலைசைத் தியாக ரசலத்தரே. 6

---

*158.* திருவாளர் - செல்வர். தேசத்து ஐயை; ஐயை - தலைவனை. இரண்டாமுருபு: ஐ. அருவான கோ - அருபமான ஆகாசம், உருவான கோ வென்றது கண்ணுக்குப்புலப்படும் தலைவனுருவத்தை.

*159.* மன் ஒன்றும் ஆறு மறக்கில் என் ஆம் - தலைவன் நம்மைப் பொருந்தும் வழியைமறந்தால் என்ன ஆகுமோ, ''அப்பற்ற செய்யிற் பசுங்கூ ழென நெஞ் சயர்வதொன்றே ஒப்பற்ற மன்ன ரொருவிலென் னாமுயர் வான்றுறைசை, எப்பற்று மற்றவர் காண்மாசி லாமணி யீசர்வெற்பிற், செப்பற்ற முற்றவர் போலுரைப் பாருள்ளந் தேர்கிலமே'' (**திருவாவடுதுறைக் கோவை, 165**) என்னும் செய்யுளிலும் இத்தகைய கருத்தே அமைந்துள்ளது.

*160.* சுகத்தையும், பரிவையும்; பரிவு - துன்பம். தோயும் பொழுது பனிநீரெனச் சுகத்தையும், தோய்தலில்லாவிடத்துத் தீயெனப் பரிவையும் காட்டுவரென நிரனிறையாகக் கொள்க.

### தலைவியைப் பாங்கி அச்சுறுத்தல்.

161. ஏறும் புகழ்வண் கலைசைத் தியாகர்வெற் பேந்தலின்பால்
ஏறு மனத்தொ டினைதலென் னீபுள் ளினங்களின்வாய்
ஏறுந் தினைக்குரல் கண்டாலிக் காவ லினிப்புதிதாய்
ஏறு நமக்குப் புனங்காவன் மாறுமில் லேறுவமே. 7

### நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்.

162. திருமங்கை பாகர் கலைசைத் தியாகர் சிலம்பின்மலர்
ஒருமங்கை கேள்வன் மருமங்கைக் கொண்ட வுபாயமுநூல்
வருமங்கைகொண்கன்செந்நாவுறைவஞ்சமும்வாய்ப்பக் கண்டேன்
கருமங்கை கூடச்சென் றார்கள்ளங் கண்டலல் கண்டபின்னே.

### தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றல்.

163. கருநட்ட கண்டர் கலைசைத் தியாகர் கடையுகநாள்
திருநட்ட மாடுபொற் பாதங்கொள் வேதச் சிலம்பொலிபோல்
செருநட்ட வேன்மன்னர் தேர்மணி யோசை செவிப்புலனால்
மருநட்ட பூங்குழல் கேட்டரு ளுன்கண் மழைநிற்கவே. 9

### தோழி சிறைப்புறமாகச் செழிப்பறிவுறுத்தல்.

164. ஆண்டகை யாரெங் கலைசைத் தியாக ரருளினல்லாய்
ஈண்டுகை யாற்றழை கொய்யார்நம் மன்ன ரினிக்கலைமான்
மீண்டுகை யாளுந் தினைக்கு நமக்கும் விடைதந்துதீத்
தீண்டுகை யார்பின் கொடிகட்டி வாழ்வரித் தேம்புனத்தே. 10

---

161. தினைக்குரல் - தினைக்கதிரை.

162. மலரொரு மங்கைகேள்வனது மருமம் கைக்கொண்ட உபாயமும், நூல்வருமங்கை கொண்கனது நா உறை வஞ்சமு மென உரைக்க. மங்கை பாகரென்பது பிரான்மலையில் எழுந் தருளியுள்ள சிவபெருமான் திருநாமம். "கணவர்ப் பிரிந்தார் தனித்து வருந்தமின்னார், தலைமேற் கொழுந னெழுதுங் கரவினைத் தானறிந்தே, கலைமே யவளவன் வாய்த்தால் விடாளெந்தக் காலமுமே" (**திருவாவடுதுறைக்கோவை, 168**) என்னும் செய்யுளைப் பார்க்க.

163. கருநட்ட கண்டர்: "கருநட்ட கண்டனை" (**தே.**) உன்கண் மழை நிற்கத் தேர்மணியோசையைக் கேட்டருளென்க.

164. தீத் தீண்டு கையார் - வேங்கைமரம்: "மையார் தடங் கண் மயிலன்னாய் தீத்தீண்டு கையார் பிரிவித்தல் காண்" **திணைமாலை** நூற்றைம்பது, 5.

## தோழி முன்னிலைப்புறமொழி மொழிந்து இற்செறிப்புணர்த்தல்.

165. இளங்காளை யூருங் கலைசைத் தியாகர்வெற் பேறுசிகா
வளங்காள் சுகங்காண் மறக்கப் பெறீரெம்மை மன்மதன்கா
களங்காள மையன்ன சொற்குழ லாளைக் கலந்தவிறல்
விளங்காளி மொய்ம்புடை வேலா னயர்ந்து விடுக்கினுமே. 11

## பாங்கி தலைமகன் முன்னின்று இற்செறிப்புணர்த்தல்.

166. பனையை யிடங்கொள் கலைசைத் தியாகர் பரமரென்றீ
வினையையெல் லாமரிந் தாங்குநற் போது விளக்கணிகள்
தினையையெல் லாமரிந் தாரெமர் யாங்கள்செவ் வேலண்ணலே
மனையையின் றேகுவம் வண்புனங் காவற் றொழிலொழிந்தே.

## பாங்கி தலைவன்முன்னின்று இற்செறிப்புணர்த்தி ஓம்படை சாற்றல்.

167. இரும்புவி போற்றுங் கலசத் தியாக ரெழிற்கலைசைப்
பெரும்புகழ் நாட பசும்பயிர் தானிவள் பேசிடுநான்
விரும்புமோர் வேலி யருண்மாரி யென்று மிகப்பொழியும்
கரும்புய னீயத னாற்பாது காக்குங் கடனுனக்கே. 13

## தலைமகன் தஞ்சம்பெறாது நெஞ்சொடு கிளத்தல்.

168. தனியா னுகக்குங் கலைசைத் தியாகர் தடத்தினெஞ்சே
தொனியார் சகுந்தங்க ளோட்டிச்செவ் வேனலஞ் சூழல்வைகிக்
கனியா ரிதழ்மதுத் தந்திது காறுங் கலந்திருந்த
இனியார் பிரியி னினியாரைக் காண்பம்வந் திப்புனத்தே. 14

---

*165.* இளங்காளை என்றார், ஏகாதசருத்திரர்க்கும் ஈசானனுக்கும் வாகனமாயுள்ளவை முதிய காளைகளாதலின்; தக்க. 461, 580, 789—ஆம் தாழிசையுரைகளைப் பார்க்க. சிகாவளம் - மயில். சுகங்காள் - கிளிகளே. மதன்காகளம் - குயில்; அது சொல்லுக்கு உவமை. காளம்மை - கரிய மேகம்; அது குழலுக்கு உவமை; நிரனிறை.

*166.* பனையை இறைவன் இடமாகக் கொண்டதலங்கள், திருப்பனையூர், திருப்பனங்காடு, திருப்பனந்தாள் முதலியவை. கணிகள் போது விள்ள - வேங்கை மரங்கள் மலர; சோதிடர்கள் காலத்தைச் சொல்லவென்பது மற்றொரு பொருள். ஏகுவம் - அடைவோம்.

*168.* தடம் - மலை. சகுந்தம் - பறவைகள். இனிமேல் யாரைக் காண்போம்.

## 12. பகற்குறியிடையீடு.

### இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

169. சங்கதிர் வாவிக் கலைசைத் தியாகர் கழற்கண்வந்த
அங்கதிர் காமத்தன் கைவேற்கண் ணாள்கண் ணடிக்கடிகூர்
வெங்கதிர் வேல வருமாயும் வீயும் விழுந்ததினைச்
செங்கதிர் கொள்ளு மெமர்சேர்ந் துழுவர் செழும்புனமே. 1

### இறைவியைப் பாங்கி குறிவரல்விலக்கல்.

170. செருமா மதக்களி றார்க்குங் கலைசைத் தியாகர் வெற்பில்
ஒருமா மடந்தையின் றேதோ வறிகில னொப்பிலன்னை
பொருமா விழிசிவந் துள்ளங் கொதித்துப் புகையுயிர்த்தாள்
மருமா தவிப்பந்த ராடமுன் போலிங்கு வாரற்கவே. 2

### இறைமகள் ஆடிடம் நோக்கி அழிதல்.

171. எடுத்தசிற் றில்லுங் கலைசைத் தியாக ரிரசதக்குன்
றுடுத்தவொண் சாரலு மாணிக்கத் தண்சுனை யும்புனமும்
கொடுத்திடு மானந்தத் தேன்வழி யாறுங் குலாவியுலாய்
அடுத்துப் பழகிப் பிரிபவர் போலில்லை யன்னியரே. 3

### பாங்கி ஆடிடம் விடுத்துக்கொண்டு அகறல்.

172. பெண்பா லுகந்த கலைசைத் தியாகர் பிறங்கலுள்ளார்
எண்பால வெம்மைய ராளைகொண் டேகுது மித்தலைசேர்
தண்பா லயில்கொண் டொருவர்வந் தாற்றள ராதவண்ணம்
பண்பாற் பசுங்கிள்ளை காளெங்க ணீர்மை பகர்மின்களே. 4

---

169. கதிர்காமத்தன் - கதிர்காமமென்னும் தலத்தையுடைய முருகக் கடவுள். கண்ணாள்கண் ஆயும் அடிக்கடி வரும்; கண் - இடம்; ஆய் - தாய். கதிர்காமத்தன் கைவேற்கண்ணாளென்றது புகழுவமை. வீயும் - பறவைகளும்.

170. மடந்தை: விளி.

171. இரசதக்குன்று - வெள்ளிமலையாகிய கைலை. ஆனந்தத்தைக் கொடுத்திடு தேன் வழி ஆறும்.

172. எம் ஐயர் - தமையன்மார்களுடைய. இ தலைசேர் தண்—இதண் - பரண்.

### பின்னாள் நெடுந்தகை குறிவயின் நீடுசென்றிரங்கல்.

173. காவினைச் சூழ்ந்த களிமயில் காளென்ன காரணமால்
ஏவினைக் கொண்ட கலைசைத் தியாக ரிணைமலர்த்தாள்
பூவினைக் கொய்துமெய் யன்பொடு பூசிக்கும் புண்ணியர்தம்
தீவினை யற்றது போலற்ற வாவித் தினைப்புனமே. 5

### தலைமகன் வறுங்களம் நாடி மறுகல்.

174. நறுங்களம் போருக மிப்பர ணாக நயந்துநல்லம்
பெறுங்கள நாதன் கலைசைத் தியாகப் பிரானருள்போல்
உறுங்களந் தீர்த்தெம்மை யுய்வித்த மாவின் றொளித்துநிற்க
வறுங்களங் கண்டகண் காளெங்ங னாமினி வாழ்குவதே.

### தலைமகன் தலைமகள் வாழும் ஊர்நோக்கி மதிமயங்கல்.

175. நதிபொதி வேணிக் கலைசைத் தியாகர்நன் னாடனையாள்
பதியிது நோக்கியென் னாருயிர் சோர்தல் பசும்பொழில்வாய்
அதிமது ரக்கனி யுண்பானொ ரேழை யணுகற்கஞ்சி
மதிமயங் காநின்று வாயூறி யேங்கும் வகையொக்குமே. 7

## 13. இரவுக்குறி.

### இறையோன் இருட்குறி வேண்டல்.

176. சுராதிபர் போற்றுங் கலைசைத் தியாகர்த் தொழாவுயிரை
விராவிய வல்லிருள் போற்கொண்டன் மூட மிடைந்தவிருள்
சராசர முற்றும் விழுங்கிய தால்வழி தான்றடவி
இராவிருந் தெய்தினன் யான்மட வீருங்க ளிம்மனைக்கே. 1

---

173. மால் ஏவினை - திருமாலாகிய அம்பை. தீவினை அற்றதுபோலற்ற வாஇத் தினைப்புனமே : "அஞ்செழுத் தெங்குரு நாதன் றனதடி யார்க்கொழித்த, சஞ்சிதம் போலத் தினைமுற்று மாள" (திருவாவடுதுறைக்கோவை, 179); "அன்பர் குலநிலத்துக், கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப் புனமே" திருச்சிற். 143.

174. இப்பரன் நறுங்கள் அம்போருகமாக; அம்போருகம் - தாமரை. நல்லம் - விடம்; களம் - கழுத்து. உறும் கள்ளம் - மிக்க கள்ளத்தை. மா - திருமகள்.

175. சோர்தல் வாயூறியேங்கும் வகையை ஒக்கும்.

776. இரா விருந்து - இராவின்கண் விருந்தாக.

பாங்கி நெறியினது அருமை கூறல்.

177. சங்குலம் போடைக் கலைசைத் தியாகர் தரணியிற்கார்
மங்குலங் கெங்கு மடங்கல்கக் காநிற்கு மாமடங்கல்
வெங்குல வேழங் களைப்பிளந் துண்ணு மிகுந்தவிருள்
கங்குலஞ் சாதன்ப யார்வரு வாரெங் கடிநகர்க்கே. 2

தலைவன் நெறியினது எளிமை கூறல்.

178. கல்லால ரெங்கள் கலசத் தியாகர் கலைசையன்னாள்
கொல்லாமற் கொல்லு மிடைக்கே சரிக்கிடை கோளரிகள்
நில்லா வெதிர்குழற் காருக் குடையிரு ணீங்குமல்லில்
அல்லா தரவென் கழலொலிக் கஞ்சிடு மஞ்சலனே. 3

பாங்கி அவன்நாட்டணியியல் வினாதல்.

179. வெண்டலை மாலைக் கலைசைத் தியாகர் வியன்சிலம்பா
வண்டலை போதுமற் றியாதுடை யாது மலைகலனும்
கொண்டலங் காரஞ்செய் சாந்தமும் யாவை குமுகுமெனும்
தண்டலை யாதுங்க டொண்டைநன் னாட்டுறை தையலர்க்கே.

தலைவன் அவள்நாட்டணியியல் வினாதல்.

180. குழையிட்ட காதர் கலைசைத் தியாகர் குலவரைமேல்
கழையிட்ட தோளிமற் றென்னாட் டணியியல் கட்டுரைத்தென்
மழையிட்ட நின்மலை நாட்டிள மாதர் வனைகலன்பூத்
தழையிட்ட சாந்தநின் றாடிட மீதெனச் சாற்றுகவே. 5

---

177. சங்கு உலம்பு ஓடை; உலம்புதல் ஒலித்தல். மடங்கல்- இடியை. மாமடங்கல் - சிங்கம்.

178. இடைக்கேசரிக்கு - இடையாகிய சிங்கத்திற்கு. இடை- கோளரிகள் - தோற்ற சிங்கங்கள்; இடைதல் - பின்னிடுதல். நில்லா : முற்று அரவு - பாம்பு.

179. குமுகுமெனும் : "பசுமஞ்சள் குமுகுமுக்க" (**அழகர் கலம்பகம், 10.**) வண்டு அலையும் போது; போது - மலர்.

180. பூவையும், தழையையும், இட்ட சாந்தத்தையும், ஈதென்பதனைக் கலன்முதலியவற்றோடு தனித்தனியே கூட்டுக.

### தலைமகற்குப் பாங்கி தன்நாட்டணியியல் சாற்றல்.

181. ஏந்நண்ணல் வேல கலைசைத் தியாக ரிமாசலமேல்
மாந்நண் ணடையு முடையாக் குருவிந்த மாலிகையும்
காந்தண் மலர்களுஞ் சந்தனப் பூச்சுங் கலந்தணிந்தெம்
பூந்தண் ணடைமட வாரா டிடங்கணிப் பூம்பொழிலே. 6

### பாங்கி தலைமகட்குத் தலைமகன் குறையறிவுறுத்தல்.

182. ஒருகால காலர் கலைசைத் தியாக ருயர்வரைமேல்
அருகால மேகம் பொரிபோ லுடுச்சிந்த வார்த்தெழுந்தீ
ரிருகா லறுகின நால்வாயி னாம்ப விரையருந்தும்
வருகா ரிரவின் வரல்வேண் டினர்நம் மனைக்கன்பரே. 7

### நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தல்.

183. பண்ணவர் போற்றுங் கலைசைத் தியாகர் பரிசுணர்ந்தோர்
பெண்ணறி வென்பது பேதைமைத் தென்று பிரித்துரைத்தல்
திண்ணநெஞ் சேசித் திரகாயம் பாயுஞ் செறியிரவில்
கண்ணன்ன காதலர் தாம்வர லொப்பினள் காரிகையே. 8

### தலைமகள் நேர்ந்து பாங்கியோடு உரைத்தல்.

184. மெல்லிய லாய்தென் கலைசைத் தியாகர்தம் வெற்பிலங்கோர்
வல்லியங் கண்டு நடுங்கிடும் போதெதிர் வந்தெனைப்பாற்
புல்லியப் புல்லைத்தங் கைப்படைக் கூட்டிப் புரந்தவர்தாம்
எல்லி யவாவின சேற்சொல்லு மாறென்னை யின்னுமொன்றே9

---

181. மாமரத்தின் தண்ணிய தழையை ஆடையாக. குருவிந்தம் - ஒருவகை மாணிக்கம்; **திருவிளை**. மாணிக்கம் விற்ற. 38-42, பார்க்க.

182. ஆல - அசைய. ஈரிருகால் அறுகு இனம் - நான்கு கால்களையுடைய அத்தியாளியின் கூட்டம். நால்வாயின் ஆம்பல் - தொங்கிய வாயினையுடைய யானை.

183. பெண்ணறிவென்பது பேதைமைத்து: "நுண்ணுணர்வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே" (நன். சூ. 265, மயிலை. சங்கர. மேற்) சித்திரகாயம் - புலி; "கடும்புலிக ளயர்ந்துசித்ர காயமெனும் பெயர்விளக்க" **அழகர்கலம்**. 1.

184. வல்லியம் - புலியை. அப்புல்லை - அந்தப் புலியை. எல்லி அவாவினரேல் - இரவுக்குறியை விரும்பினராயின்.

### தலைமகள் நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்கு உரைத்தல்

185. சிலைவளை யாழியன் போற்றுங் கலைசைத் தியாகர்வெற்பா
மலைவளை யாநின்ற வுன்னெஞ் சுவப்ப வணங்கியங்கை
இலைவளை யாளை யிரந்திரந் தேயிர வீர்ந்தொடைசேர்
தலைவளை யாவருள் செய்யப்பெற் றேன்றவந்
தானென்னவே. 10

### பாங்கி தலைமகனைக் குறியிடத்துநிறுத்தித் தாய்துயில் அறிதல்.

186. நஞ்சாருங் கண்டர் கலைசைத் தியாகர்நன் னாடனையாய்
மஞ்சார் புனத்தினின் றாடா நமக்கு மகிழ்ச்சிதந்த
அஞ்சாயன் மென்மயி லாயங்க டேக்கி னகன்குடம்பைத்
துஞ்சாத வண்ணங்கைக் குன்றொன் றுரிஞ்சிச் சுலாய்வருமே.

### பாங்கி தலைமகட்குத் தலைமகன் வரவறிவுறுத்தல்.

187. குயிலே யனையசொற் கோமள மேவெண் குரைகடன்மேற்
றுயிலேறு கொண்ட கலைசைத் தியாகர் சுடர்க்கிரிமேல்
மயிலேறு கந்தர்வந் தாலெனக் கங்குனம் மாமனைக்கே
அயிலேந்து நம்மன்பர் வந்தார்தந் தார்பொம்ம லம்மலரே. 12

### பாங்கி தலைமகளைக் குறியிடத்துக் கொண்டுசேறல்.

188. விரலாழி வின்மணித் தீபங் கொடுநம்மை மேவியன்பர்
வரலா லெதிர்கொளப் போதுகம் வரமங்கை மாளிகைகள்
நிரலார் கலைசைத் தியாகேசர் வெற்பினி னீலமஞ்ஞை
முரலாறு காலிசைத் தாலாட்டக் கண்டுயின் மொய்பொழிற்கே.

---

185. சிலை வளை ஆழியன் - வில்லையும் சங்கத்தையும் சக்கரத்தையும் உடைய திருமால். மலைவு அளையா நின்ற. இலை வளையாளை - இலைவடிவமாக உறுப்பு அமைக்கப்பட்ட வளையையுடைய தலைவியை. தலைவளையா - தலைவணங்கி.

186. ஆயம் - கூட்டம். கைக்குன்று - யானை.

187. வெண்கடல் மேல் துயிலுகின்ற திருமாலாகிய இடபத்தைக் கொண்ட; ஏறு - இடபம். பொம்மல் - பொலிவு.

188. விரன் மோதிரத்திலுள்ள ஒளியையுடைய மணியாகிய தீபத்தைக்கொண்டு. மங்கை: விளி. ஆறுகால் - வண்டு. இசையால் தாலாட்ட. ஆறுகால் தாலாட்ட மஞ்ஞை கண்துயில்; மஞ்ஞை - மயில்.

பாங்கி தலைமகளைக் குறியிடத்து உய்த்து நீங்கல்.

189. தெள்ளம் பணிசெஞ் சடையார் கலைசைத் தியாகர்வெற்பில்
வள்ளம் பெறுமுலை யாயுன்கண் வாயின் வளங்கவர்ந்து
விள்ளம் புயமென்று மாம்பலென் றும்பெயர் வேறுகொண்ட
கள்ளஞ் செறிமல ரெல்லாங்கொய் தேவந்து காட்டுவனே. 14

தலைமகன் தலைமகளைக் குறியிடத்து எதிர்ப்படுதல்.

190. இலக்கண மாடக் கலைசைத் தியாகர்மற் றிவ்விரவை
வலக்கண் விழித்துப் பகலாக்கச் சற்று மதித்தனரோ
சலக்கணின் கோயிற் கதவந் திறந்ததெத் தந்திரமென்
அலக்கண் டவிரமுன் வந்துநிற் கின்றவின் பாகரமே. 15

தலைமகள் ஆற்றினதருமை நினைந்திரங்கல்.

191. இடங்க ரநேகஞ் செறியாறு நீந்தி யியங்கரிய
இடங்கர வாமிரு கங்கட்கஞ் சாதன்ப வெண்கணர்க்கோர்
இடங்கரன் றீந்த கலைசைத் தியாக ரிறும்பிலென்னில்
இடங்கர வேலொடு வந்ததெவ் வாறிவ் விரவிடையே. 16

தலைமகன் தலைவியைத் தேற்றல்.

192. மட்டிட்ட கோதை கலைசைத் தியாகர் வரையகத்துன்
திட்டிக் குடைந்த சமனண்பு கொள்ளவென் றிண்ணியவேல்
ஒட்டிக் கிடந்த வுரிமையி னால்விலங் குள்ளவெல்லாம்
எட்டிக் காக்கவென் வேலொளி மேய்ந்த திருவினையே. 17

---

*189.* தெள் அம்பு அணி; அம்பு - நீர். வள்ளம் - கிண்ணம். கள்ளம் - கபடம், கள்ளாகிய நீர். 197, பார்க்க.

*190.* வலக்கண் - சூரியன். சலக்கண் - நீரிலே உள்ள; நீரிலே உள்ள நின்கோயிலென்றது தாமரையை; தலைமகளைத் திருமகளாகப் பாவித்துக் கூறியபடி. இன்பாகரமே - இன்பத்திற்கு இருப்பிடமாக உள்ளாய்.

*191.* இடங்கர் - முதலை. இயங்க அரிய இடத்தையும். கரவு ஆம் மிருகங்கட்கு. எண்கண்ணர்க்கு - பிரமதேவர்க்கு. இடங்கர் அன்று ஈந்த - கலசத்தை அக்காலத்திற்கொடுத்த. என் இல்லிடத்திற்கு. கர வேலொடு; கரம் - கை.

*192.* மட்டிட்ட கோதை: விளி. திட்டிக்கு - கண்களுக்கு. சமன் - யமன், வேலை ஒட்டி. காக்க - மறைய.

### புணர்ச்சியின் மகிழ்தல்.

193. எல்லாரும் போற்றும் கலைசைத் தியாகரை யெய்துமன்பர்
எல்லாஞ்சிவமென் றுகண்டுண்ணல்போலுண்ணவிங்கிவண்மெய்
எல்லா மமிழ்திற் சமைத் தநல் காரண னென்னுடலம்
எல்லாஞ்செந் நாவுடை வாயாக வென்கொ லியற்றிலனே. 18

### புகழ்தல்.

194 அடியார்க் கருளுஞ் சிதம்பர வீச ரணிதிருவெண்
பொடியா ரிருக்குந் திருக்கோ விருந்த புரவரைமேல்
வெடியார் மலர்க்குழ லாய்வனந் திற்றவ மேவிடினும்
கொடியா ருனதிடைக் கொப்பாவ தில்லைக் குணம்படைத்தே.

### தலைமகனைத் தலைமகள் குறிவரல் விலக்கல்.

195. கதிரார் கணிச்சிக் கலைசைத் தியாகர் கனவரைச்சூர்
அதிராத் திரிதரு மல்லாம லன்ப வடல்வயமா
வெதிராத் திரியும் வெதிர்வேர்க் கவலை விசும்பிலிருள்
வதிராத் திரியில் வினையேன் பொருட்டினி வாரற்கவே. 20

### தலைமகன் தலைமகளை இல்வயின் விடுத்தல்.

196. வெம்போகி பூண்ட கலைசைத் தியாகர் வியன்வரைப்பூங்
கொம்போ திடுகிடை யீர்கைத் தளிரிற் குளவிகுற்றா
தும்போ தகஞ்செல்லு மொண்பளிங் கிற்றலத் தூடுபயத்
தம்போ ருகமுறல் போற்பஞ்சி யூட்டு மடிகள்வைத்தே. 21

---

*193.* உண்ணல் - அநுபவித்தல். யான் உண்ண நல்கிய ஆரணன்; ஆரணன் - பிரமதேவன்.

*194.* வெடிஆர் - வெடித்தல் ஆர்ந்த; வெடித்தல் - மலர்தல்; "அந்தி வெடிமுல்லை" (**தனிப்.**) கொடியார் - பூங்கொடி, கொடியவர்.

*195.* சூர் - தெய்வங்கள். வெதிரா - கோபம்கொண்டு; வெதிர்த்தல் - கோபங்கொள்ளல். வெதிர்வேர்க்கவலை - மூங்கில் களின் வேர்களையுடைய பிளவுபட்டவழி. இருள்வதி - இருள் தங்கியிருக்கின்ற.

*196.* போகி - பாம்பு. பூங்கொம்பு ஓது - பூங்கொம்பை உவமையாகச் சொல்லப்பெற்ற. குளவி குற்றாது - காட்டு மல்லிகைப் பூவைப் பறியாமல். உம்போது அகம் செல்லும் - உமக்குரிய தாமரைப்பூவாகிய வீட்டை அடைமின். பளிங்குத் தலத்தூடு செல்லுமெ‌ன இயைக்க. தஞ்சை. 163-ஆம் செய்யுளைப் பார்க்க.

## பாங்கி தலைமகளை யெய்திக் கையுறை காட்டல்.

197. செவ்வாய் தனக்குநின் றிங்கள் முகத்திற்குந் தெவ்வெனலாம்
இவ்வாம்பல் பங்கயங் கொய்துவந் தேனஞ்ச லெவ்விருளும்
ஒவ்வாத கார்க்குழற் சேற்குங்கண் டாய்தைய லூட்புகுந்தென்
வெவ்வாசு தீர்க்குங் கலைசைத் தியாகர் வெளிக்குன்றிலே. 22

## பாங்கி தலைமகளை இற்கொண்டகறல்.

198. கயந்தந்த தெவ்வலர் கங்குற் களைந்தனங் காண்பயந்து
பயந்தந்த வள்கண் விழித்தின் றதட்டிப் பயந்தருமுன்
இயந்தந்த வோசைக் கலைசைச் சிதம்பர வீசர்வெற்பில்
நயந்தந்த செல்விநின் பூங்கோயிற் கொல்லை நடந்தருளே. 23

## பாங்கி தலைமகனைப் பின்சென்று வரவு விலக்கல்.

199. அறவாணர் வாழுங் கலைசைத் தியாகர்வெற் பாரமகில்
மறவா ளமர்குறைத் தாரழற் கூட்ட வரும்புகையோ
டுறவா ரிருளி லொருநீ தனிவர லூங்கிரவில்
திறவாக் கதவ மொருநூ றணங்கின் றிருமனைக்கே. 24

## தலைமகன் மயங்கல்.

200. அப்பேறு சென்னிக் கலைசைத் தியாக ரசலமின்னே
செப்பேறு கொங்கையு நானும் புணர்ந்தின்பத் தேனருந்தும்
இப்பேறு கண்டு மதுரக் கனியுணு மேல்வையிலோர்
கைப்பேறு காஞ்சிரங் காயிட்ட தென்னக் கழறினையே. 25

---

197. தையல்: விளி. வெளிக்குன்று - வெள்ளிக்குன்று.

198. கயம் - ஆழமான நீர்நிலை. தெவ் - பகைமை. பயந்து- பெற்று. பயம் தந்தவள் - பாலை அளித்த தாய். பயம் தருமுன் - அச்சத்தைத் தருவதற்கு முன். பயந்தந்தவள் அதட்டி: ''அனை வேங்கையினதட்ட'' (**அழகர்கலம்.**) இயம் - வாத்தியம். நயம் - இன்பம். பூங்கோயில் - பூவாகிய கோயில்.

199. மறவாளால். ஊட்ட - ஊட்டுதலால், உறவு ஆர். வரல் - வாராதே. நூறுகதவமென்றது நூறிதழ்களை; ''சத பத்திரத்தாள்'' (206) என்பர்பின்; திருமனை - தாமரைமலர்; நூற்றிதழ்த்தாமரைமலரில் இருக்கும் திருமகளாக நினைந்து தலைமகளைக்கூறியபடி; **திருச்சிற்**. 206-ம் செய்யுளைப் பார்க்க.

200. ஏல்வை - காலம். காஞ்சிரங்காய் - எட்டிக்காயை.

### தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தல்.

201. ஓங்குங் கலைசைத் தியாகேசர்க் கன்பில ருள்ளிருள்போல்
வீங்குங் கனையிரு ணிசெல் வதற்கு விதிர்விதிர்த்தே
ஏங்கு மிவளுய்ய நின்னூர்புக் குன்னெழின் மாளிகைமுன்
தூங்கு மணியொலி கேட்பிக்க வேண்டுந் துணைமன்னனே. 26

### திருமகட் புணர்ந்தவன் சேறல்.

202. சரியாங் கறிந்தெம் பதிக்கே குதலெளி தஞ்செழுத்துச்
சரியார்க் கரியர் கலைசைத் தியாகர் தடவரைக்கே
சரியானை மத்தகம் பற்றிடுங் கங்குலிற் றையலங்கைச்
சரியார்ந்த செம்மணி மின்னேவெய் யோற்குச் சரிநிற்குமே.27

## 14. இரவுக்குறி யிடையீடு.

### இறைவிக்கு இருளை இறைவரவுணர்த்தல்.

203. செய்யா மொழியர் கலைசைத் தியாகர் சிலம்பில்வளைக்
கையா யிஃதென்ன காரண மோநறுங் கான்மலர்க்கை
தையா ரணியத் தயனின்ற புன்னைத் தருவிலன்னம்
மையா மினிமுற்றுங் கண்டுயி லாதல மந்தனவே. 1

### தான்குறிமருண்டமை தலைவிஅவட்குரைத்தல்.

204. நானோர் குறியினை நங்கோன் குறியென்று நாடிச்சென்று
கானோவ நின்றுறு புள்ளொலி கேட்டுக் கலைசையிலெம்
மானோர் சிதம்பர மாதே வனைவணங் காரின்வினை
தானோ விதுவென்று நொந்துவந் தேன்பின்னைத் தாழ்குழலே.

---

201. விதிர்விதிர்த்து - நடுநடுங்கி. மணி - ஆராய்ச்சிமணி; ''வாயிற் கடைமணி நடுநா நடுங்க'' (சிலப். 20:53); ''ஆடுங் கடைமணி நாவசை யாமல்'' ஒட்டக்கூத்தர் வாக்கு.

202. சரி - வழி. அஞ்செழுத்தை உச்சரியாதவர்களுக்கு. கேசரி - சிங்கம். கைச்சரி ஆர்ந்த - கைவளையில் பொருந்திய. செம்மணிமின்னே - செம்மணியின் ஒளியே. சரிநிற்கும் - ஒப்பாகும்.

203. செய்யா மொழி - வேதம்; ''செய்யா மொழிக்கும்'' (திருவள்ளுவ மாலை.) கான்மலர்க் கைதை ஆரணியத்து - வாசனை உள்ள மலர்களையுடைய தாழங்காட்டில். மை யாமினி முற்றும் - கருமையையுடைய இராத்திரி எல்லாம். புன்னை மரத்தில் அன்னமிருத்தல்: ''கல்னியம் புன்னை மேலன்னங்காள்'' யா. வி. சூ. 60, மேற்.

204. கால் நோவ, கலைசையில் எம்மான். சிதம்பரமா தேவனை - சிதம்பரேசரை.

## பாங்கி தலைமகன் தீங்கெடுத்தியம்பல்.

205. வேயோ வெறும்பசுந் தோளாய் கலைசையுண் மேவிமனத்
தூயோர் பரசுஞ் சிதம்பர விசர் றொழாதவர்போல்
நீயோகை யின்றி நெடுமூச் செறிய நிகழ்த் துமந்தத்
தீயோர் துணிந்துனக் கையுற வாங்குறி செய்தனரே. 3

## தலைமகன் புலந்துபோதல்.

206. விழுத்தவஞ் செய்சத பத்திரத் தாள்வெளி மேவுமென்றே
முழுத்தமந் தன்னிற் கலைசைத் தியாகர் முளரியந்தாள்
வழுத்தல்செய் யாதவர் தீவினை போல வளைத்தெனைநீ
இழுத்தலைத்தாய்நெஞ்சமேயென்சொல்வேனிந்த
வேழைமைக்கே. 4

## புலர்ந்தபின் வறுங்களந் தலைவிகண்டிரங்கல்.

207. கங்காள வேடர் கலைசைத் தியாகர் கழித்தமுண்ட
கங்கா ளலம்புசங் கங்காள் கடற்கரைக் கானற்புன்னா
கங்காளெங் காவலர் யான்வந்து போனபின் காதலுருக்
கங்காண வந்தன ரோவுண்மை சொன்மின்கள் கங்குலிலே. 5

## இதுவுமது.

208. திருவார் கலைசைத் தியாகேச ரைத்தரி சித்தவர்போற்
குருவா லரும்பு நகைமுத்தங் காட்டிப்பொன் கூர்பவள
உருவாய் மலர்ந்துகொங் கையேந்திப் பாசடை யோதியணி
தருவாலைப் புன்னைநல் லாய்மகிழ்ந் தாயுன் றலைவர்க்
கண்டே. 6

---

205. மேவித் தொழாதவரென இயைக்க. நெடுமூச்செறியக் குறிசெய்தனர்.

206. சதபத்திரத்தாள் - தாமரைமலரிலுள்ள திருமகள் போன்ற தலைவி. தமம் - இருட்டு வளைத்து - தடுத்து. ஏழைமை - அறியாமை.

207. கங்காளம் - முழுவெலும்பு. முண்டகங்காள்-தாழைகளே புன்னாகங்காள் - புன்னைகளே. காதல் உருக்கம் - காதலாலுண் டாகிய உருக்கத்தை.

208. குரு வால் அரும்பு - வெள்ளொளியை யுடைய அரும் பாகிய. பாசடை ஓதி - பசிய இலையாகிய கூந்தலை. வாலை - இளையவன். புன்னை நல்லாய் - புன்னையாகிய மங்கையே.

### தலைமகள் பாங்கியொடுரைத்தல்.

209. நிறப்பது மானன நேரிழை யாயென் னெடுங்கொடிய
பிறப்பவை மாற்றுங் கலைசைத் தியாகரைப் பேணினர்போற்
சிறப்பவர் தண்டுறைச் சேர்ப்பரங் கேகுறி செய்வதற்கு
மறப்பர் கொலோமழை தான்பெய்யுங் கால மறக்கினுமே. 7

### தலைமகள்அவலம் பாங்கி தணித்தல்.

210. குன்றேவிற் கொண்ட கலைசைத் தியாகரைக் கூறலர்போல்
இன்றே னிரங்குத லேந்திழை யாயன்ப ரேழ்பரித்தேர்ப்
பொன்றேசிழந்துபொய்த்தாலும்பொய் யாரென்றும் பூண்டதள
வொன்றே றியகவி மாலை யரசுகண் டோர்ந்து கொள்ளே. 8

### இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல்.

211. செழுந்தேஞ்சிகழிகைத்திண்புயத்தீரெம்மைச்செல்லல் வெந்தீக்
கொழுந்தேற வைத்தனிர் பின்புவந் தாற்றலிர் கும்பியினீ
அழுந்தேலென் றாளுங் கலைசைத் தியாக ரடுக்கலும்மூர்க்
கெழுந்தே வரத்துணிந் தேம்பாலி யாறொன் றிருத்தியதே. 9

---

*209.* பதுமானனம் - தாமரைமலரைப் போன்ற முகத்தை யுடைய. சேர்ப்பர் - கடற்கரையையுடைய தலைவர். மழை - மேகம். மழை பெய்யும் காலத்தை மறக்கினும் மறப்பர்கொலோ வென முடிக்க.

*210.* இரங்குதல் ஏன் - இரங்குதற்குக் காரணம் யாது? பொன் - சூரியன். உண்மைக்கு ஞாயிற்றை உவமை கூறுதல் மரபு; "ஞாயிறொடு திங்க ளன்ன வாய்மையும்" (**நன். வி.** சிறப்பு. மேற்) அளவு ஒன்று ஏறிய கவி=காவி; காவிமாலை - கருங்குவளை மாலை. அரசமரம் காவிமாலையைப் பூண்டது.

*211.* செல்லலாகிய தீக்கொழுந்து; செல்லல்-துன்பம். கும்பி - பிறப்பு; "அழுந்தே னரகத் தியானென் றிருப்ப" (**திருச்சிற் 166.**) அடுக்கலிலுள்ள உம்மூர்க்கு. "உன் பதிவினவி. அங்கே வர வெண்ணி னோம்பொன்னி யாற்றினுக் கஞ்சினமே" (**திருவாவடுதுறைக்கோவை, 216**) என்று இந்நூலாசிரியர் கூறியது இங்கே ஒப்புநோக்கற்பாலது.

## இறைவிமேல் இறைவன் குறிபிழைப் பேற்றல்.

212. குறப்பேதை யர்க்குக் குலதெய்வ மாய்வந்த கோமளமான்
மறப்பேறு சித்த முடையவ ளாயினு மாதவிழாச்
சிறப்பேறு தொட்டிக் கலைவாழ் சிதம்பர தேவன்வெற்பிற்
பிறப்பே யினுமற வேனுங்கண் மங்கையைப் பெண்கொடியே 10

## தலைமகள் குறிமருண்டமை தோழி தலைமகற்குரைத்தல்

213. கொய்யு மலர்ச்சுனை மாங்கனி வீழ்தொறுங் கொற்றவநீ
செய்யுங் குறியென் றடிக்கடி பார்த்துத் திகைத்தழுங்கி
மையுண்ட கண்டர் கலைசைத் தியாகரை வாழ்த்தலர்போல்
நையும் படியெழுத் தோவென்று மீண்டன ணன்னுதலே. 11

## அவன்மொழிக்கொடுமை சென்று அவளவட்கியம்பல்.

214. வெங்கோ ளரிதிரி யாமத்தி யாம்வந்து வீயெழுப்பாப்
பைங்கோழி கூவள வுங்கறங் கச்செய்து பார்த்துநின்றே
செங்கோ கனகத் திருவே கலைசைத் தியாகர்வெற்பர்
எங்கோ விருந்த புரநோக்கிச் சென்றன மென்றனரே. 12

## என்பிழைப்பன்றென்று இறைவி நோதல்.

215. நீளுஞ் சுனைக்கய லாண்மிசைப் பாய்தொறு நேடியங்கென்
தாளுந் தளர்ந்திடச் செல்லா திறுத்தனன் றையன்மெய்யர்
நாளும் பழிச்சுங் கலைசைத் தியாகர்நன் னாடர்கொன்னே
மீளும் படிசெய் தனரென்ப ரேலென் விதியென்பதே. 13

---

*212. குலதெய்வம் : ''அழிவிலர் முயலு மார்வ மாக்கள், வழிபடு தெய்வங் கட்கண் டாங்கு,... வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே'' நற். 9 : 1-9.*

*213. எழுத்தோ - தலையெழுத்தோ; ''அளந்தென் றலையி லெழுத்தெனுங் கூழை யரும்பொருளே'' **சங்கரநயினார் கோயிலந்தாதி**, 9.*

*214. வீ - பறவைகளை. செங்கோகனகம்-செந்தாமரை மலர்*

*215. ஆண் - ஒருவகைமரம்; ''ஆண்மரக்கிளவி'' (**தொல்.** சூ. 304); ''கொங்கை யேந்திய வாண்களு மவண'', 'ஆணை லாமொரு கன்னியை மணப்ப வாவணையும்'' (**காஞ்சிப்.** நாட்டுப். 46-7.) இறுத்தனன் - தங்கினேன். தையல் : விளி. அது விதியென்பதென ஒரு சொல் வருவிக்க.*

## தாய் துஞ்சாமை.

216. சித்தாங் கலைசைத் தியாகர் நொடித்தலைச் செய்யுமந்நாட்
கொத்தார் தமோமயம் போலுமிக் கங்குற் குளிர்ந்ததடத்
தெத்தா மரையு முறங்கநம் மன்னை யிரண்டுநய
னத்தா மரைமுகி ழாவென்ன காரண நன்னுதலே. 14

## நாய் துஞ்சாமை.

217. இணங்குமன் றேயிந்தப் பெண்ணென் பிறப்பன்ப ரிங்குறமால்
வணங்குங் கலைசைச் சிதம்பர வீசரை வாழ்த்தலின்றிப்
பிணங்கும் புறமதத் தார்குரைத் தாங்கிப் பிறங்கிருள்வாய்ச்
சுணங்குக் கணங்கள் குரைத்தன்னை துஞ்சினு துஞ்சலவே. 15

## ஊர் துஞ்சாமை.

218. விண்ணேறு சோலைக் கலைசைத் தியாகர் வியன்சிலம்பின்
கண்ணேயிக் கங்குலென் கண்ணே யனையவர்க் காண்பதெங்கே
பெண்ணே குணக்கிற் புகர்தோன் றளவும் பெருங்குறிஞ்சிப்
பண்ணே யெடுத்துப் பகர்ந்துறங் காரிப் பதியவரே. 16

## காவலர் கடுகுதல்.

219. நாவலர் போற்றுங் கலைசைச் சிதம்பர நாதர்வெற்பில்
மாவல ரோட்டுநம் மன்பர்பொற் றேரொலி மாற்றுவித்தென்
கோவல ரோடவிவ் வெல்லியி லல்லியங் கோதைநல்லாய்
காவலர் கைப்பறை யோசையம் பேறுமென் காதகத்தே. 17

---

216. சித்து - அறிவு. நொடித்தல் - அழித்தல். தமோமயம் - தாமஸ குணமயம்; "தாமதத் தாமிருள் போற்குழ விக்கு" (245.) நயனத்தாமரை - கண்களாகிய தாமரைமலர்கள். முகிழா-குவியா; தூங்கவில்லை யென்றபடி.

217. இணங்குமன்றே இந்தப்பெண்ணென் பிறப்பு; குறிப்பால் தன்னை இகழ்ந்தபடி. சுணங்குக் கணங்கள் - நாய்க் கூட்டங்கள்.

218. சிலம்பின்கண்ணே - மலையிடத்தே. புகர் - சுக்கிரன். குறிஞ்சிப்பண், குறிஞ்சிநிலத்திற்கும் அந்நிலத்திற்கு உரிய சிறுபொழுதாகிய நள்ளிரவிற்கும் உரியது.

219. மாவலர் - குதிரை ஓட்டுதலில் வல்லவர். என் கோ அலர்ஓட - என் கண்களில் நீரோட; அலர் - நீர், ஓசையம்பு - ஓசையாகிய பாணம்; "ஏதிலர் மாநிதிப் பேழையொ டெய்தின ரென்னவின்றென், காதினு ளாரழற் கோல்பாய்ந்த தொத்தது தாரிகையே" (241) என்பர் பின்னும்.

## நிலவுவெளிப்படுதல்.

220 கொவ்வைகொள்வாய்ச்சிகலைசைத்தியாகர்குளிர்கண்ணதாய்க்
கவ்வைக டர்க்கு நிலவீரெண் வெள்ளைக் கலைகளினால்
இவ்வைய முற்று மடங்கிடப் போர்த்தலி னெம்மன்னரே
றவ்வைய முங்கொண்டு கோடையெவ் வாறிங்கடுத்திடுமே. 18

## கூகை குழறல்.

221. கோட்டா லமர்ந்த கலைசைத் தியாகநங் கூத்தனைவெண்
கோட்டாற் செயுங்குழை யானைத் தொழாத கொடியவர்சொற்
கோட்டாலை போல்வல்லி நாம்பெரும் பேமுறக் கூரிருள்வாய்க்
கோட்டான் மராமர மேலேறிக் கொண்டு குழறிடுமே. 19

## கோழி குரற்காட்டுதல்.

222. ஆழிப் புரிசைக் கலைசைத் தியாக ரடுக்கன்மின்னே
சூழிக் களிற்றண்ணன் மார்பணி மாணிக்கச் சோதிகண்டே
ஊழிப் பொழுது புலர்ந்ததென் றோநள் ளுறுமிரவிற்
கோழிக் குலங்கண்மன் கூவா வெழுப்புங் குறிச்சியையே. 20

## இதுவுமது.

223. செவ்வேலை யைந்துசெய் தாளுங் கலைசைத் தியாகர்வெற்பர்
கைவ்வேலை யந்த வருணோ தயமெனக் கண்டுமருண்
டிவ்வேலை யாவ விடியலென் றோவிவ் விடையிருளில்
அவ்வேலை யார்த்தெனக் கூக்குரல் காட்டிடு மாண்டலையே.21

---

220. குளிர்கண்ணதாய் - சிவபெருமானுடைய இடக்கண்ணின் உருவமாகி. கலைகள் - கிரணங்கள், ஆடைகள். கோடை - குதிரை, கோடைக்காலம். சந்திரகிரணத்தால் உலகம் மூடப்பட்டிருக்கும்பொழுது கோடை எவ்வாறு வருமென்பது ஒரு நயம்.

221. கோடு ஆல் - கிளைகளையுடைய ஆலமரத்தின்கீழ். வெண்கோடு - சங்கம். சொற்கோட்டாலை - சொல்லின் துன்பச்செயல்; ''குலதெய்வம் பண்ணுதிந்தக் கோட்டாலையென்றாள்.'' ***விறலிவிடுதூது.***

222. ஆழி வட்டம். ஊழிப்பொழுது - யுகத்தைப் போன்று நீட்டித்த இராப்பொழுது: ''ஊழிபெயர்ந் தெனக்கங்கு லொருவண்ணம் புடைபெயர'' (கம்ப, ***மிதிலைக்காட்சி. 155.***) மன் : அசைநிலை.

223. செவ்வேலை ஐந்து - செவ்விய படைப்பு முதலிய ஐந்து தொழில்களை. வெற்பரது கையிலுள்ள வேற்படையை. இவ்வேலை - இந்த வேளையை. ஆவ : இரக்கக் குறிப்பு அவ்வேலை - அந்தக்கடல். ஆண்டலை - கோழி.

## 15. வரைதல் வேட்கை.

### தலைமகளைப் பாங்கி பருவரல் வினாதல்.

224. அம்மனை யானவர் தம்முனி வுண்டுகொ லக்கலைசை
அம்மனை யாக்கொள் சிதம்பர வீச ரருளன்னநீ
அம்மனை யாடிலை யூசல் கயிறற்ற தோவறியேன்
அம்மனை யாநிற்றியென்னோசொல் லாயுன் னகங்கொண்டதே

### தலைமகள் அருமறை செவிலியறிந்தமை கூறல்.

225. அருத்தியி னீங்கிக் கலைசைத் தியாக ரசலத்தெமை
வருத்திய வன்ப குருவெளித் தோன்ற வரவுவினாய்
உருத்திகழ் தாரிடு மால்பார்த் திதிலொன் றுளதெனநம்
கருத்தின் முளைத்த வொருபுத வின்றனை கண்டனளே. 2

### தலைமகள் தலைமகன்வருந்தொழிற்கு அருமைசாற்றல்.

226. உலைவுற்ற காலன்னை ஞாளியிவ் வூர்கண் ணுறங்கினுமூர்த்
தலையுற்ற காவலர் காய்வார் மதிதனைத் தந்ததொப்பாம்
மலையுற்ற கூகையும் வாரணக் கூட்டமும் வாயடையா
தலைசைத் தியாகர் வரையன்பர் காட்சியென் கட்கரிதே. 3

---

224. அம்மனை ஆனவர் - தாய்மாருடைய. கலைசையை அழகிய மனையாகக்கொண்ட. அம்ம னையாநிற்றி.

225. அன்பரதுஉரு வெளியில்தோன்ற. மால் பார்த்து - மயக்கத்தைக் கண்டறிந்து. புதவு - இரகசியம்; "திறப்பல் வாழிவேண் டன்னைநங் கதவே" குறுந். 321.

226. அன்னையும் நாயும் இவ்வூராரும். தன்னைத் தந்ததென்றது பாற்கடலை. மலையுற்றகூகை : "குன்றக்கூகை" (குறுந். 153 : 1.) கட்கு - கண்ணுக்கு.

### தலைவி தலைமகனூரிக்குச் செல ஒருப்படுதல்.

227. ஒருப்பா டுடனென் னலனுண்ட தேர்மன்ன ரூரகம்போய்
விருப்பா லவருட னெய்துவ மோதெய்வ வேதமெனும்
திருப்பா துகையிட்ட தாளார் கலைசைத் தியாகர்வெற்பிற்
சுருப்பா குலமல்கு பூங்குழன் மாங்குயிற் றூமொழியே. 4

### பாங்கி தலைவனைப் பழித்தல்.

228. செய்யகத் தேகன்னற் சாறூர் கலைசைத் தியாகர்வெற்பர்
மெய்யகத் தேயுற்ற வின்னுயிர் போனம்மை மேவியொன்றாய்ப்
பொய்யகத் தேவைத்துப் பின்னாண் மறந்தனர்
பொன்னனையாய்
வையகத் தேயில்லை யாலவர் போலொரு வன்கணரே. 5

### தலைமகள் இயற்பட மொழிதல்.

229. சிந்திக்கு நேரும் விழிமொழிப் பாங்கி திகைத்துளங்க
சிந்திக்குருகென்கைவிட்டோடற்கேங்கல்வெண்டிங்களென்றூழ்
சிந்திக்கு நந்தினுந் தென்பூங் கலைசைத் தியாகர்வெற்பன்
சிந்திக்கு மோவொரு தீமைநம் பாற்செயல் சித்தத்திலே. 6

### தலைமகள் கனவுநலிவுஉரைத்தல்.

230. இலவா ரிதழி சிதம்பர வீச ரெழிற்கலைசைப்
புலவா ரயிலன்ப ரென்கண லூடு புகுந்துதழீஇப்
பலவா றினிதின் விளையாடப் பெற்றும் பயன்கொணலம்
கலவா திழந்தனை னைதவந் தன்னிரு கண்விழித்தே. 7

---

227. ஒருப்பாடு - ஒன்றிநிற்றல், போய் - நாம் போய். வேதமென்னும் திருப்பாதுகை : ''மறையே நமது பாதுகையாம்'' (திருவிளை. உலவாக்கிழி. 9.) சுருப்பு-வண்டு. ஆகுலம்-ஆரவாரம்.

228. கன்னற்சாறு - கருப்பஞ்சாறு. தலைவன் உயிர் : ''மனையுறை மகளிர்க் காடவ ருயிரென'' (குறுந். 135 : 2.) பொன் - திருமகள்.

229. சிந்து - கடல். இக்கு - கரும்பு. பாங்கி : விளி. உளம் கசிந்து. இகுருகு - இந்த வளையல்கள். திங்களும் சூரியனும் கெட்டு. கு நந்திலும் - பூமி அழிந்தாலும், சிந்திக்குமோ - சிந்திப்பானோ.

230. இலவு ஆர் இதழி - இலவம்பூவை ஒத்த இதழை உடையாய். என்னைத் தழுவி. பயன் - பிரயோசனம்.

### கவினழிபு உரைத்தல்.

231. சேணேறு பொன்னெயில் சூழுங் கலைசைத் தியாகர்வெற்பில்
தூணோர் புயத்தன்பர் சேர்ந்தா லகன்றவர் தூரஞ்சென்றால்
ஊணேது மற்றவர் போல்விரைந் தொன்றி யொளிவளையாய்
வீணே பசலை விருந்தாக வுண்ணுமென் மெய்யழகே. 8

### தலைமகள் தன்துயர் தலைவற்கு உணர்த்தல் வேண்டல்.

232. கொழிவான நீற்றர் கலைசைத் தியாகரைக் கூறலர்போற்
பழிவாய்ந்த வென்கட் பசலையின் கொள்ளையைப் பார்த்துநல்ல
வழிவாய்ந்த வன்பர் திருச்செவிக் கேற வகுத்தெடுத்து
மொழிவா ரொருவருண் டோமு முய்குவ மொய்குழலே. 9

### துன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லல்.

233. இவருக் கணியுங் கலைசைத் தியாகர்க் கினியவெற்பர்
தவருக்கு நேர்நுத லாய்பிரி வாரிற் றணந்தெனுள்ளத்
தெவருக்குந் தோன்றா தொளித்தென் னிடர்களெல் லாமறிவார்
அவருக் கினிப்புதி தாயென்னை யானொன் றறிவிப்பதே. 10

### அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி.

234. மங்கல மோங்குங் கலைசைத் தியாகர் மணிவரைமேற்
கொங்கலர் கூந்தற் கொடியே மதன்விடுங் கோலெனுங்கூர்
தங்கல ருக்குந் தடமுலை மாதர் தடையறவாய்
பொங்கல ரான தழற்குமென் கட்புனல் பொங்கிடுமே. 11

---

231. அகன்று - பசலை என்னைவிட்டு நீங்கி; "ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க, பாசி யற்றே பசலை காதலர், தொடுவுழித் தொடுவுழி நீங்கி, விடுவுழி விடுவுழிப் பாத்த லானே" (குறுந். 399.) பசலை மெய்யழகை உண்ணுமென இயைக்க; "பசலை யுணீஇயர் வேண்டும்... என் மாமைக் கவினே" குறுந். 27

232. கொழிவு ஆன நீறு - செழித்த நீறு; வடிக்கட்டிய நீறெனலுமாம்.

233. இ அருக்கு - இந்த எருக்கம்பூவை; இ : நெஞ்சறி சுட்டு. தவருக்கு - வில்லுக்கு. பிரிவாரில் பிரிபவரைப்போல.

234. கொங்கு அலர் - மணம் பரந்த. கோல் - பாணம், அலர் ஆன தழற்கும் - பழிமொழியான நெருப்பிற்கும். தழற்கு நீர் பொங்குமென்பது ஒரு நயம்.

### ஆறுபார்த்துற்ற அச்சக் கிளவி.

235. திருந்தா ரியந்தமிழ் தேருங் கலைசைத் தியாகர்வெற்பர்
அருந்தா ரியங்குநின் றிங்குவந் தேகு மமயத்தல்லில்
முருந்தா ரியனகை பாதமுட் டைத்தின்னன் முற்றியதேல்
மருந்தா ரியம்புவ ரென்றோபின் னேயென்மனஞ்செல்வதே. 12

### காமமிக்க கழிபடர்கிளவி.

236. அன்னின்ற கண்டர் கலைசைத் தியாகருக் கன்பிலர்போல்
முன்னின் றகன்றவர் தாம்வரு நாண்மொழி யாவிடினும்
மன்னின்றதண்பெண்ணைகாள்புன்னைகாளென்னை மையல்கொண்டே
என்னின் றழுதியென் னீருங்கள் கேண்மை யினிதினிதே. 13

### தன்னுட் கையாறெய்திடு கிளவி.

237. சொல்லரிக் காடுங் கலைசைத் தியாகர் துறைக்கடல்வாய்ப்
புல்லரி தாங்கன்னித் தாழையி னீழற் புணர்ந்தகன்ற
நல்லரிங் கேவரக் காணா விடிற்றழ் னாப்பணிட்ட
வல்லரி யாவதல் லாதுய்தி யேது மடநெஞ்சமே. 14

### தலைமகள் நெறிவிலக்குவித்தல்.

238. விழியேறு நெற்றிக் கலைசைத் தியாகர்பொன் வெற்பிற்செப்பும்
பழியேற வேறச் சுமப்பவ ராரெங்கும் பாயிருள்வாய்க்
குழியேறு மேடு தடவி வராநின்ற கொற்றவர்க்குன்
மொழியேற வேண்டு மினிநீர் வரலென்று முற்றிழையே. 15

---

235. அருந் தாரி - அரிய வழி. இயல் நகை: விளி. முள்ளைதத்து.

236. அல் நின்ற, பெண்ணைகாள் - பனைமரங்களே. என் இன்று அழுதி என்னீர். இனிதினிது: குறிப்புமொழி.

237. அரியென்றது பதஞ்சலியையும் வியாக்கிரபாதரையும்; அரி - பாம்பு, புலி. கன்னித்தாழை - பூவாத தாழை; கன்னி - இளமையுமாம், வல்லரி - தளிர். தழனாப்பணிட்ட வல்லரி: "கையுங் காலு மோய்வன வொடுங்கித், தீயுறு தளிரி னடுங்கி, யாவது மிலையான் செயற்குரி யதுவே" (குறுந். 383). "தீயுறு தளிரின் மாநிற மழுங்க" (பெருங். 1.56:115) உய்தி - பிழைத்தல். பி - ம். 'உய்தி நீயு மடநெஞ்சமே'

238. குழியும் மேடும் தடவி.

## தலைமகன் குறிவிலக்குவித்தல்.

239. மன்னுந் தமிழ்த்தென் கலைசைத் தியாகர் மலைமடந்தாய்
மின்னுங் குருமணிச் சாரற் புனத்தில் விளைந்ததினை
இன்னும் புதல்வியை யெம்மனை காக்கவங் கேவினளென்
றுன்னுங் கருத்தருக் கெல்லி வராவகை யொன்றுரையே. 16

## வெறி விலக்குவித்தல்.

240. செறியார பார முலையாய் கலைசைத் தியாகர்வெற்பர்
பிறியா மயலினை முன்னா ளெனக்கருள் பெற்றிசற்றும்
அறியாமை யின்வரைச் சூர்கோட்பட் டாளென் றன்னமுயலா
வெறியா டலையது தீர்ப்பான் வெறியற வேண்டினளே. 17

## பிறர் விலக்குவித்தல்.

241. ஆதி நடேசர் கலைசைத் தியாக ரசலத்தெண்ணில்
தூதினி தாவரக் கண்டன மன்றியுஞ் சோலையின்பால்
ஏதிலர் மாநிதிப் பேழையொ டெய்தின ரென்னவின்றென்
காதினு ளராழற் கோல்பாய்ந்த தொத்தது காரிகையே. 18

## குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்.

242. இரவோர்க் குதவுங் கலைசைத் தியாக ரிருங்குன்றத்தோர்
கரவோ திடாமலுங் கற்பழி யாமலுங் காதலித்த
உரவோன் வரைவெதிர் கொள்ளும் படியின் றுரிமையினம்
குரவோர்க் கறிவிப்ப தெவ்வா றுரைத்தி கொடியிடையே. 19

---

239. எம்மனை - தாய்; ''தீம்பா லூட்டு மெம்மனை வாராள்'' (பெருங். 1.33 : 169.) விளைந்த: முற்று. விளைந்த தினையைக் காத்தற்கு. கருத்தருக்கு - தலைவருக்கு. எல்லி - இரவில்.

240. பிரியா - பிரியாத. அனை - தாய். அது தீர்ப்பான் - அந்நோயைத் தீர்க்கும் பொருட்டு. வெறி - ஆடு. வெறியாடுதலை வேண்டினள்.

241. தூது - மணம்பேச வரும் தூதுகள். நிதிப்பேழை - பொன் வைத்த பெட்டி. என்ன என்பதன் பின்னர் அது என ஒரு சொல் வருவிக்க.

242. இரவோர் - வேண்டுபவர். கரவு - கள்ளம். ஓதிடாமல் - சொல்லாமல்.

## 16. வரைவுகடாதல்.

### வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

243. இச்சிக்கு மன்ன கலைசைத் தியாகரை யேத்தலர்போல்
இச்சிறு மைக்கிட மாயினை யென்னெனு மெம்மனைக்குப்
பச்சிள நொச்சியிற் பந்தரிட் டோமந்தப் பந்தர்முற்றும்
பச்சிமக் காலெடுத் தோடிற்றென் றாள்வல்லி
பார்த்துக்கொள்ளே. 1

### அலரறிவுறுத்தல்.

244. நளிசேர் மதிச்செஞ் சடையார் சிதம்பர நாதர்வைகும்
நளிசேர் வயற்றண் கலைசைவெற் பாவெங்க ணாயகிக்கன்
றளிசே ரலர்தொடுத் தைம்பாற் கணிந்தவுன் னாரருளால்
அளிசேர் கிலாவலர் வாயாற் றொடுப்ப ரனைவருமே. 2

### தாயறிவுறுத்தல்.

245. மதத்தானை யீருரி யங்கியங் கத்தர் மயங்குபர
மதத்தார்க் கரியர் கலைசைத் தியாகர் வயக்கியதா
மதத்தா மிருள்போற் குழலிக்கு நீயிட்ட வாசனைமான்
மதத்தாற் களவையெல் லாமறிந் தாளன்னை மன்னவனே. 3

### வெறியச்சுறுத்தல்.

246. களக்கந் தரரெங் கலைசைத் தியாகர்செங் கண்ணொளிபோல்
விளக்கஞ்செய் வேலன்ப நீதணி யாமையின் வேற்றுருக்கண்
டிளக்கங்கொண் டுள்ளத்தெம் மன்னையும் யாயுமென்
னேந்திழைபாற்
றுளக்கஞ்செய் நோய்தணிப் பான்வெறி யாட றொடங்கினரே.

---

243, மன்ன: விளி. எனும் எம் அனைக்கு - என்று வினாவிய தாய்க்கு. பச்சிமக்கால் - மேல் காற்று.

244. நளிசேர்மதி: நளி - குளிர்ச்சி. நளிசேர்வயல்: நளி— நள்ளி - நண்டு; இடைக்குறை. அளி - வண்டு. அளிசேர்கிலா அலர் - அன்பு சேராத பழிமொழியை.

245. மதத்தையுடைய யானையின். அங்கி - சட்டை. பர மதத்தார்க்கு - புறச் சமயத்தார்க்கு. தாமதத்து ஆம் இருள்போல்; தாமதம் - முக்குணங்களுள் ஒன்று. வாசனை மான்மதத்தால் - கஸ்தூரி வாசனையால்.

246. களம் - விடம்; காளமென்பதன் குறுக்கல். செங்கண்: சூரியன். தலைவியின் வேறுபாட்டு உருவத்தைக்கண்டு, உள்ளத்து இளக்கம் கொண்டு. எம்மனை - செவிலித்தாய். யாய் - நற்றாய்,

### பிறர்வரைவுணர்த்தல்.

247. நான்மே லுனக்கென்ன சொல்வலின் றேயன்ப நற்றுணிவு
தான்மேல்கொண் டாட்கொள் கலைசைத் தியாகர் சரணமலர்த்
தேன்மேவு தொண்டர் மனவண்டு போலெந் திருவை நசைஇ
மேன்மேற் கருதுகின் றாரய லாரொற்று விட்டுவிட்டே. 5

### வரைவெதிர்வுணர்த்தல்.

248. வண்டாடுஞ் சோலைக் கலைசைத் தியாகர் வரையன்பநீ
பண்டா ரணந்தெரிந் தாரொடெம் மூர்வரிற் பாய்ந்தெமர்கள்
கொண்டாடி யுன்றன் மொழிவழி யேநிற்பர் கோலமதி
கண்டாற் குமுத மலரா தொழியுங் கயமில்லையே. 6

### வரையுநாள் உணர்த்தல்.

249. வேர்கோடி கொண்ட பவக்கா டழித்தென்னை மீட்டருளும்
கார்கோணஞ் சுண்ட கலசத் தியாகர் கலைசை வெற்பா
பார்கோணை யங்கணி யேந்துபொன் மாலை பரிமளிக்கும்
ஊர்கோ ணடுவ ணுழைகொண்ட திங்க ளுழை கொண்டதே. 7

### தலைமகளறிவு தலைமகற்கு அறிவுறுத்தல்.

250. என்னான் வியப்பல் கலைசைச் சிதம்பர வீசர்வெற்பா
உன்னா னிகழ்ந்த வுறுபழி நாணி யொருங்கனையும்
பின்னாய மும்பயில் சீறூரு மன்றிப் பிறங்கறிவால்
வன்னாண் முலையவ ளென்னையுங் கூட மறைத்தனளே. 8

---

247. இன்றே - இல்லையே. நசைஇ - விரும்பி. ஒற்று - (இங்கே) தூது; "கன்னி மாண்டுழித் துன்னுபு நசைஇய, தூதுவர் போல" (பெருங். 1, 38: 64.5.) அயலார் கருதுகின்றார்.

248. ஆரணம் தெரிந்தார் - வேதியர்.

249. கார்கோள் - கடல். பார் - பார்ப்பாயாக. கோணை - வன்மை; ஐ: சாரியை. கணி - வேங்கைமரம். உழை கொண்ட . மானைக் கொண்ட. உழை கொண்டது - இடம் கொண்டது. "வேங்கையு மொள்ளிணர் விரிந்தன, நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே" அகநா. 2.

250. என் நான் வியப்பல். உன்னால் நிகழ்ந்த. வல் - சூதாடு கருவி.

## குறிபெயர்த்திடுதல்.

251. கற்றவர் வாழுங் கலைசைத் தியாகர் கனகிரிமேல்
மற்றவம் பார்க்கும் வனமுலை யாரிந்த வண்பொழில்வாய்
உற்றவர் பக்கங் களவலர் தூற்ற லொழிவிலையால்
கொற்றவ நீயினி வேறோர் குறியிடங் கொண்டருளே. 9

## பகல் வருவானை இரவு வருகென்றல்.

252. எற்பக லாளி கலைசைச் சிதம்பர வீசனந்தி
வெற்ப கலாப மயிலனை யாள்வெம் முலைத்தடத்தில்
வற்பக லாநெஞ்ச வஞ்சத் தவரெந்த வைப்புமுளார்
நற்பக லாட வரேல்வரு வாயிங்கு நள்ளிரவே. 10

## இரவுவருவானைப் பகல்வருகென்றல்.

253. ஏத்துமெய் யன்புடை யார்கண் களிப்ப வெழுந்தருளிக்
கூத்துகந் தாடுங் கலைசைத் தியாகர் குவட்டிலிருள்
சீத்து வரும்பொன் னெனச்செம் மணிக டிகழ்புனம்போய்க்
காத்து மினியுன் பொருட்டாங்கு நீயருள் காவலனே. 11

## பகலினும் இரவினும் பயின்றுவருகென்றல்.

254. வெல்லும் படைமதன் வெங்கணை யாற்றாடு மின்கலக்கம்
சொல்லுந் தரமல்ல வேயிவட் காகவென் சோரமனக்
கல்லுங் குழைத்த கலைசைத் தியாகர் கயிலைவெற்பா
எல்லுங் கனையிரு ளல்லுங் குறிக்க ணெழுந்தருளே. 10

---

251. வம்பு ஆர்க்கும் மற்ற வனமுலையார் - கச்சைக்கட்டிய அயல் மகளிர்; வம்பு - கச்சு. களவு அலர் தூற்றல் - களவுப் புணர்ச்சியைப்பற்றிய பழிமொழியைக் கூறுதல்; களவுச் செடி மலரைத்தூற்றுதலென்பது மற்றொரு பொருள்.

252. எற்பகல் ஆளி - விளக்கத்தையுடைய சூரியனை இடமாகக் கொண்டவர். நந்தி வெற்பு: தொண்டை நாட்டிலுள்ளதோர் மலை. வற்பு - வன்மை. நற்பகலில் எந்த இடத்தும் வஞ்ச நெஞ்சத்தவர் உள்ளாராயினர். ஆட வரேல் - கூடுதற்கு வராதே.

253. பொன் என - சூரியனைப்போல. காத்தும் - காப்பேம்; உன் பொருட்டுக் காத்தும். அருள் - வந்தருள்வாயாக.

254. இவளுக்காக எழுந்தருள், எல் - பகல்.

### பகலினும் இரவினும் அகலிவணென்றல்.

255. தேங்காவுங் கைதை கலசத் தியாகர் திருக்கலைசைப்
பாங்கார் கடற்சங்க முத்திட்டுப் பச்சென்று கொங்கைமுகை
தாங்காநெய் தற்பெண்ண தாயுமை போனிற்குந் தண்டுறைவா
தீங்கா வலருற லால்வர னீயிரு செவ்வியுமே. 13

### உரவோன்நாடும் ஊருங் குலனும் மரபும் புகழும் வாய்மையுங் கூறல்.

256. தென்றிருத் தொட்டிக் கலைவாழ் கலசத் தியாகரைப்போற்
றுன்றிரு நாட்டிற்கு மூர்க்குங் குலத்திற்கு மோங்குமர
பன்றிவெண் குன்றன்ன கீர்த்திக்கும் வாய்மைக்கு மாய்ந்திடுங்கால்
வென்றிகொள் வேலன்ப வேலாது நின்னடை வேற்றுமையே.

### ஆறுபார்த்துற்ற அச்சங் கூறல்.

257. சீறா டரவந் தரிக்குங் கலைசைத் தியாகர் வெற்பில்
ஏறாத சானுவி லேறி யிழிந்தெல்லி யெங்கடவப்
பேறான நீவருங் கால்வரைத் தேவொன்று பின்றொடர்ந்து
வேறா நிகழ்த்திய தேல்வல்ல ளோவுய்ய மென்கொடியே. 15

### ஆற்றாத்தன்மை ஆற்றக் கூறல்.

258. கருந்தும்பி மும்மதங் கார்போற் சொரியக் கருந்தும்பிசூழ்ந்
தருந்தும் பொருப்ப கலைசைத் தியாகருக் கன்பிலர்போல்
வருந்துங் கலங்கிக் கனன்மூச் செறிய மலரணைவிட்
டிருந்துங் கிடந்து மெழுந்துஞ் சுழன்றழு மிட்டிடையே. 16

---

255. தேம் காவும் - தேனைச்சுமந்த. கொங்கையாகிய அரும்பை; "கண்டல் வண்முகையா, மன்றநற் கொங்கை" (298) என்பர் பின்னும். நெய்தற்பெண் - வலைஞர்மகள்; உமா தேவியார் வலைஞரரசனுக்குப் பெண்ணானமையை, **திருவிளை**. வலைவீசினபடலத்தாலுணர்க. அலர் உறலால் - பழிமொழி உறுதலால். இச் செய்யுள் தாழைக்கும் உமாதேவியார்க்கும் சிலேடை.

256. மரபு அன்றி; மரபு - பரம்பரைக்கும்; அன்றி - அல்லாமல். வெண் குன்று - கைலையங்கிரி. நடைவேற்றுமை ஏலாது.

257. சானு - முழந்தாள்; இங்கே மலையின் அடிப்பக்கத் திற்குப் பெயராயிற்று, கவானென்பதைப்போல. வேறாநிகழ்த்தி யதேல் - உன்னைத் தடிந்தால்; குறிப்புமொழி.

258. கருந்தும்பி - பெரிய யானை, கருமையாகிய வண்டு. வருந்தும் - வருந்துவாள். இட்டிடை - சிறிய இடையையுடைய தலைவி.

## காவல் மிகவுரைத்தல்.

259. குயின்றாலு வாயுற வாரும் பரவைக் குரவைநஞ்சம்
அயின்றா லுகந்த கலைசைத் தியாகர்வெற் பாரரவம்
பயின்றாலுங் கானிலெங் கோமான் வரல்கைப் பறைபடுப்போர்
துயின்றாலு மன்னை யொருகணப் போதுந் துயின்றிலளே. 17

## காமமிகவுரைத்தல்.

260. வெண்ணந்தின் முத்தும் புனையரும் பாமுத்தும் வேறறியாத்
தண்ணந் துறைவ கலைசைத் தியாகரைச் சார்கிலர்போல்
வண்ணங் கருக மெலிவாள்வெங் காம வடவையந்தீ
அண்ணனின் பேரருள் வெள்ளங்கொள் ளாம லடங்கரிதே. 18

## கனவுநலிபுரைத்தல்.

261. குனித்தருள் கூத்துங் கலைசைத் தியாகர் கொடையுமெண்ணா
தனித்தத்தை நித்தமென் றெண்ணிக் கைவிட்டயராதரைப் போல்
தனித்தங்கு நீ வந்து கையாற் றழுவத் தருங்கனவை
இனித்தவள் சாக்கிர மென்றே விழித்தழு தேங்கினளே. 19

---

259. குயின் - மேகங்கள். தாலுவாய் உற - நாவினிடத்தே பொருந்த. ஆரும் - உண்ணும். பரவைக் குரவை - பரந்திருத்தலை யுடைய கடல்;குரவை - கடல். ஆல் உகந்த - ஆலமரத்தை விரும்பிய. வெற்பு - மலையில், ஆர் அரவம் பயின்று ஆலும் கானில் - வெல்லுதற்கு அரிய பாம்பு சஞ்சரித்து ஆடுகின்ற காட்டில். கோமான்:படர்க்கை முன்னிலைக்கண் வந்தது. வரல் - வருதலைத் தவிர்க,

260. புனை அரும்பாம் - புன்னையரும்பாகிய. தீ அடங்குதல் அரிது.

261. கலைசைத்தியாகர் குனித்தருள் கூத்துமென முன்னுங் கூட்டுக; இடைநிலைத்தீவகம். கொடை - அருள். தியாகரென்ற தற்கேற்பக் கொடையென்றார். ஆதர் - மூடர். சாக்கிரம் - சாக்கிராவஸ்தை.

### கவின் அழிபுரைத்தல்.

262. எனைப்பாது காக்குங் கலைசைச் சிதம்பர வீசர்வெற்பா
உனைப்பான லுள்ளு மனப்போதி லும்மைத் துருகுமவள்
தனைப்பார்த் தருளுந் தகவொன்றி லாமையிற் றையல்வணம்
சினைப்பாட லத்தின் பழம்பூவ தாகிச் சிதைகின்றதே. 20

## 17. ஒருவழித் தணத்தல்.

### தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றல்.

263. கதிக்கன்பர் தேடுங் கலசத் தியாகர் கவின்கலைசைப்
பதிக்கின்று போகிச் சிவகங்கை யாடிப் பலன்பெற்றென்றூழ்
உதிக்குமுன் னான்வரு கேன்வருங் காறு முவளைநல்லாய்
ததிக்குண்மத் தென்னச் சுழலாம லுன்கடன் றாங்குவதே. 1

### பாங்கி விலக்கல்.

264. சீர்க்குன் றனைய புயத்தீர் கலைசைத் தியாகர்வெற்பில்
வார்க்கும்ப மென்முலை யல்குற் சுனையன்றி மற்றுமும
தூர்க்குணின் றாடுந் தடமுள தேனன் றுமதுதடந்
தேர்க்குமுன் னின்று தடுக்ககி லேஞ்செல்லுஞ் செல்லுமின்றே.

---

262. பானல் - கருங்குவளை; என்றது அதைப் போன்ற கண்களை. "கண்ணிலு முளைநீ தையல் கருத்தினு முளை" (கம்ப திருவடி. 63.) இலாமையின் - உன்பால் இல்லாமையால். வண்ணம் - மாமைநிறம்; பாடலம் - பாதிரி. மாமை நிறத்திற்குப் பாதிரிப்பூ உவமை கூறப்படும்; "வேனிற் பாதிரிக் கூன்மலரன்ன, மயிரேர் பொழுகிய வங்கலுழ் மாமை" (குறுந். 147.) பாதிரிமலர் பயனின்றி வாடுதலைப் போல இவள் வண்ணமும் பயனின்றி யொழிகின்றது; பாதிரிப்பூ பயனின்றி யொழிதல், "சொல்லாமலேபெரியர் சொல்லிச்செய் வார்சிறியர், சொல்லியுஞ் செய்யார் கயவரே - நல்ல, குலாமாலை வேற்கண்ணாய் கூறுவமை நாடின், பலாமாவைப் பாதிரியைப் பார்" என்னும் பழம்பாடலா லுணரலாகும்.

263. கதிக்கு - முத்தியை அடைதற்கு. சிவகங்கை: தொட்டிக் கலையிலுள்ள ஒரு தீர்த்தம். ததிக்குள் மத்தென்ன - தயிருக்குட் சுழலும் மத்தைப்போல.

264. 50—ஆம் செய்யுளைப்பார்க்க.

### தலைவன் நீங்கல் வேண்டல்.

265. படித்திரு வாவிக் கலைசைத் தியாகர் பணியதுபோல்
முடித்திடு மோர்குறை யுண்டதற் கின்றொரு முன்வினையெற்
பிடித்திழுக் கின்றது சென்றஃ தாற்றுபு பின்னரிங்கே
அடித்திரும் பாமுனம் யான்வரு வேன்றைய லையுறலே. 3

### பாங்கி விடுத்தல்.

266. அருளோடு வாழுங் கலைசைத் தியாகருக் கன்புசெய்வார்
மருளோடு கூடலில் லாமனம் போற்செலின் மன்னவரே
இருளோடு கூடிய கண்போ லிருக்கு மிவள்பொருட்டால்
தெருளோடு பானுவி னாளைவந் தேயருள் செய்யுமினே. 4

### பாங்கி தலைவிக்கு அவன்செலவுணர்த்தல்.

267. ஒருகா ரணமுண்டு நாளொன்றின் மீள்வலென் றுண்மையொலி
பெருகா ரணமெனச் சொற்றகன் றார்கட் பிணையலைம்பாற்
செருகா ரணங்கு கலைசைத் தியாகர் திருமிடற்றைப்
பொருகா ரணவும் பொழிற்கோ விருந்த புரந்தனக்கே. 5

### தலைவி நெஞ்சொடு புலத்தல்.

268. மான்றாவு மத்தர் கலைசைத் தியாகர் வரையிலெம்மை
ஏன்றா தரவி னிளமுலைப் போக மினிதருந்தித்
தேன்றா னெனக் கென்று நீநான்வண் டென்றவர் தேடவின்று
தோன்றா தொளித்தனர் நெஞ்சேநன் றாலவர்
சொல்லுண்மையே. 6

---

265. படி - படிகள். பணி - கைங்கரியம். ஓர்குறை உண்டு - ஒருகாரியம் உண்டு. முன்வினை - முன்னேசெய்யவேண்டிய தொழில்.

266. பானுவின் - சூரியனைப்போல.

267. ஒலி பெருகு ஆரணம் - வேதம். கள் பிணையல் ஐம்பால் செருகு-தேனையுடையமாலையைக் கூந்தலிற்செருகிய. ஆரணங்கு: விளி, பொருகார் - மேகம்.

268. அத்தர் - கையையுடையவர். ஏன்று - ஏற்றுக்கொண்டு. எனக்கு என்றும் நீ தேன்தான். தலைவனுக்கு வண்டு உவமை; "மோகன வல்லிமுலை முகைகாட்டி முகமலர்ந்து, பாகம் பதிந்தி தழ்த் தேன்றர லாலன்னை பார்த்திபன்றான், ஆகங் குளிரவண் டாயுண் டுவக்கு மனுதினமே" (388) என்பர் பின்னும்; "மணமலரில் வண்டுநிகர் வன்கணர் பிரிந்தார்" அழகர்கலம்பகம்,

## சென்றோன் நீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி.

269 புற்றா டரவர் கலைசைத் தியாகர் புரியருள்போல்
வற்றாத பாலித் துறைவர்க் கியான்கங்குல் வாயுறக்கம்
அற்றா குலமுறல் கூறா யிடையி லமளிவந்து
சுற்றாத பூவணை மேற்றுணை யோடுந் துயிலன்னமே. 7

## தலைவியைப் பாங்கி ஆற்றுவித்தல்.

270. கார்வாழுங் கண்டர் கலசத் தியாகர் கலைசையன்பர்
தேர்வாய் மணியொலி கேட்பமிப் போது சிறிதுமஞ்சேல்
போர்வாண்மைக் கண்ணி யவர்தார்ப் பரிமளம் போலுமவர்
ஊர்வாவி யுற்பல வாசமிங் கேவந் துலாவியதே. 8

## பாங்கி தலைமகட்குத் தலைமகன் வந்தமை உணர்த்தல்.

271. தேறற் கடிமலர்க் கோதாய் கலைசைத் தியாகர்வெற்பில்
ஏறப் படுமெய்ப் பசலையு நின்கண் ணிழிபுனலும்
மாறச் செறியிருண் மாரன் கணைபட்டு வந்தபுண்ணும்
ஆறப்பொற் றேர்மிசை யேறிவந் தாரங் ககன்றவரே. 9

## வந்தோன்றன்னொடு பாங்கி நொந்து வினாதல்.

272. செழுமைநந் தாத கலைசைத் தியாகர் சிறப்பன்பர்போல்
எழுமையும் பூண்ட தொடர்புடை யீரெங்கட் கென்றிருந்தேம்
முழுமையு மெம்மை மறந்தனிர் போலுமிம் மொய்குழலாள்
அழுமை நயனமங் கையாற் றுடைத்தங் ககன்றபின்னே. 10

---

269. புற்று: அரவின் சாதிக்குரியஅடை; **திருச்சிற்**. 97—ஆம் பாடலின் உரையைப் பார்க்க. ஆகுலம் - துன்பம். கூறாய் - கூறுவாய். இடை இல் அமளி - நடுவிலுள்ள எழுத்து இல்லாத அமளி=அளி - வண்டு.

270. கேட்பம் - கேட்பேம். தார்ப்பரிமளம் - மாலையின் நறுமணம், உற்பல வாசம் - கருங்குவளை மலரின் மணம்.

271. தேறல் - தேன். நினது கண்களிலிருந்து இழிகின்ற. "பண்ணுங் குழலும் பழித்தசொற் பாவை பரியலெல்லா, மண்ணும் புகழ்தஞ்சை வாணனெனான் னாரென மைக்குவளைக், கண்ணுங் கனையிருட் கங்குலு மாரன் கணைகள்பட்ட, புண்ணும் புலரவந் தார்தம தூர்வயிற் போனவரே" (**தஞ்சை**. 256) என்பதைத்தழுவி வந்தது இது.

272. எழுமையும் பூண்ட தொடர்பென்றது உழுவலன்பை. மை நயனம் - மையிட்டகண்கள்.

தலைவன் பாங்கியொடு நொந்து வினாதல்.

273. மைப்படி யாரயிற் கண்ணீர் கலைசையுள் வந்து துதி
செப்படி யார்க்கருள் செய்யுஞ் சிதம்பர தேவருண்ட
வெப்படி யாவந்த பேராலம் போலும் விளையலர்கொண்
டெப்படி யாற்றி யிருவீரு மிங்ங னிருந்தனிரே. 11

பாங்கி இறைவியை ஆற்றுவித்திருந்த அருமை
தலைமகற்குச் சொல்லல்.

274. இடராவ தொன்றணு காதிவ ளைப்புரந் தியானிருந்தேன்
நடராச ரெங்கள் கலைசைத் தியாகர்நன் னாட்டுமுன்னீர்ச்
சுடரார் மணிசெந் திருவெனத் தோன்றுந் துறைவமையல்
அடராம லாற்றுவி யென்றன் றுரைத்த வருணினைந்தே. 12

## 18. வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல்.

என்பொருட்பிரிவுணர்த்து ஏந்திழைக்கென்றல்.

275. வேலாடு கண்ணி கலைசைத் தியாகர்வெற் பிற்சுரம்போய்
நீலாம் பகத்தி முலைவிலைக் கேற்கு நிதிகவர்ந்து
கோலா கலமுட னந்திக்குன் றுள்ளன கொண்டுவரும்
பாலாறு போல்வரு வேனிது காதிற் பதிவிப்பையே. 1

பாங்கி நின்பொருட்பிரிவுரை நீ அவட்கென்றல்.

276. பாற்கங்கை சூடுங் கலைசைத் தியாகர் பருப்பதத்தின்
மேற்கண்ணி மார்ப நலந்தீ திரண்டுநின் மேலனவாம்
தீற்கங்கொ ளிவ்வெண்ண மெம்பெரு மாட்டி திருவுளத்துக்
கேற்கும் படிவல்லை யேற்சொல்லி நீபின் னெழுந்தருளே. 2

---

273. மை - அஞ்சனம். துதியைச் செப்பும் அடியார்க்கு. வெப்பு - வெம்மை. அலர் - பழிமொழி.

274. உரைத்த - நீ உரைத்த. நினைந்து புரந்திருந்தேன்.

275. நீலாம்பகத்தி - நீலமலர் போன்ற கண்களையுடைய தலைவியினது; அம்பகம் - கண். கோலாகலம் - பேரொலி. நந்திக்குன்று - நந்திமலையில். காதில் - தலைவியின்காதில். **திருவாவடுதுறைக்கோவை,** 279 - ஆம் செய்யுள் இதனை ஒத்துள்ளது.

276. பால் - வெள்ளை. கண்ணி - மாலை. தீற்கம்=தீர்க்கம்- நெடுமை.

### நீடேனென்றவன் நீங்கல்.

277. மந்தியம் போதி வருகையிற் றேர்பண்ணி வன்சுரம்போய்ப்
பந்தியம் போதக மேனிதி கொண்டு பயின்மன்றற்கா
நந்தியம் போடைக் கலைசைத் தியாகர்நன் னாடனையாய்
அந்தியம் போது வருவேனும் மூர்மகிழ்ந் தாலிக்கவே. 3

### பாங்கி தலைமகட்குத் தலைமகன் செலவுணர்த்தல்.

278. இல்லத் தமரரு மேவுன் முலைவிலைக் கெண்ணரிதாம்
நல்லத்த மீந்து மணம்பெறு வான்பொன் னகைப்பொகுட்டு
வில்லத்தங் கொண்ட கலைசைத் தியாகர்மெய் மார்க்கம்வரார்
செல்லத்த மின்றுசென் றார்நம தன்பர் திருந்திழையே. 4

### தலைமகள் இரங்கல்.

279. திருந்தன மென்னடை யாய்தென் கலைசைத் தியாகர்வெற்பிற்
பெருந்தன மென்னிடைப் பெற்றுமென் னோவன்பர் பேசுகிலா
திருந்தனம் வேறொன்று தேடச் சுரங்கடந் திட்டினிநான்
அருந்தனம் வேம்பென லாம்படி போம்படி யானதுவே. 5

---

277. மந்தி - சூரியன்; ''மந்தியு மறியா மரம்பயி லடுக்கத்து'' (முருகு. 42, வேறுரை.) அம்போதி - கடலில். பந்தி அம் போதகம் மேல் - கூடத்திலுள்ள அழகிய யானையின்மேல். மன்றற்கா - கலியாணத்திற்காக. நந்தி அம்பு ஓடை - அம்பையுடைய நந்தியோடை; அம்பு - நீர். காலையிற்போய் மாலையில் வருவேன்

278. இல்லத்து அமரரும் - இல்வாழ்வையுடைய தேவரும், மேவு - விரும்புகின்ற, நல் அத்தம் - நல்ல பொன்னை, பொன் நகை பொகுட்டுவில் - மேருமலையாகிய வில்லை. 'பொன்னகப் பொகுட்டுவில்' எனவும் பாடம். அத்தம் - கையில். செல் அத்தம் - செல்லுதற்கு இடமாகிய அருவழியில்.

279. திருந்து அன்னம் மெல் நடையாய். பெருந்தனம், இருந்தனம்: தனம் : சிலேடை; ''பெருந்தன மென்னிடைப் பெற்றும்'' என்றது, ''எம்பாவை'' (சீவக. 1364) என்றாற் போலப் பட்டாங்கு கூறுதற்கண் வந்தது. அருந்து அனம் - உண்ணுகின்ற அன்னம்.

### பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்.

280\. வரம்போ தருமன்ப ருன்பொருட் டானிதி வாரிவரச்
சுரம்போ யினர்தென் கலைசைத் தியாகர் சுடர்வரைப்பூ
நிரம்போதி மங்கையிவ் வூரவர் தூற்றலர் நீக்கமின்றிச்
சரம்போலத் தைக்கையி னீபுலம் பாநிற்குந் தன்மைநன்றே. 6

### தலைவி கொடுஞ்சொற் சொல்லல்.

281\. நீணாகம் பூண்ட கலைசைத் தியாகரை நீங்கிநின்றே
வாணாள் கழிக்கும்வன் னெஞ்சரின் வெஞ்சுர மன்னரன்னோ
வீணாள் படச்சென்ற வவ்வா றறிந்துமென் வேட்கைகண்டும்
காணா தவரி னெனைத்தெளிப் பார்க்கென் கழறுவதே. 7

### வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்.*

282\. தென்சாம கண்டர் கலைசைத் தியாகர் சிலம்பிடத்துன்
மென்சாயல் காட்டி மயில்விலக் காநிற்கும் வேட்கையுற
வன்சா ரலினின் விழிபோல் விழித்தந்த மான்மடக்கும்
பின்சா ணளவுஞ்செல் லாரன்பர் பேதுறல் பெண்கொடியே. 8

### பருவங்கண்டு பெருமகள் புலம்பல்.

283\. தாரேற வண்டினங் கொன்றையெல் லாமென் றடமுலைமேற்
பீரேறப் பீரிற்கண் ணீரேற வாடும் பிணிமுகங்கட்
கேரேறத் தொட்டிக் கலைவாழ் சிதம்பர் வீசர்வெற்பிற்
காரேறக் கண்டுநம் மன்பர்பொற் றேர்வரக் கண்டிலமே. 9

---

280\. வரம்பு ஒதரும் அன்பர் - எல்லையற்ற அன்பையுடைய தலைவர். ஓதி - கூந்தல். சரம்போல - அம்பைப்போல,

281\. மன்னர் வெஞ்சுரம் சென்ற அவ்வாற்றை-காணாதவரின் - அறியாதவரைப் போல. பாங்கியைப் படர்க்கையாகக் கூறினள். தெளிப்பார்க்கு - தெளியச் செய்பவர்க்கு.

282\. மடக்கும் - மீளச்செய்யும். பேதுறல் - மயங்காதே.

283\. கொன்றை எல்லாம் வண்டினம்தார ஏற; தார் - பூங்கொத்து; ''தார் நறுங் கொன்றை'' (தே.) பீர் - பசலை. பிணிமுகம் - மயில், ஏர் ஏற - எழுச்சி மேன்மேல் உண்டாக, கார் - மேகங்கள்.

* வலித்தல் - துணிவுகூறல்.

## இருளை வம்பென்றல்.

284. வாடிய பைந்தினைக் காமுரு கோனை வணங்கிநமர்
கூடியங்கார்த்திடக்கொண்மூச்சொரிந்தனகொண்டல்வண்ணன்
தேடிய பாதர் கலைசைத் தியாகர் சிலம்பினிற்கண்
டாடிய மஞ்ஞை யிதுகா ரெனவஞ்சி யஞ்சலையே. 10

## இறைமகள் மறுத்தல்.

285. வம்பார் தனத்தி கலைசைத் தியாகர்முன் மாலயனெவ்
வம்பா றிடவழற் குன்றாய்நின் றென்ன மலைமுழுதும்
வம்பார்செங் காந்தளுங் கோபமுந் தோன்றி வயங்குதலால்
வம்பாகு மோவுன்சொல் வம்பாவ தன்றியிம் மைக்கொண்டலே.

## அவர்தூதாகி வந்தடைந்தது இப்பொழுதெனத் துணைவி சாற்றல்.

286. வண்டுதைம் பாலி கலைசைத் தியாகர் வரையிடைத்து
வண்டுதைக் கொல்குங் கொடிபோற் றெருமரல் மன்னர்வெற்றி
வண்டூதத் தேர்மிசை யின்னேபொன் னேந்தி வருவரென்று
வண்டு துரைப்பமுன் னேவந்த தாலிந்த மைம்முகிலே. 12

---

*284. ஆர்த்திட - முழங்க; "ஏனற் பசுங்கதி ரென்றூழ்க் கழிய வெழிலியுன்னிக், கானக் குறவர்கள் கம்பலை செய்யும்வம் பார்சிலம்பா" (**திருச்சிற்.** 157.) ஆடிய : முற்று. வஞ்சி - வஞ்சிக்கொடி போல்வாய்.*

*285. வம்பு - கச்சு. எவ்வம் பாறிட - குற்றம் நீங்க. வம்பு - வாசனை. கோபம் - இந்திரகோபப் பூச்சி. வம்பு ஆகுமோ - காலம் அல்லாத காலத்துப் பெய்யும் மழை ஆகுமோ; "வம்பார் குன்றம்" (**தே.**) வம்பு ஆவதன்றி - வீண் ஆவதல்லாமல்.*

*286. வண்டு ஊதுகின்ற ஐம்பாலையுடையாய். துவண்டு ஒல்குமென இயைக்க. ஊதைக்கு - காற்றுக்கு. வெற்றி வண்டு - சய சங்கம். வள் தூது உரைப்பதற்கு.*

## தலைமகள் ஆற்றல்.

287. ஒருவா விருதலைப் புட்போ னமக்குயி ரொன்றெனமுன்
திருவாய் மலர்ந்தருள் செய்தநங் காதலர் செம்பொருட்கா
வெருவாது கான்சென் றுழிமறந் தெம்மை விடுவர்கொலோ
வருவாரிக் காரிற் கலைசைத் தியாகர் வரையகத்தே. 13

## அவன் அவட் புலம்பல்.

288. அள்ளற் பழனக் கலைசைத் தியாகருக் கன்பிலர்போல்
எள்ளத் தனையு மிரக்க மிலாரென் றெனையுநொந்த
உள்ளத்தி னோடமுங் கண்ணீர்வெள் ளத்தி னுழிதருங்கால்
மெள்ளப் பிடித்தெடுப் பாருமுண் டோவந்த மின்னினையே.1 4

## மீண்டுவருகின்ற காலத்துத் தலைமகன் பாகனொடு சொல்லல்.

289. மாடையி னாற்று முடித்தேர் வலவ மடந்தைசங்கோ
டாடை யுகாமுன் கலைசைத் தியாக ரளித்தருளும்
ஓடைகொள் செங்கழு நீர்க்குஞ் சரத்தை யுனதுளத்திற்
கோடைவெங்காலெனக்கோடையின்கால்செலக் கொள்ளுதியே·

---

287. ஒருவா - நீங்காத. இருதலைப்புள் போல் உயிர்ஒன்று: ''யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின், இருதலைப் புள்ளி னோருயி ரம்மே'' (அகநா. 12.) காரின் - மேகத்தைப் போல.

288. எனையும்:உம்மை உயர்வுசிறப்பு. மின்னென்றது தலைவியை.

289. மாடையின் ஆற்றும் முடி - பொன்னாற் செய்யப் பெற்ற சிகரத்தையுடைய. சங்கு - வளையல். ஓடை - நெற்றிப் பட்டம். செங்கழுநீர்க்குஞ்சரத்தை - செங்கழுநீர் விநாயகரை; ஓடையை இடமாகக்கொண்ட செங்கழுநீர் மலரென்பது வேறொரு பொருள். கோடைவெங்காலென - கோடைக் காற்றைப்போல. கோடையின் கால் செல - குதிரையின் கால் செல்லாநிற்க. குதிரைசெல்லக் குஞ்சரத்தைக் கொள்ளென்றது ஒருநயம். சிவபிரானது தேரச்சு முறியச்செய்து மீண்டும் அது நன்கு ஓட அருளியவராதலின் தேரோட விநாயகரை நினையென்றான்.

## தலைமகன் மேகந்தன்னொடு சொல்லல்.

290. தன்னே ரிலாத கலைசைத் தியாகர் தடங்கிரிமேல்
முன்னேகி னாலும்மை மொய்குழ லால்வென்று முற்றிழையாள்
இன்னேயும் மின்னையுந் தன்னிடையால் வெல்லுமென் மணித்தேர்ப்
பின்னே வரின்முகில் காள்பெறு வீர்நற் பெருமிதமே. 16

## பாங்கி வலம்புரிகேட்டு அவன்வரவறிவுறுத்தல்.

291. இந்தனஞ் சேரெரி போன்றவெப் பாறத்தண் ணேரியதாய்ச்
சந்தனம் பூசு தனத்தினல் லாய்தடந் தேரிலன்பர்
கந்தனை யீன்ற கலசத் தியாகர் கலைசையின்கண்
வந்தனர் வந்தன ரென்றினி தார்க்கும் வலம்புரியே. 17

## வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.

292. சங்கத்தி லோர்கண்ணர் பெண்ணொரு பாகத்தர் தண்ணருளாற்
சங்கத் தமிழ்நிறை கூடல் வணிகர்தந் தையலர்க்குச்
சங்கத்த மிட்ட கலைசைத் தியாகர் சரதகங்கைச்
சங்கத்தின் வாழியென் சஞ்சலந் தீர்த்த தனிச்சங்கமே. 18

---

*290.* இன்னே - இப்பொழுதே. உம் மின்னையும் - உம்மிடத்திலுள்ள மின்னலையும். வெல்லும் - வெல்லுவாள். பெருமிதம் - களிப்பு.

*291.* இந்தனம் - விறகு. ஏரி - ஒருவகைநீர்நிலை. தனத்தில் சந்தனம் பூசு. தேரில் அன்பர் வந்தனர்.

*292.* சங்கத்தில் ஓர் கண்ணர் - நெற்றிக்கண்ணர்; சங்கம் - நெற்றி. கூடல் - மதுரையில், சங்கு அத்தம் இட்ட - வளையலைக் கையிலிட்ட. சரதம் - உண்மை. கங்கையென்றது இத்தலத்திலுள்ள சிவகங்கையை; கங்கை கூறியது தூய்மைக்காக; **சீவக,** 172, ந. சங்கத்தின் - சங்கத்தைப் போல.

## இதுவுமது.

293. போதாந்தர் போற்றுநன் மங்கல நாணென்றும் பூண்டவெங்கள்
மாதா வளர்சிவ காமிகண் டத்தணி வாய்ந்துநறும்
தாதாடுங் கொன்றைக் கலைசைத் தியாகர் தமக்கினிய
வேதா சலத்தின் புகழ்போல் விளங்குக வெண்சங்கமே. 19

## தலைமகன் வந்துழிப் பாங்கி தம்மை நினைத்தமை வினாதல்.

294. புனைந்துமந் தாகினி பொற்சடை மீது பொருபுலித்தோல்
வனைந்துநின் றாடுங் கலைசைத் தியாகர் வரையன்பரே
நினைந்து மறிதிர்கொல் லோவிரு போதுங்கண் ணீர்மழையால்
நனைந்து கிடக்கு முடையாளை நீர்சென்ற நாட்டகத்தே. 20

## தலைமகன் நினைத்தமை செப்பல்.

295. எனையும்வந் தாண்ட கலைசைத் தியாகரை யேத்திமிரு
வினையுங் கழித்தவர் தொண்டைநன் னாடன்ன மின்னினையும்
உனையுமெப் போதுகண் டேன்கண்ட நாண்முத லோரிடத்தும்
நினையும் பரிசில்லை யான்மற வாமை நிலைத்தபின்னே. 21

---

293. போதாந்தர் - ஞானிகள். என்றும் அழியாத கணவரைப் பெற்றிருத்தலின் 'மங்கலநாண் **என்றும்** பூண்ட' என்றார்; "மைந்நின்ற வொண்கண் மலைமகள்" **(தே.)** என்ற திருவாக்கு இங்கே நினைவுக்குவருகிறது. கண்டத்தின் அழகை வாய்ந்து. வேதாசலம் - வேதாசலமுதலியார்; இஃது ஒரு பிரபுவின் பெயர்.

294. பொற்சடைமீது மந்தாகினியைப் புனைந்து. உடையாளை - ஆடையையுடையவளை. கண்ணீரால் ஆடை நனைதல்: "நெடுங்கண்க ளுகுத்த, அப்பினானனைந்து...... ஒருநிலையுறாத மென்றுகிலாள்" **கம்ப**. காட்சிப். 8.

295. இருவினைகளையும் கழித்தவர் வாழ்கின்ற தொண்டை நாடு. மறவாமை நிலைத்தபின் நினையும் பரிசில்லை; "மறந்தா னினைத்தலு முண்டுபொன்னேயுங்கள் வஞ்சியையே." **வெங்கைக்**. 282.

### தலைமகளை ஆற்றுவித்திருந்த அருமை கூறல்.

296. சிவங்காட் டியதென் கலைசைத் தியாகர் சிலம்பவுன்றன்
தவங்காட் டியவுரு வைப்படந் தீட்டித் தயங்கநவ
நவங்காட்டித் தேர்சென்ற நல்வழி காட்டிநின் னன்றியனு
பவங்காட்டி யாற்றுவித் தேனெங்கள் பாவையைப் பாலிருந்தே.

## 19. வரைவு மலிவு.

### காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக்கு உரைத்தல்.

297. நின்வண்ண மேலுறு பொன்வண்ண மாறமின் னேயெனையும்
தன்வண்ண மாக்குங் கலைசைத் தியாகர் தடத்துநம்மில்
முன்வண்ண மேருநின் றாலென்ன வுன்றன் முலைவிலைக்காப்
பொன்வண்ணத்தேரன்பர்வைத்தார்கொடுவந்து
பொற்குவையே. 1

### காதலி நற்றாய் உள்ளமகிழ்ச்சி உள்ளல்.

298. மன்றலம் புன்னை மருப்பங்கை யாற்கண்டல் வண்முகையாம்
மன்றநற் கொங்கை யளவுந் துறைவன் மருவியசோ
மன்றலைக் கிட்ட கலைசைத் தியாகர் வரைவருமேல்
மன்றற் றிருவணி கண்டியாயு நம்மின் மகிழ்வுறுமே. 2

---

296. சிவம் - முத்தி. நவம் - புதுமை, நன்றி - நன்மை. பால் - பக்கத்தில்.

297. பொன் வண்ணம் மாற - பசலைநிறம் நீங்க. தடம் — மலைப்பக்கம். இல்முன் - வீட்டின் முன்னே. வண்ணம் மேரு - அழகிய மேருமலை; பொற் குவைக்கு மேருமலை உவமை. மாறப் பொற்குவையை.

298. புன்னை : எழுவாய். மருப்புஅம் கையால்-கொம்பாகிய அழகிய கையால். கண்டல் - தாழை. மன்ற : அசை. தாழையின் முகையாகிய கொங்கையை அளவுகின்ற; கையால் அளவுகின்ற. சோமன் - சந்திரனை. துறைவன் வருமேல் - துறைவன் வருவானாயின். மன்றல் - கலியாணம். நம்மின் - நம்மைக் காட்டிலும்,

பாங்கி தமர் வரைவெதிர்ந்தமை தலைமகட்கு உணர்த்தல்

299. அதிர்ந்திடு மாழிக் கருங்கழி நாற்ற மடம்பினின்றும்
உதிர்ந்திடும் பூமண மாற்றுந் துறைவர்க் குயர்ந்தபத்தி
முதிர்ந்தவர் போற்றுங் கலைசைத் தியாகர் முதுகுன்றுளோர்
எதிர்ந்தன ரோகை முரசறைந் தார்மகிழ்ந் தேந்திழையே. 3

தலைமகள் உவகையாற்றாது உளத்தொடு கிளத்தல்.

300. சிறையுந்து நீர்த்தண் கலைசைத் தியாகரைச் சேரலர்போல்
மறையுந் தொழில்களு மாங்கவற் றால்வந்த வாட்டமுநம்
குறையுமின் றோடநெஞ் சேநம தன்பர்கைக் கொண்டுவகை
நிறையு மணமுரசார்க்கின்ற தானந் நெடுநகர்க்கே. 4

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

301. இன்னா வொழிக்குங் கலைசைற் தியாகர்வெத் பெய்தியந்நாள்
இன்னார்கொண் டுன்கண்ணி கையாரத் தையலுக் கிட்டபலன்
இன்னாகங்கொண்டசெவ்வேள்வள்ளி போலவிங் கெய்தலினால்
இந்நா ளறிந்தன மாலென்றும் வாழி யிறையவனே. 5

தலைவி மணம்பொருட்டாக அணங்கைப்பரா நிலை
பாங்கி தலைவற்கு உணர்த்தல்.

302. அணங்கமர் மாடக் கலைசைத் தியாகருக் கன்பிலர்போல்
அணங்கர வல்குனல் லாளுன் பொருட்டண்ட கூடமட்டும்
அணங்கன கச்சிக ரப்பொருப் பின்புறத் தாலயத்துள்
அணங்கர விந்தத்தா ளேத்துதல் பார்த்தரு ளாண்டகையே. 6

---

299. கழியின் நாற்றத்தைப் பூவின்மணம் மாற்றும் துறைவர்க்கு. முதுகுன்று - விருத்தாசலம். எதிர்ந்தனர் - ஏற்றுக் கொண்டார்.

300. சிறை - கரை. மறையும் தொழில்கள் – களவுப் புணர்ச்சிக்குரியன. உவகை - மகிழ்ச்சி. பி-ம் 'வாட்டமுறுங்'

301. அந்நாளில் இனிய நாரைக்கொண்டு; நார் – அன்பு. இல் நாகம் கொண்ட - இருப்பிடத்தை மலையாகக் கொண்ட; நாகம் - மலை. பலன் - கலியாணம். நீங்கள் எய்தலினால்.

302. அணங்கு - அழகு. அணங்கு அரவு - வருத்துகின்ற பாம்பைப் போன்ற. அண்டகூடமட்டும் அண்ணிய அம் கனக சிகரம். பொருப்பின் புறத்தே - மலையின் புறத்தே. அணங்கு - துர்க்கையினுடைய.

அணங்கைப் பராநிலை கண்ட தலைமகன் மகிழ்தல்.

303. இப்பே ரறிவிவட் கெவ்வண்ண மெய்திய தென்பொருட்டா
முப்பே ருலகும் புகழ்கூர் கலைசையின் முத்தலங்கற்
செப்பே ரிளமுலை பாகன் சிதம்பர தேவன்வெற்பில்
துப்பே ரிதழி மலர்தூஉயித் தெய்வந் தொழுவதற்கே. 7

## 20. அறத்தொடு நிற்றல்.

கையறுதோழி கண்ணீர் துடைத்தல்.

304. வெண்ணீ றணியுங் கலைசைத் தியாகரை மேவலர்போற்
கண்ணீர் மழைபொழி தற்கொரு காரணங் கண்டிலமால்
பண்ணீர் மொழிமயி லேவிளை யாடும்பொற் பாவைதன்னைத்
தெண்ணீர்த் திரைகொண்டு போயின தோவென்னை
செப்புகவே. 1

தலைவி கலுழ்தற்காரணங் கூறல்.

305. கனக்கறைக் கண்டர் கலசத் தியாகர் கலைசையன்னாய்
வனக்கணிக் கீழ்வந் தெனைப்புணர்ந் தேகிய மன்னவரை
எனக்குமுன் காட்டிய கண்மலர் காண்பதற் கின்றவரைத்
தனக்கெனைக் காட்டிடென் றேயழுங் காரணந் தானிதுவே. 2

தலைவன் தெய்வங்காட்டித் தெளிப்பத் தெளிந்தமைகூறல்.

306. நலம்பர வுந்தென் கலைசைத் தியாகர்நன் னாட்டுவரிக்
கலம்பர வுந்துறைத் தெய்வத்தின் முன்னின்று கையெடுத்துப்
புலம்பரன் பாகத் தெளித்தவை யாவும் பொறியிலியேன்
சலம்பர வாவண்ண மெய்யாக நம்பினன் சாலவுமே. 3

---

*303. என்பொருட்டாத் தொழுவதற்கு இப்பேரறிவு எவ்வண்ணம் இவட்கு எய்தியது?*

*305. கனம் – மேகம்போன்ற. வனத்திலுள்ள வேங்கைமரத்தின் கீழே. கண்மலர் : எழுவாய். அழும் : முற்று.*

*306. கலம் பரவும் உவரித் துறை; கலம் - கப்பல்; உவரி - கடல். துறைத்தெய்வம் : ''உண்டுறை யணங்கு'' (ஐங். 28); ''கடற்றெய்வங் காட்டிக் காட்டி, அரியசூள்.'' புலம்பர் - நெய்தல் நிலத்தலைவர்; புலம்பு - கடற்கரை. பொறி - அறிவு. சலம் - வஞ்சனை*

## தலைவி தலைமகன் இகந்தமை இயம்பல்.

307. மறைமொழி வாயர் கலைசைத் தியாகர்வண் பாலிநதித்
துறைமொழி யேநற் கரிநமக் கென்றன்பர் சொல்லியொரு
குறைமொழி யாமல் விடுத்திகந் தார்நற் குணப்பெரியோர்
நிறைமொழி குன்றிற்குன் றாததுண் டோமண்ணிளேரிழையே

## பாங்கி இயற்பழித்துரைத்தல்.

308. நற்றேவர் சூழுங் கலைசைத் தியாகர் நயந்ததெண்ணீர்
உற்றே றியநந்தி யோடையின் வாய்நின்று மொண்டுறைவர்
பற்றேக யானக லேனென் றுரைத்தும் பரிந்தழநீ
எற்றே துறந்தன ரேயவர் போலில்லை யேதிலரே. 5

## தலைமகள் இயற்பட மொழிதல்.

309. காயிலைச் சூலர் கலசத் தியாகர் கலைசையன்னம்
சேயிதழ்த் தாமரை மேல்வீற் றிருந்து சிறையளிகள்
வாயினிற் பாட மகிழ்தொண்டை நாட்டன்பர் வன்கொடியர்
ஆயினு மாக வவரே யெனைப்புரந் தாள்பவரே. 6

## தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றல்.

310. இதம்புரி மெய்யன்பர் சொற்பிற மூாந்தன்மை யின்மையினால்
சிதம்பர வீசர் கலசா புரியரைச் சேரலர்போற்
கதம்புரி யேறெய்வ மேயென்று சென்று கனபலிதூஉய்ப்
பதம்பர வக்கட வேமிரு வேமும் பணிமொழியே. 7

---

307. பாலிநதித் துறையில் மொழிந்த மொழியே. குறை - காரியம். நிறைமொழி - பொருள்நிறைந்தமொழி; நிறைமொழி மாந்தர்'' குறள்.

308. நந்தியோடை: தொட்டிக்கலையிலுள்ள ஓரோடை; அதற்குத் திருவிழாக் காலத்திற் கலசத்தியாகர் எழுந் தருளுவதுண்டு. பற்று - அன்பு. நீ அழ. எற்று - எத்தன்மைத்து. ஏதிலர் - அயலார்.

309. சேயிதழ் - செம்மையாகிய இதழ்களையுடைய. கொடியர்......ஆள்பவரே: ''தண்ணந் துறைவன், கொடிய னாயினு மாக, அவனே தோழியென் னுயிர்கா வலனே'' பழைய பாடல்.

310. இதம் - விருப்பமாகிய செயல்களை. கதம் புரியேல் - கோபம் செய்யாதே. பலிதூய் - மலர்ப்பலியைத் தூவி.

### தலைவி இல்வயிற் செறித்தமை சொல்லல்.

311. அனம்போ னடைச்சி கலைசைத் தியாகருக் கன்புசெயார்
தனம்போ லிருத்திமற் றைம்பொறி வாயிற் சரித்தல்செயார்
மனம்போற் றடுத்தென்னை வைத்தன ளாலன்னை வாரமிலாக்
கனம்போற் கருங்குழ லாரலர் தூற்றுதல் கண்டுகொண்டே. 8

### செவிலி கனையிருள் அவன்வரக் கண்டமை கூறல்.

312. தங்காப்பு மாசுணத் தால்வனை கின்ற சதுரரென்றும்
மங்காப் புகழ்கூர் கலைசைத் தியாகர் வரையணங்கே
பைங்காப் புடைநின் றொருவன்பின் னூழையின் பால்வரக்கண்
டங்காப் புடன்காப் படைத்தே னெனமோ யறைந்தனளே. 9

### செவிலி தலைமகள் வேற்றுமைகண்டு பாங்கியை வினாதல்.

313. தெளிவார்க் கருளுங் கலைசைத் தியாகரைச் சேர்கிலர்போல்
ஒளிவாள் விழிபிறி தாய்முத் துறைக்க வுறைபுனற்கு
மிளிவார் முலைபசும் பொன்பூத் துடம்பும் விளிர்த்ததனால்
அளிவா ழுளகத்தி னாட்குற்ற தீதென் றறிகிலனே. 10

---

*311.* அனல்போல் நடைச்சி: "கொடைச்சிவந்தான் கோடைக் குளிர் காவிலன்ன, நடைச்சிவந்தா லென்செய்கே னான்" (**தனிப்பாடல்**). இருத்தி - பயன்படாமல் என்னை இருக்கச் செய்து, அன்னை வைத்தனள். வாரம் இலா - அன்பு இல்லாத.

*312.* மாசுணத்தால் தம் காப்பு வனைகின்ற; மாசுணம்-பாம்பு நூழை - நுழை வாசல். அங்காப்புடன் - வாய் திறப்புடன். மோய் - தாய்; "அருந்ததிக் கற்பி னெம்மோய்" **கம்ப.** சூர்ப்பணகை. 50.

*313.* முத்து - முத்துப்போன்ற கண்ணீர்த்துளியை. குமிளி; குமிழி; தென்னாட்டு வழக்கு; "பெயறுளி முகிழெனப் பெருத்த நின் னிளமுலை" (**கலி.** 56:24.) உற்றது ஈது.

### பாங்கி வெறிவிலக்கல்.

314. இவருடை யாருயி ருண்ணிய வோபலி பேற்றுமுன்சேர்ந்
தவருடை யார்வத் தழுந்திவ ணோயட வோமுருகே
கவருடை நெஞ்சத்தெம் மில்லத்துள் வந்த கருத்தெவனோ
துவருடை யாளர் கலைசைத் தியாகர் சுடர்வரைக்கே. 11

### செவிலி தோழியை வினாதல்.

315. பொன்னுற்ற மார்பன் பணிகோ விருந்த புரத்திலென்றும்
மன்னுற் றருளுஞ் சிதம்பர வீசர் வரையின்மின்னே
துன்னுற்ற மாதர்முன் சூர்தடிந் தானைச் சுடர்மரக்காற்
பின்னுற்ற நாளனை யென்னையிவ் வாறுகொல் பேசியதே. 12

### தோழி பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

316. வாமம் பெறுநின் மகட்கொரு பூவண்ண வண்டுகொண்ட
நாமங்கொள்போதொன்றுன்கண்ணிற்கொள்வாயென்றொர் நம்பிவந்து
சேமந் தழைதரத் தந்தான் கலைசைத் தியாகர்வெற்பிற்
காமஞ் சரிகொய்து யாம்விளை யாடிய காலையிலே. 13

### புனறருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

317. குருமணி யன்னநின் கன்னியைம் பாற்குக் கொழித்திடுந்தன்
கருமண லொப்புறல் கண்டிவ ளாடிடுங் காற்கந்தள்ளத்
திருமணிப் பாலியிற் பாய்ந்தெடுத் தானொரு செம்மலுமைக்
கொருமண வாளர் கலைசைத் தியாகரை யுள்கிவந்தே. 14

---

*314.* இவருடை ஆருயிர் உண்ணியவோ - இந்த ஆட்டின் அரிய உயிரை உண்ணுதற்காகவோ. முன் சேர்ந்தவருடைய ஆர்வத்து; சேர்ந்தவருடை: தொகுத்தல். கவர்த்தல்-பிளவுபடுதல். எவனோ - யாதோ. துவர் உடையாளர் - காவியுடையார் - "காமனை முனிந்து நெடுஞ்சடை முடித்துக் கவின்றகல் லாடை மேற் புனைந்து" காஞ்சிப். நகரப். 109.

*315.* பொன் உற்ற மார்பன்; பொன் - திருமகள். மன்னுற்று- நிலை பெற்று. சூர் தடிந்தானை - முருகக்கடவுளை; சூர் - சூரபதுமன். மரக்கால் - சுவாதி நட்சத்திரம். பின்னுற்ற நாள் - விசாக நட்சத்திரம்.

*316.* வாமம் - அழகு ஒரு பூவைத் தந்தானென இயைக்க. வண்டுகொண்ட நாமம் - புண்டரீகம்=தாமரை. சேமம்—இன்பம். காவில் மஞ்சரியைக் கொய்து ; மஞ்சரி – பூங்கொத்தை.

*317.* ஐம்பாற்கு – கூந்தலுக்கு. ஆடுங்கால் கம் தள்ள – ஆடும்பொழுது நீர் இவளைத் தள்ள. பாலி – பாலாறு.

## இதுவுமது.

318. தன்னிடைத்தோன்றிய சைவலக் கொத்தையுன்றையலைம்பால்
வென்னிடச் செய்ததென் றாடிடுங் காலம் விரைந்திழுக்கப்
பொன்னுடை யானிற் சுனைவீழ்ந் தெடுத்துப் புரந்தனனோர்
கன்னெடுந் தோளன் கலைசைத் தியாகர் கனவரைக்கே. 15

## களிறுதருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

319. தொடையார் குழலி நடைக்கிடை தன்பிடி சோர்தல்கண்டவ்
விடையானை யொன்று கனன்றிவண் முன்வரு
மேல்வையென்னை
உடையார் கலைசைத் தியாகர்முன் னாக முரித்தெனவேற்
படையாலவ் வானையைக் கீண்டளித் தானொரு
பார்த்திபனே. 16

## தலைமகள்வேற்றுமை கண்டு நற்றாய் செவிலியை வினாதல்.

320. வண்டமிழ் கூருங் கலைசைத் தியாகர் மலைவனிதாய்
பெண்டன்மை யம்ம முழுதிழந் தாளென் பெருமகண்முன்
கண்டகண் ணுக்கின்று வேற்றுருக் காட்டிக் கடக்கரிதான்
உண்டவெள் ளிற்கனி போலான காரண மோர்ந்துரையே. 17

## செவிலி நற்றாய்க்கு முன்னிலைமொழியால் அறத்தொடுநிற்றல்.

321. மருவில்வஞ் சூடுங் கலைசைத் தியாகர் வரைப்புனத்திற்
பொருவிறற்போதகம்வந்ததுண்டோவென்றுபோந்துவினாய்த்
தருவு மதிலணை வல்லியும் போலநின் றையன்முலை
ஒருவிதி கூட்ட முயங்கின ராலன் றொருசெல்வரே. 18

---

*318.* சைவலம் – பாசி. வென்னிட – முதுகிட. அம் – நீர். பொன்னுடையானின் – திருமாலைப்போல.

*319.* இடை தன் பிடி – பின்னிட்ட தன்னுடைய பெண் யானை. அவ்விடை – அவ்விடத்தில். ஏல்வை – காலத்தில். நாகம் உரித்தென – யானையை உரித்தாற்போல. அளித்தான் – பாது காத்தான்.

*320.* வேற்றுருக் காட்டிப் பெண்தன்மை முழுதிழந்தாளெனக் கூட்டுக. கடகரி தான் உண்ட வெள்ளிற் கனி – யானையுண்ட விளங்கனி; கடாரி: சாதியடை; கரி – உள்ளீடில்லாமற்செய்யும் ஒரு நோய்; தூம்புடை நெடுங்கை வேழந் துற்றிய வெள்ளி லேபோல்'' **சீவக. 232.**

*321.* போதகம் – யானை. வினாய் – கேட்டு. தரு – மரம். வல்லி – பூங்கொடி.

## 21. உடன்போக்கு

பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தல்.

322. கள்ளார்க் குவதர் சிதம்பர வீசர் கலைசைவெற்பா
வள்ளார்கண் ணாளுட னின்பதிக்கேசென்று வாழ்ந்தருள்வான்
உள்ளா ரிருநிதி யுங்கொடு வந்திங் குதவினுநீ
கொள்ளார் முலைவிலை யாகவெம் மையர் குறையறவே. 1

தலைவன் உடன்போக்கு மறுத்தல்.

323. சுடர்ப்பாலை வன்னி கமர்வழி போய்வையந் தூக்கிநிற்கும்
விடப்பாந்த ளுச்சி வெதுப்புங் கடத்தில் விமலையைத்தம்
இடப்பாகம் வைத்த கலைசைத் தியாகரை யெண்ணலர்போல்
நடப்பா ரெவர்துணிந் திப்பூங் கொடியுட னன்னுதலே. 2

பாங்கி தலைமகனை உடன்படுத்தல்.

324. சங்கையி லாவெம் பரலார் முரம்புந் தழற்சுரமும்
செங்கைகொள் வேல சிதம்பர வீசர் திருக்கலைசை
மங்கைய ராடுந் திருநந்தி யோடையு மல்குசிவ
கங்கையுந் தானல்ல வோநின்னொ டேகினெங்
காரிகைக்கே. 3

தலைவன் போக்கு உடன்படுதல்.

325. கோதைத் தவிர்க்குங் கலைசைத் தியாகரைக் கூறலர்போம்
பாதைக் கடுந்தழல் பார்த்துமென் சீறடி பாங்கனிச்சப்
போதைப் பகையென்று கூசுதல் கண்டும் பொலந்தொடியென்
பேதைத் தனிநெஞ் சிவளுடன் கான்செலப் பெட்புற்றதே. 4

---

322. கள் ஆர்க்குவதர் – தேனையுடைய கொன்றையை அணிந்தவர்; ஆர்க்குவதம் – கொன்றை. வள் – கூர்மை. வாழ்ந்தருள் – வாழ்ந்தருள்வாயாக. வானில் உள்ளாருக் குரிய இரண்டு நிதியையும் நீ உதவினும்.

323. பாலை வன்னி – பாலைநிலத்திலுள்ள நெருப்பு. கமர்– வெடிப்பு. விடப்பாந்தள் – ஆதிசேடனது. கடம் – பாலைநிலம்

324. சங்கை – அளவு. முரம்பு – பருக்கைக்கற்களாலாகிய மேடு.

325. பாதை – வழி. பாங்கு – அழகு. பொலந்தொடி: விளி.

### பாங்கி தலைவிக்கு உடன்போக்கு உணர்த்தல்.

326. தூண்டற் கரிய சுடரனை யாய்பஞ்சிற் றூக்குபதம்
நீண்டக் கினியெரி கான நடந்து நிரைவளையாள்
பாண்டப் பலம்பு கலைசைத் தியாகர் பவனிவிழாக்
காண்டற் குடன்வரு மோவென் றவாவினர் காவலரே. 5

### தலைவி நாணழிபிரங்கல்.

327. தண்ணார் பதங்க மரியயன் றேடியுந் தாமறிய
ஒண்ணாச் சிதம்பர வீசன் கலைசை யுறாரெனவென்
கண்ணா ருயிரென வுற்றநன் னாணங் கழன்றிடலாற்
பெண்ணாச் சமைத்த வினையேபொல் லாத பெருவினையே. 6

### கற்பு மேம்பாடு பாங்கி கூறல்.

328. காணினுங் கேட்கினு மானந்த மாகுங் கலைசையயி
ராணிதன் கேள்வர் சிதம்பர வீச ரருளனையாய்
பேணிய வாவியிற் பெற்றிடுந் தாயிற் பெரிதெனச்சொல்
நாணினு நற்பொருள் கற்பாவ தேயென்று நங்கையர்க்கே. 7

### தலைவி ஒருப்பட் டெழுதல்.

329. பூத வனீகர் சிதம்பர வீசரைப் போற்றிலர்போல்
மாதர் விரோதத்திற் றாயர் குரோதத்தில் வாட்டமுற்ற
யாதனை தீரக் கலைசைக்கெ னன்பரொ டேகுவல்யான்
ஆதலி னின்னமிவ் வூரம்ப றூற்றி யழுங்குகவே. 8

---

326. "தூண்டா விளக்கனையாய்" (**திருச்சிற். 244.**) நீண்டு அக்கினி எரிகின்ற காடு. பாண் தப்பு அலம்பு - பாணர்கள்கையி லுள்ள தப்பு என்னும் ஒரு வாத்தியம் ஒலிக்கின்ற. வருமோ - வருவாளோ. என்று அவாவினர்.

327. பதம் கம் - பாதத்தையும், தலையையும். என்கண் - என்னிடத்தே. நாணத்திற்கு உயிர் உவமை.

328. அயிராணி தன் - உமாதேவியாரது ஆவியின் - உயிர் போல. தாயின் - தாயைப்போல; பழிநீக்கிப் பாதுகாத்தலின் தாயைப் போன்றது நாண் (**திருச்சிற். 204, பேர்.**) என்றும் - எக்காலத்தும்: "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர் தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (**தொல். களவு. 22**); "தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கு" **திருச்சிற். 204.**

329. அனீகம் - சேனை. யாதனை - துன்பம். அம்பல் தூற்றி; அம்பல் - சிலரால் அறியப்படும் பழிமொழி.

பாங்கி சுரத்தியல் உரைத்துழித் தலைமகள் சொல்லல்.

330. சசியார் புரிசைக் கலைசைத் தியாகரைச் சார்கிலர்போல்
ஒசியாநிற் குஞ்சிற் றிடையாயென் கூறினை யூரவர்வாய்க்
கசியாச்சொற் றீயிற் கனற்றப்பட் டேற்குக் கடுமை பொங்கும்
சுசியார் வனமும் வனமாஞ் சிவசிவ துன்னிடினே. 9

பாங்கி தலைமகளைத் தலைமகற்குக் கையடை கொடுத்தல்

331. ஆனந்தக் கூத்தர் கலைசைத் தியாக ரருமறைபோல்
ஈனந்தங் காமெய்ய னீயென் றிவளை யினிதளித்தேன்
மானந்தங் குன்னரு ளும்பிறி தாயின் மழைசுருங்கித்
தானந் தவமற் றிரண்டுமொன் றாமித் தரையிடத்தே. 10

பாங்கி வைகிருள் விடுத்தல்.

332. மைவாரு மல்லிற் கலைசைத் தியாகர் வரையணங்கே
இவ்வாண்டகைபின்னர்நீசெல்லுமார்க்கம்வந் தெய்துவல்யான்
அவ்வாத வூரர்முன் றேரர்வெவ் வாயை யடக்கியபோல்
ஒவ்வா வலருரைப் பார்பல வாயு மொடுக்குவித்தே. 11

தலைவியைத் தலைவன் சுரத்துய்த்தல்.

333. மண்ணிற் சிறந்த கலைசைத் தியாகர் வளர்சடைநீர்த்
தண்ணிற் சிறந்தவெண் பாலாற்று முத்தமுஞ் சாற்றுமவர்
கண்ணிற் கருணைக் கடல்போற் குளிரிளங் காவுங்கண்டு
பெண்ணிற் சிறந்தவண் மெல்லமெல் லப்பதம் பேர்த்துவையே

---

330. சசி – சந்திரன். கசியா – அன்பில்லாத. சுசி–நெருப்பு. வனம் – பாலைநிலம், நீர். சிவ சிவ: இரக்கக் குறிப்பு; "அரகர" (355) என்பர் பின்; "தையல் சிவ, சிவனச் சராவு மிலையோ வெனுமிளந் தென்றலுக்கே" (கூன்ழயந். 36); "சிலையோ கரும்புபொரு கணையோ வரும்புசிவ சிவவாவி யொன்று முளதோ" **மதுரைக்கலம்**. 83.

331. மெய்யன் நீ என்று. மானம் – அபிமானம். தானந் தவமென்னு மிரண்டும் ஒன்றாகக் கூறப்படும்; "தானந் தவ மிரண்டுந் தங்கா வியனுலகம், வானம் வழங்கா தெனின்" **திருக்குறள்**, 19.

332. அல்லில் – இருளில். தேரர் – புத்தர். அடக்கியது போல்: தொகுத்தல். ஒடுக்குவித்து யான் வந்து எய்துவல்.

333. கா – சோலை. சிறந்தவள்: விளி.

### தலைமகன் தலைமகள் அசைவறிந் திருத்தல்.

334. முச்சோதி யங்கட் கலைசைத் தியாகரை முன்னலர்போல்
அச்சோவுன் செம்பொ னடித்தா மரையி லரம்பொருகற்
றச்சோ திமநடைத் தையலெய்ப் பாயினை சாந்தமுற
இச்சோ லையினிழற் கீழிருப் பாஞ்சற் றிளைப்பறவே. 13

### தலைமகன் தலைமகளை உவந்து அலர்சூட்டி உண்மகிழ்ந் துரைத்தல்.

335. பாதபத் மங்க ளிவட்கியான் வருடவும் பாலையின்கீழ்ச்
சீதள மாலை திருமுடி சூட்டவுந் தென்கலைசை
நாதனெங் கோனைச் சிதம்பர வீசனை நாடியந்நாள்
மாதவங் கோடிசெய் தன்றோவிப் பேறின்று வாய்த்ததுவே. 14

### கண்டோர் அயிர்த்தல்.

336 நரந்தஞ்ச மாக்கொள் கலைசைத் தியாகர்நன் னாட்டுறையும்
மரந்தர் கொலோவிச் சுரத்திவர் யார்குற வள்ளியென்னின்
பூந்தண் குழலிவள் கையிற்கல் லாரமென் போதில்லையாற்
சேந்தனென் றாலிவன் செம்மார்பில் வெட்சித் தெரியலின்றே.

### கண்டோர் காதலின் விலக்கல்.

337. வில்வேளு மந்த விரதியும் போல்வரு வீர்கலைசை
நல்வேத கீதர் சிதம்பர வீசரை நண்ணலர்போல்
கல்வேம்வெங் கானத் தினிச்செல் லொணாது கதிர்மறைந்த
தில்வே றிலையினி யல்வேளை யெம்மி லிருந்துண்ணுமே. 16

---

*334.* முச் சோதி அம் கண் – முச்சுடர்களாகிய அழகிய கண்களையுடைய. அச்சோ – ஐயோ. அரம் – வாளரம். கல் தச்சு: தச்சு – தைத்து. எய்ப்பு – இளைப்பு.

*335.* இவட்கு – இவளுக்கு. பாலையின் – பாலைமரத்தின். செய்தன்றோ – செய்தமையா லன்றோ.

*336.* தஞ்சம் – பற்றுக்கோடு. கல்லாரப் போது – கழுநீர் மலர். சேந்தன் – முருகக் கடவுள். வெட்சித் தெரியல் – வெட்சி மாலை. வள்ளி நாயகியார் திருக்கரத்தில் குவளைமல ருண்டென்பதை, "இறைகதித்த சூர்முதலையிறுப்பவரனேயிளையோ னானவாற்றான், முறைகதித்த விருசுடரே முகத்துவிழி யெனத் தெரிக்குமுறைமை போல, நறைகதித்த மலர்க்கழுநீர் நளினமவன் விழியருகு நலக்க வேந்தி, நிறைகதித்த வுளத்தொடிடம் வலமமர்ந்த மாதர்பத நினைத்தல் செய்வோம்" (**தணிகைப் புராணம்**, கடவுள், 5) என்பதனா லுணர்க.

*337.* கல் வேம் – கற்கள் வேதற்குக் காரணமாகிய. செல்ல லொண்ணாது. கதிர் – சூரியன். வேறு இல் இலை இனி. அல் வேளை – இரவில்.

### கண்டோர் தம்பதி அணிமை சாற்றல்.

338. இம்மாது நீயுமின் றிம்மா திரங்கடந் தேகினெங்கும்
செம்மாணிக் கச்சுடர் மாடமுங் கூடமுஞ் சேர்கிடங்கும்
அம்மா மதில்களுஞ் சூழ்ந்தெதிர் தோன்று மமரர்க்கெல்லாம்
பெம்மான் சிதம்பர வீசன் கலைசைப் பெருநகரே. 17

### தலைவன் தன்பதி அடைந்தமை தலைவிக் குணர்த்தல்.

339. முதுகா ரணனு மெழுதரி யாயிரு மூன்றுடன்முப்
பதுகா தமுநடந் தேவந் தண்ணந்தனம் பாற்கரனா
ரதுகா யழல்வெம்மை யுட்புகு தாம லடர்பொழில்சூழ்
இதுகாண் சிதம்பர வீசன் கலைசை யெழினகரே. 18

## 22. கற்பொடு புணர்ந்த கவ்வை.

### செவிலி பாங்கியை வினாதல்.

340. பொன்னங் கொடியொன்று தானடந் தேவரல் போல்வருமென்
அன்னந் தனியெங்ங னுற்றது பொற்றொடி யாய்நடஞ்செய்
மன்னம் பலவர் கலைசைத் தியாகரை வாழ்த்தலர்போல்
தன்னந் தனிநின்று நீயென்கொல் வாடித் தளர்கின்றதே. 1

### பாங்கி செவிலிக் குணர்ந்தல்.

341. கடுத்தார் மனநம் மினத்தாரன் னேபின்னுங் காதன்மணம்
தடுத்தா ரதனிற் கலைசைத் தியாகர் தமதருளால்
வடுத்தான் படாமற் சுரத்தெரி யாற்றி மலரொருநாள்
கொடுத்தா னொருவன்பின் னேநடந் தாளுன்
குலக்கொழுந்தே. 2

---

338. இன்று – இன்றைத் தினம். மாதிரம் – மலை. பெரு நகர் தோன்றும்.

339. முது காரணன் – பிரமன். முப்பத்தாறு காதம். பாற் கரனாரது – சூரியனது.

340. என் அன்னமென்றது தலைவியை. தன்னந்தனி – மிகத் தனியே; தன்னந்தனி நின்றழு கின்றவத்தையல்'' **வி. பா.** திரௌபதி, 82.

341. கடுத்தார் – ஐயமுற்றார். அதனின் – அதனால். எரி ஆற்றி – வெப்பத்தைப் பொறுத்து. வடு – கற்புக்குக் குற்றம், மலர் ஒருநாட் கொடுத்ததை 316–ஆம் செய்யுளால் அறியலாம்.

## பாங்கியின் உணர்ந்த செவிலி தேற்றுவோர்க்கு எதிரழிந்து மொழிதல்.

**342.** ஓராட்டி பாகர் கலைசைத் தியாக ருயர்வரைமேல்
நீராட்டி யென்முலை யூரமு தூட்டியெந் நேரமுநான்
சீராட்டி யேந்தி வளர்த்ததற் கோவெனைத் தேவ்விற் கண்டென்
ஏராட்டி விட்டகன் றாளாறு மோவெனக் கித்துயரே. 2

## செவிலி தன் அறிவின்மைதன்னை நொந்துரைத்தல்.

**343.** பிரிவைக் கருதிக் கலைசைத் தியாகர் பெருவரைமேற்
பரிவைப் பெருக்கியன் னேயென் றழைத்துப் பழகுமிந்த
அரிவைக்குப் பாலையல் லாற்குடி யாதென் றறைந்துமெள்ளத்
தெரிவித் தகன்றன ளாற்பேதை யேதுந் தெரிந்திலனே. 3

## செவிலி தெய்வம் வாழ்த்தல்.

**344.** முடிகொண்டு நின்னடி போற்றுவ லென்செல்லன் முற்றுமறக்
கடிகொண்ட காளைபின் சென்றாளை மீட்டின்று காட்டுதியால்
படிகொண்ட கீர்த்திக் கலைசைத் தியாகர் பணிவரைமேற்
குடிகொண் டிருந்தென்று மெங்களைக் காக்குங் குலதெய்வமே. 5

## செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்றல்.

**345.** ஒருகயந் தள்ளி யொருகயம் வீழ்ந்தெடுத் தோனிருக்க
அருகய லார்க்குக் கொடுப்பான் றனைநினைந் தார்களென்றே
திருகய நெஞ்சத்தர் காணாக் கலைசைத் தியாகர்வெற்பிற்
பொருகயற் கண்ணவ ளன்னே விடலைபின் போயினளே. 6

---

*342,* ஓர் ஆட்டி – ஒப்பற்ற பெண்; ஆட்டி – பெண்; நந்நாட் டாட்டியர்'' (பெருங். 1. 43: 25). அமுது – பால். தெவ்விற் கண்டு – பகையைப்போல அறிந்து. ஏராட்டி - அழகையுடையவள்.

*343.* பரிவு - அன்பு இந்த அரிவை யென்றது தலைவி தன்னையே சொல்லிக் கொண்டது. பாலை அல்லால் குடி யாது – பாலல்லாமல் வேறு பருகுதற்குரிய பொருள் என்ன உண்டு என்பது செவிலி கொண்ட பொருள்; பாலை நிலமல்லாமல் இருப்பிடம் யாதென்பது தலைவியின் உட்கோள். பேதை – அறிவற்றவளாகிய நான்.

*344.* செல்லல் – துன்பம். கடி – மணம். காளை – பாலை நிலத் தலைவன்; பதினாறு பிராயமுள்ளவனென்பர்.

*345.* ஒரு கயம் தள்ளி – ஒரு யானையை வேலாற் குத்தி வீழ்த்தி. ஒரு கயம் வீழ்ந்து எடுத்தோன் – ஆழமான நீர்நிலையில் விழுந்து எடுத்தவன். தனை கொடுப்பான் – தன்னைக் கொடுக்கும் பொருட்டு. திருகு அயம் நெஞ்சத்தர் – மாறுபட்ட இரும்பு போன்ற வன்னெஞ்சர். விடலை – பாலைநிலத் தலைவன்.

## நற்றாய் பாங்கிதன்னொடு புலம்பல்

346. நோக்கிநல் லாள்கருத் தீதென்றுன் னோடு நுவன்றவந்த
வாக்கினை யெங்கட் குணர்த்தா தனத்தை வனத்தவமே
போக்கினை யேதென் கலைசைத் தியாகர் பொருப்பிலெங்கள்
மூக்கினைச் சுட்டு விரல்சேர வைத்தழ முற்றிழையே. 7

## நற்றாய் பாங்கியர்தம்மொடு புலம்பல்

347. கரத்திற் கபாலர் கலசத் தியாகர் கலைசையென்மான்
வரத்தின்மிக்கானொருவள்ளல்கைத்தார்பெற்று [வாய்மைகுன்றா
துரத்திற் சிறந்தொரு தெய்வந் தொழாத வுறுதிபெற்றாற்
சுரத்திற் றுணிந்துட னேகவும் வேண்டுங்கொ றோகையரே. 8

## நற்றாய் அயலார்தம்மொடு புலம்பல்

348. அகத்தார்க் கரியர் கலைசைத் தியாக ரளித்தருள்சண்
முகத்தான் றிருமுன் வரங்கிடந் தியான்பெற்ற மொய்குழலாள்
சுகத்தாறு காட்டவல் லானொரு வன்பின் சுரத்திலிவ்வூர்
நகத்தா னகன்றன ளட்டாற்றுச் சாயென நானையுவே 9

## நற்றாய் தலைமகள்பயிலிடந்தம்மொடு புலம்பல்

349. திருந்தேற் கருளுஞ் சிதம்பர வீசர் திருக்கலைசைப்
பெருந்தேவு யன்னவென் பெண்விளை யாடும் பெருஞ்செயலாய்
குருந்தே குருக்கத்தி மண்டப மேயுங் குளிர்ந்தநிழல்
இருந்தே பிரிந்தவ ளாங்காண வென்றுவந் தெய்துவனே 10

---

346, நல்லாள் – தலைவி. வனத்து அவமே. ஏது என் – காரணம் என்ன. சுட்டுவிரலை மூக்கின்மேல் வைத்து அழ: ''வன்புடன் சுட்டு விரன் மூக்கி னுச்சியில் வைத்துப் பெண்டிர், கொன்பழி தூற்றப் பயந்தார்'' (**திருவாவடுதுறைக்கோவை, 331**), ''சிலரும் பலருங் கடைக்க ணோக்கி, மூக்கினுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி, மறுகிற் பெண்டி ரம்ப றூற்ற'' **நற்றிணை, 149**.

347. உரத்தில் – அறிவில். தெய்வந்தொழாத உறுதி – கற்பு ''தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்'' குறள், 55.

348. அகத்தார் – பாவிகள். சுகத்து ஆறு – இன்ப வழியை. இவ்வூர் நக – இந்லவூரிலுள்ளார் சிரிப்ப. சாயென – கோரையைப் போல. நான் நைய.

349. செயலாய் – அசோக மரமே. குருந்தே – குருந்தமரமே. குருக்கத்தி மண்டபம் – குருக்கத்திக்கொடி மாடம்.

## நிமித்தம் போற்றல்

350. அரைவா யரவர் கலைசைத் தியாக ரமர்ந்தவெள்ளி
வரைவாய் மரையி னிணப்பலி யென்று மகிழ்ந்திடுவேன்
இரைவாய் நிறைய வெடுத்துண்ண லாமின்றெ னேழைவரக்
கரைவா யிருகட் கொருமணி யைங்குணக் கார்க்கொடியே 11

## நற்றாய் சுரந்தணிவித்தல்

351. நாரமில் லாவெஞ் சுரநாடு பாலிநன் னாடெனலாய்
வாரங் கலைசைத் தியாகேச வுன்றன் வலக்கண்ணினாற்
கோரஞ்செய் யாமற் குளிர்விக்க வேண்டுங் குடங்கொண்முலைப்
பாரம்பொறாதிடை தள்ளாடச் செல்லுமென்
பைந்தொடிக்கே. 12

## நற்றாய் தன்மகள் மென்மைத்தன்மைக்கு இரங்கல்.

352. அஞ்சத்த னப்பர் கலைசைத் தியாக ரரணடுவான்
அஞ்சத்த மாமறை சொன்னசெவ் வாயெழு மந்நகைபோல்
அஞ்சத் தழல்செ யடவிவெங் கற்றிரட் காற்றினவோ
அஞ்சத் திறகும் பொறாதவென் பேதை யடிமலரே 13

---

350. அரைவாய் – இடையில். மரை – ஒருவகை மிருகம். மகிழ்ந்து பலியை இடுவேன். இருகட்கு ஒருமணி: "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கு" (திருச்சிற். 71) ஐங்குணக் கொடியே – ஐந்து குணங்களைக்கொண்ட காக்கையே; "குணங்களஞ் சாற்பொலி யுந்நலச் சேட்டைக் குலக்கொடியே" (திருச்சிற். 235) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

351. நாரம் – நீர். சுரநாடு – பாலைநிலம். பாலி–பாலாறு. வார் அம். வலக்கண் – சூரியன். கோரம் – கொடுமை.

352. அஞ்சு அத்தன் அப்பர் – ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகருக்குத் தந்தையார். அரண் அடுவான் – முப்புரங்களை அழித்தற் பொருட்டு. அம் சத்தம் மாமறை. செவ் வாயில் எழும். அடுவான் எழும் நகை போல். அஞ்ச – அஞ்சும்படி. அஞ்சத்து இறகும் – அன்னத்தின் தூவியும். அடிமலர் ஆற்றினவோ.

## நற்றாய் தன்மகள் இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்கல்.

353. பாவா யுறுகுழல் போற்கரந் தேகும் படிபுலவோர்
பாவாய் கலைசைத் தியாகர்நன் னாட்டிற் பயின்றதெங்கென்
பாவா யழேலென்று முத்தன்ன மூட்டியுன் பாதமண்ணிற்
பாவாய் நடந்து வராயென்று கொஞ்சுமென் பைங்கிளியே. 14

## நற்றாய் தன்மகள் அச்சத்தன்மைக்கு அச்சமுற் றிரங்கல்.

354. நீர்த்தண் சுனைத்த வளைதத்தி னஞ்சுமென் னேரிழையாள்
தீர்த்தன் கலைசைத் தியாகேசன் வெற்பினிற் செல்லிடிபோல்
ஆர்த்தஞ் சனமத மாயா முறித்துண்ண லச்சுரத்திற்
பார்த்ததிர் வுற்று வெரூஉமென்றெ னெஞ்சம் பதைக்கின்
றதே 15

## ஆயமும் தாயும் அழுங்கக் கண்டோர் காதலின் இரங்கல்.

355. புரகர ரெங்கள் கலைசைத் தியாகர் பொருப்பிடையாம்
பரிதவிக் கத்துறந் தாளென்று பாங்கியர் பஞ்சினைவார்
விரகறி தன்மக ளின்சொற் பயிற்றிய மென்கிளிதான்
அரகர வென்னநற் றாயழல் சேர்மெழு காயிடுமே. 16

---

353. பாவாய் உறுகுழல் போல் - பஞ்சுநூற்பாவின் கண்ணுற்ற குழல்போல; "பாவி னோடுவண் குழலெனத் திரிதலைப் பாராய்" (பிரபு. வசவண்ணர். 12.) பா ஆய் - பாக்களை ஆய்தற்கு இடமாகிய. ஏகும்படி பயின்றது எங்கென இயைக்க. என் பாவாய் என்னுடைய பாவையே; தலைவி விளையாட்டுப்பாவையைநோக்கிக் கூறியது. முத்தன்னம் - முத்தாகிய அன்னத்தை. பாதத்தை மண்ணிற் பதியச்செய்து நடந்துவா. என் பாவாயென்பது முதலியன தலைவியின் கூற்றை நற்றாய் கொண்டுகூறியவை. என் பைங்கிளி பயின்றது எங்கு.

354. சுனையில் தவளை தத்தின். செல் - மேகம். மத மா - யானை. யா முறித்து உண்ணல் - யாமரத்தை முறித்து உண்ணுதலை; "உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய, யா"(குறுந். 232.) அதிர்வுற்று - நடுக்கமுற்று.

355. புரகரர் - புரங்களை அழித்தவர். பரிதவிக்க - துன்புற. பஞ்சின்னைவார். விரகு அறி - உபாயத்தை அறிந்த. அரகர - இரக்கக் குறிப்பு; 330-ஆம் செய்யுளின் குறிப்புரையைப் பார்க்க. கிளி அரகர என்ன; என்ன - என்று சொல்ல;"என்னனை போயினள் யாண்டைய ளென்னைப் பருந்தடுமென், றென்னனை போக்கன்றிக் கிள்ளையென் னுள்ளத்தை யீர்கின்றதே" (திருச்சிற். 231) என்பது இங்கே கருதற்பாலது.

### செவிலி ஆற்றாத்தாயைத் தேற்றல்.

356. மஞ்சிவர் மன்றமுஞ் செய்குன்ற முஞ்செறி வண்கலைசை
நஞ்சினை மாந்துங் கலசத் தியாகர் நடஞ்செய்பதத்
தஞ்சிலம் போசை படர்தரு மெல்லை யளவுஞ்சென்றுன்
வஞ்சியைத் தேடிக் கொணர்வேன் வருந்தல் வருந்தலன்னே. 17

### ஆற்றிடை முக்கோற்பகவரை வினாதல்.

357. வான்மூன்று நூலர் கலைசைத் தியாகர் வரையிலெங்கள்
மான்மூன்று சத்தி யுடையா னொருவன்பின் வன்மரங்கள்
நான்மூன்று ராசியு நீ தோயுங் கடத்தி னடந்தனளோ
கோன்மூன்று கொண்டு குறும்பொரு மூன்றுங் குமைத்தவரே. 18

### மிக்கோர் ஏதுக்காட்டல்.

358. வேயுங் கரும்பும் புரைநெடுந் தோளி வினைப்பயனாற்
காயுங் கனியும் பருவத் தருந்துநர் கைப்படுமால்
தீயு மறியுங்கைக் கொண்டரர் கலைசைத் தியாகர்வெற்பில்
ஆயும் பொழுதுமின் னாருமந் நீர்மைய ரன்பினர்க்கே. 19

### செவிலி எயிற்றியொடு புலம்பல்.

359. துகளேத நீக்குங் கலைசைத் தியாகர் சுடர்க்கிரிமேல்
உகளேறு போலு மடலோர் விடலைபின் னூறுமினி
யகளேயும் பூமின்புற் பற்கோத்த தாலி யணியுமெயின்
மகளேயிப் பாலைவந் தப்பால் நடந்த வழியுரையே. 20

---

356. பதத்து......எல்லை: ''உலகெலாம்......மலர்சிலம்படி'' *பெரிய.1.*

357. வால் – வெண்மையான. மூன்று சத்தி, உச்சாகசக்தி, பிரபுசத்தி, மந்த்ரசத்தி; பு வெ 225 – ஆம் செய்யுளுரையைப் பார்க்க; சத்தி–ஆற்றல். நான்மூன்று ராசி–பன்னிரண்டு ராசிகள். குறும்பு ஒரு மூன்றும் – காமம், வெகுளி, மயக்கமாகிய மூன்று குற்றங்களையும்.

358. மறி – மானை மின்னாரும் அந்நீர்மையர்:''எறித்தரு'' (*கலி*. 9) என்னும் செய்யுளின் தாழிசைகளைப் பார்க்க.
பி - ம். 'அருந்துநர் கைக்கொள்வராற்'

359. ஏறு – காளை; ஆண்சிங்கமுமாம். ஊறும் இனிய கள் ஏயும் பூ மின்; திருமகள்போன்ற தலைவி: எழுவாய். புற்பற் கோத்த தாலி - புலிப்பல்லைக் கோத்த தாலி; ''புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி,.....கானவன் மகளே'' *அகநா.* 7.

## செவிலி குரவொடு புலம்பல்.

360. கூசாம லேதிலன் பின்னேக லென்றொன்று கூறலின்றிப்
பேசாத பாவையைப் பெற்றன மென்ற பெருங்குறையால்
வேசாறி யோவெங்கள் பாவையை நீவிலக் காமல்விட்டாய்
தேசார் கலைசைத் தியாகேசர் வெற்பிற் செழுங்குரவே. 21

## செவிலி சுவடுகண் டிரங்கல்.

361. பிஞ்சு நிலாவணி செஞ்சடை யாரென் பிழைமலங்கள்
அஞ்சுங் கழித்த கலைசைத் தியாக ரசலத்தினான்
கொஞ்சுங் கிளியனை யாளடி யுங்குவை கூர்வடமேற்
றுஞ்சு மவனனை யானடி யேயிச் சுவடுகளே. 22

## செவிலி கலந்துடன்வருவோரைக் கண்டு கேட்டல்.

362. கம்மேக வண்ணனுஞ் செய்யாளும் போல்வந்து காட்சிதந்தீர்
இம்மே தகநும்முன் போயின ரோநல் லெழிற்கலைசைச்
செம்மேனி பூசும்வெண் ணீற்றான் சிதம்பர தேவன்வெற்பில்
அம்மே னகையனை யாளு மொருசிலை யாளியுமே. 23

---

360. ஏதிலன் – அயலான். ஏகல் – போகாதே. பேசாத பாவை யென்றது குரவமரத்தின்பூவை (ஐங்.344.) வேசாறியோ – சலித்தோ. கூறலின்றி விட்டாயென இயைக்க. தேசு – ஒளி.

391. பிஞ்சு நிலா – பிறை; "மாமதிப் பிஞ்சுமிரை தேர்குயிற் குஞ்சும்" (மதுரைக்கலம்பகம், 80.) மலர்கள் அஞ்சு – ஆணவம் முதலியன. நான் கொஞ்சும். அடிகள் உங்கே தோன்றுகின்ற உவைகள். வடம் – ஆலிலை; ஆகுபெயர். துஞ்சும் அவன் – திருமாலை.

362. கம்மேகம் – நீரையுடையமேகம். இம்மேதக – நும்மைப்போன்ற மேன்மை தக; மீண்டா ரெனவுவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே, பூண்டா ரிருவர்" (திருச்சிற். 244.) அமேனகை – அந்த மேனகையை.

### கலந்துடன்வருவோர் புலம்பல் தேற்றல்.

363. கண்டகங் கொண்டென் னெதிர்வந்த மேகமுங் காதலென்மான்
கண்டதொர் மின்னுங் கணிக்கிலன் னேயொண் கரியமணி
கண்டன் சிதம்பர வீச னுதற்கட் கனறருகான்
கண்டகண் டண்ணுற வேகல சாபுரி காண்பர்களே. 24

### செவிலி புதல்வியைக் காணாது கவலைகூர்தல்.

364. தெரிதமி ழார்ந்த கலைசைத் தியாகரைச் சேர்கிலர்போல்
எரிதரு கான்றிரிந் தெய்த்தவென் கால்கலந் தேகுநரைத்
துரிதம தாக்கண்டு கண்டுகண் புற்கென்ற சூரியர்க்கும்
அரிதரி தாலினிக் காணநம் மாதை யருஞ்சுரத்தே. 25

## 23. மீட்சி.

### தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்கு உணர்த்தல்

365. தத்துவக் கூட்ட முழுவதுஞ் சோதித்துத் தாகமுடன்
சித்துரு வான கலைசைத் தியாகரைத் தேடுநர்போற்
பத்துடை யாளையன் னேயெங்கு நாடியிப் பாவிவந்தேன்
ஒத்துடன் கொண்டுசென் றானொரு வள்ளறன் னூர்மனைக்கே.

---

*363.* கண்டகம் – கத்தி. மேகமென்றது தலைவனை. மின்னென்றது தலைவியை. கான் கண்ட கண் தண்ணுற – காட்டைக்கண்ட கண்கள் குளிர்ச்சியை அடைய. "நண்ணிநீர் சென்மி னமரவ ராபவேல், எண்ணிய வெண்ண மெளிதரோ – எண்ணிய, வெஞ்சுட ரன்னானை யான்கண்டேன் கண்டாளாம், தண்சுட ரன்னாளைத் தான்" **திணைமாலை**. 89.

*364.* என் கால் எய்த்த – என் கால்கள் இளைத்தன. துரிதமதா – விரைவாக. புற்கென்ற புல்லியவாயின; "வாளற்றுப் புற்கென்ற கண்ணும்" (**குறள்**,1261;) "காலே பரிதப் பினவே கண்ணே, நோக்கி நோக்கி வாளிழந்தனவே" **குறுந்**. 44.

*365.* தாகமுடன் – விருப்பமுடன். சித்து – அறிவு. பத்து – அன்பு; "பத்துடையீ ரீசன் பழவடியீர்" **திருவாசகம்**.

### தலைவன் தம்மூர்சார்ந்தமை சாற்றல்.

366. எழுங்காதல் கூரமுன் னாளுன்னை நான்கண்ட திம்மலைவண்
டுழுங்கான் மலர்நந்தி யோடைத் துறையிதுன் னூசலிட்ட
செழுங்கா விவைதென் கலைசைத் தியாகரைச் சேர்கிலர்போல்
அழுங்கா தெழுந்தரு ளாரணங் கேநம் மணிநகர்க்கே. 2

### தலைவி முன்செல்வோர்தம்மொடு தான்வரல் பாங்கியர்க்கு உணர்த்தி விடுத்தல்.

367 ஊரார்சொற் றீமைக்குந் தாயர் பொறாமைக்கு முங்கொ துங்கி
வாராநின் றாளொரு வள்ளல்பின் னென் றுநன் மாமறையீர்
ஏரார் கலைசைத் தியாகேசர் வேதண்டத் தெண்டிசையும்
பாராநின் றேங்குமென் பாங்கியர்க் கோதுந்தப் பாதுசென்றே.

### முன்சென்றோர் பாங்கியர்க்கு உணர்த்தல்.

368. குருவாய்வந் தன்பர்க்கு முப்பொருள் காட்டிக் குறைவிலின்பம்
தருவார் கலைசைத் தியாகர்நன் னாட்டொரு தையலங்கோர்
திருவாளன் பின்வரக் கண்டன நீரின்று சேயிழையீர்
பெருவாழ்விற் கண்டு வகைதொகை யின்றிப் பெறுவிர்களே. 4

### பாங்கியர் கேட்டு நற்றாய்க்கு உணர்த்தல்.

369, மல்லோங் கெயில்சூழ் கலைசைத் தியாகர் வரையிடத்தஞ்
சில்லோதி நின்மக ளேந்தல்பின் னேபிரி தீங்கினென்னை
கொல்லோ விளையுமென் றேங்கிய நாமனு கூலமுற
நல்லோர் வருமென்று சொற்றிடக் கேட்டன நம்பதிக்கே. 5

---

366. கான்மலர்–வாசனையையுடைய மலர்; கான்–வாசனை,

367. வேதண்டத்து – மலையில்.

368. முப்பொருள் – பதிபசுபாசத்தின் இலக்கணங்களை, உவகையைப் பெறுவீர்கள். தொகை – அளவு.

369. மல் – வளம். அம் சில் ஓதி – அழகிய சிலவாகிய கூந்தலையுடைய; ''வெஞ்சின விறல்வேற் காளையொ, டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே'' (ஐங்குறு. 391.) பதிக்கு வருமென்று; பதிக்கு – பதியின்கண்.

நற்றாய் கேட்டுத் தலைமகனுளங்கோள்
வேலனை வினாதல்.

370. நற்றயல் ப்ரகர் கலைசைத் தியாகரை நாடியெல்லாம்
கற்றறி வேல கடுஞ்சுரம் போய்வருங் காதலவன்
உற்றவென் பொன்னையென் னில்லங் கொணருங்கொ
ஞூழிற்றன்னைப்
பெற்றநற் றாய்தன் மனையுய்க்கு மோசொல் பிழையின்றியே.

## 24. தன்மனை வரைதல்.

மணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்
செவிலியை வினாதல்.

371. தீவண மேனிச் சிதம்பர வீசர் திருக்கலைசைப்
பூவண மாதைநம் மாமனைக் கேவந்து பூஞ்சிலம்பர்
காவண மிட்டுக் கலியாணஞ் செய்தற்கென் கண்ணனையாய்
ஆவணஞ் சென்றினிக் கூறினென் னாங்கவ ரன்னையர்க்கே. 1

செவிலிக்கு இகுளை வரைந்தமை உணர்த்தல்.

372. எம்மின்ன றீர்க்குஞ் சிதம்பர வீச ரெழிற்கலைசை
நம்மினத் தார்க்குநற் றாய்க்குமன் னேயென்னை
நாஞ்சொல்லுவோம்
அம்மின் னிடைமட வாளைநன் னாளி லதுலரவர்
தம்மின் மணம்புணர்ந் தாரென்று தூதர்கள் சாற்றினரே. 2

---

370. தயல் – தையல்: முதற்போலி; "தயல்வளர் மேனிய னம்பலத்தான்" (சிற். 117.) கொணரும் கொல் – கொணர் வானோ. ஊழின் – முறையாக.

371. பூவண்ணம் – பூப்போலும் வண்ணத்தையுடைய. காவணம் – பந்தலை. ஆவணம் – ஆகும்வண்ணம். ஆங்கவர். ஒரு சொன்னீர்மைய. அன்னையர்க்குக் கூறின் என்?

372. இன்னல் – துன்பங்களை. அம் மின் – அழகிய மின்ன லைப் போலும். அதுலர் அவர் – ஒப்பில்லாதவராகிய தலைவர்: தம்–இல் தம்முடைய வீட்டில்.

### வரைந்தமை செவிலி நற்றாய்க்கு உணர்த்தல்.

873. உற்றார்கள் வந்துநின் றாற்ற மணநல முங்கணெய்தப்
பெற்றா யிழைதென் கலைசைத் தியாகர் பிறங்கலன்னே
நற்றாயைக் காணிய விம்மனைக் கேயந்த நாதன்பின்னே
பற்றாய் வருவளென் றொற்றர்முன் வந்து பகர்ந்தனரே. 3

### தலைவன் பாங்கிக்கு யான் வரைந்தமை நுமர்க்கியம்பு சென்றென்றல்.

374. கங்கைச் சடையர் கலைசைத் தியாகர் கமலமலர்ச்
செங்கைத் தழல்புரை தீமுன்ன ரெல்லாச் சிறப்புமுற
மங்கைக் கியான்மங் கலநாண் புனைந்தது வார்குழலாய்
சங்கைப் படாதுன் றமரான யாவர்க்குஞ் சாற்றுகவே. 4

### தானது முன்னே சாற்றினன் என்றல்.

375. பாண்டரங் கஞ்செய் கலைசைத் தியாகர் பழமலைமேல்
ஆண்டகை யாயெம் மணங்கைக் கொணர்ந்துன் னணிமனை
[வாய்க்
காண்டகு முன்பெருங் கேண்முன்னர் நீமங் கலத்திருநாண்
பூண்டதன் றேயறிந் தன்னைக் கியம்பினன் பூரிக்கவே. 5

## 25. உடன்போக்கிடையீடு.

### நீங்குங் கிழத்தி பாங்கியர்தமக்குத் தன் செலவுணர்த்திவிடுத்தல்.

376. உத்தமர் போற்றுங் கலைசைத் தியாக ருயர்வரைமேல்
நத்தம ரத்தனை யொத்தவிக் காளைபின் னான்வனத்தில்
வித்தக மாக நடக்கின்ற வாறு விரைந்தநந்தணீர்
சித்த மருண்டழு மென்னாய முன்சென்று செப்புமினே. 1

---

373. உங்கண் – அவ்விடத்தே. காணிய–காணும்பொருட்டு நாதன் – தலைவன்.

374. புனைந்ததைச் சாற்றுக.

375. பாண்டரங்கம் – திரிபுரத்தை எரித்தபின்பு இறைவன் ஆடிய கூத்து; இதன் இலக்கணத்தைக் கலித்தொகை முதற். செய்யுள் 8–10–ஆம் அடிகளாலும், ''ஏறமர் கடவுள்'' என்னும் அதன் மேற்கோளாலும் உணர்க. பழமலை – விருத்தாசலம். பூரிக்க – மகிழ.

376. நத்து அமர் அத்தனை – சங்கம்பொருந்திய கையை யுடைய திருமாலை. காளை – பாலைநிலத்தலைவன், வனம் – பாலைவனம். என் ஆயத்தின்முன் சென்று.

### தலைமகள் தன் செலவு நற்றாட்கு உணர்த்திவிடுத்தல்.

377. பாரேழுந் தந்த கலைசைத் தியாகர் பதம்பணிந்தே
ஒரேழ் பிறப்பு மொழிதவத் தீரும்மை யான்றொழுவேன்
போரே றனைய வனைகழ லானொடு பொங்கழற்கான்
தேரேறிச் செல்வதெந் தாய்க்கங்ங னேசென்று செப்புமினே. 2

### நற்றாய்க்கு அந்தணர் மொழிதல்.

378. மயலேறு சிந்தை மலைகிழ வோயிள மானனையாள்
இயலே றரைய னொருவன்பின் னேகடத் தேகினள்காண்
புயலேறு மாடக் கலைசைத் தியாகப் புனிதனருட்
செயலேயல் லாற்பின்னை வேறில்லை யென்றிரு தேற்ற
[முற்றே. 3

### நற்றாய் அறத்தொடுநிற்றலிற் றமர் பின் சேறலைத் தலைவி கண்டு தலைவற்கு உணர்த்தல்.

379. மாயம் புகுந்த மனத்தர்க் கரியர் மலமகன்றோர்
நேயம் புகுந்த கலைசைத் தியாகர் நெடும்பொருப்பா
சாயஞ் சிலையொடு நாணொலி யேற்றொடுந் தாயுடனே
வாயம்பு பெய்முகில் பொற்றேர் மலையை வளைக்கின்றதே. 4

### தலைவியைத் தலைவன் விடுத்தல்.

380. தெழியா வருபடைக் கானவ ரேல்வர் தீங்குயிர்வேல்
விழியாய் நடுக்கப் படுபழி யொன்றினில் விட்டிடுவேன்
ஒழியா துறுநும ரேற்கொலைக் கஞ்சுவ லோர்ந்துசெல்க
அழியாத சீர்த்திக் கலைசைத் தியாக ரணிவரைக்கே. 5

---

378. அரையன் —அரசன். இரு – இருப்பாயாக.

379. மாயம் – வஞ்சனை. சாய் – வளைந்த. சிலை – வில், இந்திரவில், ஏறு – இடி, நாணொலியாகிய ஏறு. தாய் – தாவி. அம்பு – பாணம், நீர். முகிலென்றது தமர்களை. தேராகிய மலையை.

பி–ம். 'நாணொலி யென்னுந் தடித்துடனே'

380. தெழியா - முழக்கி; கானவர் – மறவர். நடு க படுபழி– நடுவில் நகரத்தையுடைய பழி; பகழி – அம்பு.

தமருடன் செல்பவள் அவன் புறநோக்கிக்
கவன்று அரற்றல்.

381. விரவிய பேமற வெற்புறங் காத்தலின் விண்ணுமண்ணும்
பரவிய தாளர் கலைசைத் தியாகர் பழமறையாம்
புரவியின் வாழிய வெம்மையர் தோன்றப் புறங்கொடுத்த
திரவிய மாமலை போற்புய வீரன்பொற் றேர்ப்பரியே. 6

## 26. வரைதல்.

அந்தணரையுஞ் சான்றோரையும் முன்னிட்டு
வரைந்துகொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல்.

382. சகநாத ரெங்கள் கலைசைத் தியாகர்தந் தண்டகநாட்
டகநா யகனென யார்மணம் வேட்டவ ராய்ந்திடினான்
முகனா ரெனமறை யோராசி கூறலின் மொய்ம்பினிவன்
குகனா விவடெய்வ யானையு மாக்கண்டு கொண்டனமே. 1

## 27. இல்வாழ்க்கை.

தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்.

383. நன்னுதற் பாவையுன் வல்லவு நீர்மையை நானென்சொல்வேன்
மின்னுதற் கண்ணர் கலைசைத் தியாகர் வியன்கிரிமேல்
என்னுழைப் பால்வந்த தென்னையந் நாண்முத லின்றளவும்
உன்னுழைப் பாலல்ல வோபெற் றுளோமிந்த வூதியமே. 1

---

381. பேம் அற – அச்சம் நீங்க. எற்புறங்காத்தலின் – என்னைப் பாதுகாத்தலினால். புரவியின் – குதிரையைப் போல. ஐயர் – தமையன்மார். திரவிய மாமலை – மேரு; திரவியம் – பொன். தேர்ப்பரி வாழிய வென்க.

382. தண்டகநாடு – தொண்டைநாடு. நாயகனென்றது தலைவனை. மறையோருக்கு நான்முகன் உவமை.

383. மின் நுதல் – மின்னுகின்ற நெற்றி. என் உழைப்பால். என்னை – யாது? ஊதியம் – இலாபம். இந்த ஊதியத்தை உன் உழைப்பாலல்லவோ பெற்றுளோம். தலைவியையும் உளப் படுத்திக் கூறினமையின் பெற்றுளோமென்றான்.

### தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

384. மூவா மருந்தென்ன முன்சொன்ன வஞ்சின முற்றுவித்தே
ஓவா வலருட னென்கட் புனலு மொழித்தனையால்
காவார் கலைசைத் தியாகேச ருஞ்சிவ காமியும்போல்
நீவாழி யெம்பெரு மானிவ ளோடென்று நீணிலத்தே. 2

### வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை பாங்கி தலைவியை வினாதல்.

385. அந்தமி ழின்சுவை போன்மொழி யாய்மன்ற லாற்றுபரி
யந்தமெவ் வாறெவ்வ மாற்றி யிருந்தனை யன்றுவந்த
அந்தகற் காய்ந்த கலைசைத் தியாகருக் கன்பிலர்தாங்
கந்தமில் பாவப் பொறையின்மின் னார்சொல் லலர்சுமந்தே. 3

### தலைவி வருந்தாதிருந்ததற்குக் காரணம் கூறல்.

386. அற்புதக் கூத்தர் கலைசைத் தியாகர்மெய் யஞ்செழுத்தாம்
சொற்புணை யாலன்பர் துன்பக் கடலைத் தொலைப்பதுபோல்
நற்பிணை யற்குழ லாய்துயர் வெள்ளநம் மன்பர்தந்த
கற்புணை யாலுநின் சொற்புணை யாலுங் கடந்தனனே.

### பாங்கி தலைவனை வரையுநாளளவும் நிலைபெற ஆற்றிய நிலைமை வினாதல்.

387. படைகொண்ட கையர் கலைசைத் தியாகரைப் பற்றினர்போற்
றொடைகொண்டகோதையை நீயின்றைவாயினுந்துய்த்திட லாற்
புடைகொண்டு பண்டு பிரியுந் தொறுமப் பொழுதிடையில்
விடைகொண்டதோநின்றதோ விவண்மேல்வைத்தவேட்கை யதே. 5

---

384. மூவா மருந்து – உண்டவர் மூவாமைக்குக் காரண மாகிய மருந்து. அலரையும் என் கண்ணீரையும் ஒழித்தனை.
385. அம் தமிழ். ஆற்றுபரியந்தம் – செய்யுமளவு. எவ்வம் – துன்பத்தை. தாங்கு பாவமாகிய பொறை; பொறை – பாரம்.
386. அஞ்செழுத்தாம் சொற்புணை: "அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை" (**திருவா.**) பிணையல்–மாலை. கல் புணை – தலைவன் கையுறயாகத் தந்த மாணிக்கமாகிய தெப்பம்; "பார் வியப்புற நீர்தந்த மாமணி" (**அருணைக்கலம். 100.**) வெள்ளத்தைக் கடந்தனன்.
387. இன்று ஐ வாயினும் – இக்காலத்தில் ஐம்பொறிகளா லும்; "கண்டு கேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள" **குறள்.**

### பாங்கி மணமனைச்சென்ற செவிலிக்கு இருவரன்பும் உணர்த்தல்.

388. ஏக னநேகன் சிதம்பர வீசன் கலைசையினம்
மோகன வல்லி முலைமுகை காட்டி முகமலர்ந்து
பாகம் பதிந்திதழ்த் தேன்றர லாலன்னை பார்த்திபன்றான்
ஆகங் குளிரவண் டாயுண் டுவக்கு மனுதினமே. 6

### பாங்கி இல்வாழ்க்கை நன்றென்று செவிலிக்குரைத்தல்.

389. காளிதன் கேள்வர் கலைசைத் தியாகர் கருணைமலர்த்
தாளித மாத்தொழு வார்க்கன மூட்டித்தற் காத்துநின்வேய்த்
தோளிதற் கொண்டவற் பேணி யவரைச் சுவைதருபாற்
பாளித நாளு மிசைவித்துப் பூரிக்கும் பான்மையளே. 7

### மணமனைச்சென்றுவந்த செவிலி பொற்றொடி கற்பியல் நற்றாய்க்கு உணர்த்தல்.

390. சிவமுத லாந்தென் கலைசைத் தியாகர் சிலம்பினின்மான்
அவமுந் திரியு முறாமனை வாழ்க்கைக்கற் பாற்கிரக
நவமுநன் றாகவென் றானன்மை யேதரு நந்தியபா
தவமுந் தழைகவென் றாற்றளிர் தோன்றித் தழைத்திடுமே. 8

---

388. முகை – அரும்பு. பாகம் – பக்கம், பக்குவம். இதழ் – கீழுதடு, மடல். அன்னை: விளி. தலைவியை வல்லியென்றதற் கேற்ப, முகை மலர்தல் இதழ்த்தேன் வண்டு என்பன கூறப் பட்டன.

389. தாளை இதமாக. ''தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்'' (குறள்.) அவரை – தலைவரை, பாற்பாளிதம் – பாற்சோறு. மிசைவித்து – உண்பித்து.

390. சிவமுதலாம் – முத்திக்கு முதலாகிய. சிலம்பில் நின் மான். அவம் முந்திரியும் உறா – வீண்செயல் முந்திரியளவும் உறாத. கிரகநவமும் – ஒன்பது கிரகங்களும். நந்திய – வாடிய. பாதவமும் – மரமும்.

### செவிலி நற்றாய்க்கு நன்மனைவாழ்க்கைத் தன்மை யுரைத்தல்.

391. அல்லாருங் கண்டர் கலைசைத் தியாக ரசலத்திலுன்
இல்லாரும் வாழ்வினி னல்லாண் மனைச்செல்வ
மெண்மடங்கால்
நல்லாய் நினக்கன்ப னியானொப் பாதுமந் நாதனம்மான்
எல்லாளில் வேலை வருவார்க் கடுவ திடுவதுமே. 9

### செவிலி நற்றாய்க்கு இருவர்காதலையும் அறிவித்தல்.

392. பின்னுஞ் சடையர் கலைசைத் தியாகர் பிறங்கலன்னாய்
பொன்னும் பணியு மிருள்வெளி சொற்பொருள் போற்பிறர்கள்
உன்னு மபேத முதன்மூன்று மன்றிநம் முத்தமியும்
மன்னும் பிரிவின்றி யேயொன்ற தாயுற்று வாழ்குவரே. 10

## 28. பரத்தையிற்பிரிவு.

### காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏது இதாமவ் விறைவிக் கென்றல்.

393. தண்ணாறு சூடுங் கலசத் தியாகர் தடங்கலைசை
உண்ணால் வகையுறுப் போடும் பவனிநல் லூரன்வரப்
பண்ணா லவிநயஞ் செய்மாதர் கொங்கை யிபங்களிற்றன்
கண்ணான பாகுற லாலாகு மாதயர் காரணமே. 1

---

391. உன் இல்லாரும் வாழ்வினின் – உனது இல்வாழ்க்கையைக் காட்டிலும். நல்லாள் – தலைவியினது. மடங்கால்; ஆல்: அசை. நினக்கன்பன் அந்நாதனையும், நீ அந்த மானையும், யான் எல்லாளையும் ஒப்பாதும்; அன்பன் – தலைவியின் தந்தை, நாதன் – தலைவன், மான் – தலைவி, எல்லாள் – தோழி. வருவார்க்கு அடுவதும் இடுவதுமே இல்வேலை.

392. பணி – ஆபரணம். பொன்னும் பணியும் அபேதத்திற்கும், இருளும் வெளியும் பேதத்திற்கும், சொல்லும் பொருளும் பேதாபேதத்திற்கும் உவமைகள். ஒன்றதாய் – ஒன்றாய்; அது: பகுதிப்பொருள் விகுதி. உத்தமி – தலைவி. மன் – தலைவன்.

393. கலைசையுள். நால்வகையுறுப்பு – யானை முதலியவை. மாதர் – பரத்தையர். கொங்கையாகிய இபம்; இபம் – யானை. கண்ணான பாகு; பாகு – பாகன். மாது – தலைவி. காரணம் ஆகும்.

### தனித்துழி இறைவி துனித்து அழுதிரங்கல்.

394. பந்தத்தை நீக்குங் கலைசைத் தியாகரைப் பற்றிலர்போற்
சந்தத் தடவரை மார்போன் பிரியத் தனித்திரங்கிக்
கந்தற் றழுதங்கந் தங்கம தாகவிக் கங்குலென்போல்
இந்தத் துயருறு வாருமுண் டோசில ரேமையரே. 2

### ஈங்கிது வென்னெனப் பாங்கி வினாதல்.

395. நவசத்தி கட்கு முரியோன் சிதம்பர நாதனருட்
சிவசத் தமலன் கலைசைநல் லூரன் றினமுமன்பாம்
கவசத்தை யிட்டுனைக் காக்கவு நீவன் கலக்கஞ்செய்வி
திவசப்பட டேங்குநர் போற்றேம்பு மாறென் றிருநுதலே. 3

### இறைவன் புறத்தொழுக்கு இறைமகள் உணர்த்தல்.

396. அஞ்சா னனங்கொள் கலைசைத் தியாகருக் கன்புசெய்யார்
நஞ்சா லென்னிங்கு நானைய மார்ப நயந்தனித்தான்
செஞ்சாலி சாய்தர மேதிப் பகட்டினஞ் சென்றயலே
பைஞ்சா யருந்தும் வயலூரன் சேரிப் பரத்தையர்க்கே. 4

### தலைவியைப் பாங்கி கழறல்.

397. ஓங்கார ரூபர் கலைசைத் தியாக ருயர்வரைதன்
பாங்காருங்கார் வறுங்கான்போய்ப்பொழிந்து பின்பாங்குறினும்
தோங்காணு மாறுள தோவணங் கேநந் துணைவரிந்நாள்
ஆங்காடு நீரிஃ தென்றனின் கற்புக் கழகல்லவே. 5

---

394. சந்தம் – சந்தனம், அழகு. கந்து - பற்றுக்கோடு. அங்கம் தங்கமது ஆக - உடம்பு பச்லைபூப்ப. கங்குலில்.

395. நவம் - ஒன்பது. அமலனது. விதிவசப்பட்டு.

396. அஞ்சு ஆனனம் - ஐந்து திருமுகங்களை. நஞ்சாலென - நைந்தாற்போல. நான் நையும்படி. சாய் - ஒருவகைக் கோரை. **துறைசைக்கோவை**, 399, பார்க்க.

397. தன் பாங்கு - தன் பக்கத்தில் தோம் - குற்றத்தை. நீர் - தன்மை. என்றல் அழகல்ல.

தலைவி செவ்வணி அணிந்து சேடியை விடுப்புழி அவ்வணி உழையர் கண்டு அழுங்கிக் கூறல்.

398. நலத்தினி னாட்டுங் கலசத் தியாகர் நறுங்கலைசைத்
தலத்தினின் மேவுந் தளிரியு லீரறந் தாங்கியதொல்
குலத்திருக் காவினிற் றோன்றிய தோர்கொடி கூறுமிவ்வூர்ப்
புலத்தினி லெங்கு மலரேறப் பெற்ற புது மையென்னே. 6

பரத்தையர் கண்டு பழித்தல்.

399. ஆரிய ரெங்கள் கலசத் தியாக ரருட்கலைசை
ஊரியற் செவ்வ லரிமாலை நீலங்க ளூடலர
நேரிய வண்டின் குழாஞ்சுமந் தேமுன் னிலவுதல்போற்
சேரியின் வாய்வந்து நின்றா ரிறைமனைச் சேடியரே. 7

பரத்தையர் உலகியல் நோக்கி விடுத்தலின் தலைமகன் வரவுகண்டு உவந்து வாயில்கள் மொழிதல்.

400. காவும்பர் பம்புங் கலைசைத் தியாகர் கருணையைப்போல்
மேவும் பிராட்டி விடுமேவன் மாதரை வித்தமிக்க
வாவும் பரத்தையர் சேரியிற் கண்டு மணிகொழித்துத்
தாவுந் திரைப்புன லூரன்வந் தான்பெருந் தன்மையிதே. 8

தலைமகன்வரவு பாங்கி தலைவிக்கு உணர்த்தல்.

401. பணமா சுணத்தர் கலைசைத் தியாகர்க்கன் பற்றவர்போல்
மணமாலை மார்பர் புறத்தா றுறினும் வழாமலொரு
கணமாத் திரையினிற் றேர்மீது வந்துன் கடையினின்றார்
குணமா வதுகொடி யேகுறை தீர்ந்தெதிர் கொள்வதுவே. 9

---

398. குலமாகிய பெரிய சோலையில். கொடி - கொடி போல்வாள். அலர் - பழிமொழி, மலர்; கொடியென்றதற்கேற்ப அலர் கூறப்பட்டது.

399. நீலங்களென்றது கண்களை. வண்டின் குழாமென்றது கூந்தலை. இறை - தலைவனது. சேடிக்குச் செவ்வலரிமாலை யுவமை.

400. கா - சோலை. உம்பர் - மேலிடத்தில். பம்பும் - பரவும். பிராட்டி - தலைவி. வித்தம் - பொன்னை. மிக்கு அவாவும்.

401. மார்பர் - தலைவர். புறத்தாறு - பரத்தையர்சேரி யிடத்து. கணம் - க்ஷணம். கடையில் - வாயிலில். எதிர்கொள்வது குணம்.

## தலைவனைத் தலைவி எதிர்கொண்டு பணிதல்.

402. ஆடல்வை வேலன்பர் சேர்ந்திடி னின்ப மலபிறவா
வாடலிங் கியானுற நீங்கின் வயாவும் வரம்பிலவாம்
கோடலங் கையாய் கலைசைத் தியாகரைக் கூடலர்போல்
ஊடலெவ் வாறெனக் கெய்தும் பசலை யொளிக்கையிலே. 10

## புணர்ச்சியின் மகிழ்தல்.

403. அந்நாட் கலைசைத் தியகே சருமற் றரியயனும்
மின்னார் பலர்தமைக் கொண்டின்ப மெய்தினர் மேவொருத்தி
தன்னாற் சுகமமை யாமலன் றோவித் தனிக்கொம்பர்வாய்
இன்னா ரமுதமுண் டானந்த மேலிட் டிருந்தனனே. 11

## வெள்ளணி அணிந்து விடுத்தல்.

404. தோயுந்தண் பாலி நுரையா மெனும்வெள்ளைத் தூசுபுனைந்
தாயுங்கற் பாரமுத் தாரமுஞ் சூடி யநங்கனறக்
காயுங் கனற்கட் சிதம்பர வீசர் கலைசையின்கட்
சேயுத யஞ்சொல வூரனுக் கோடினர் சேடியரே. 12

## வெள்ளணி அணிந்து விடுத்துழித் தலைமகன் வாயில்வேண்டல்.

405. மலவிகன் மாற்றுங் கலைசைத் தியாகரை வாழ்த்துமென்பாற்
சிலவித னங்களைப் பாராட்டி யின்று சிறக்கணிக்கும்
புலவியை நீவணங் கித்தணி சென்றுநின் போதனையால்
நிலவிய நற்குண நற்செய்கை மிக்க நிரைவளைக்கே. 13

---

402. ஆடல் - வெற்றி. இன்பமல - துன்பங்கள். பிறவா - உண்டாக மாட்டா. யான் வாடல் உற. வயா - வருத்தம். கோடல் - செங்காந்தள். பசலை - பிரிவால் வேறுபட்ட நிறம்.

403. அன்றோ எய்தினர். இனிய அரிய அமுதத்தை; வாயமுதம்.

*பி-ம்.* 'மின்னா ரிருவரைக்'

404. பாலி - பாலாறு. கற்பு ஆரம் - முல்லைமாலை. அநங்கன் - காமன். சேய் உதயம் - பிள்ளை பிறந்ததை. ஊர னுக்குச் சொல்ல ஓடினர்.

405. மல இகல் - மலத்தின் வலியை. விதனங்களை - வியசனங்களை. சிறக்கணிக்கும் - பார்வை சுருங்கும்; **(குறள் 1095.)** போதனையால் தணி

### தலைவி நெய்யாடியது இகுளை சாற்றல்.

406. கடல்வண்ண னேத்துங் கலைசைத் தியாகர் கருணையினால்
அடலயில் வேற்கண்ணி பாலற் பயந்துநெய் யாடினளால்
திடமுற வாங்கவண் மெய்யாற வேண்டுஞ் செறிதுனியும்
மிடலுடை யாவென்றி வீரா தணியவும் வேண்டுமின்றே. 14

### தலைவன் தன்மனத்து உவகைகூர்தல்.

407. செங்கையி லாடுங் கலைசைத் தியாகர்பொற் சேவடியை
அங்கையி னாற்றொழு நானின்று காண்ப னமுதிறைக்கும்
கொங்கையு மேந்து குழவியு நெய்யிட்ட கோலமும்பூ
நங்கைத னீர்மையும் பச்சுடம் பான நலத்தையுமே. 15

### தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றல்.

408. உலகாள மைந்தன் பிறந்தன னென்னுமு னொல்லைவந்துன்
இலகா டகமனை வாயினின் றாருன் னிடத்தைவிட்டு
விலகாநின் றாலுங் கலைசைத் தியாகர்தம் வெற்பினல்லோர்
நலகால் விருப்ப மொழிவர் கொலோவெங்க ணாயகியே. 16

### தலைவி உணர்ந்து தலைவனொடு புலத்தல்.

409. கலைப்பா வலர்சூழ் கலைசைத் தியாகரைக் காண்டகுநீர்
விலைப்பா வையர்மனைக் தேபோ மவரிட்ட மென்களபம்
முலைப்பாலும் மார்பிடைப் பாயிற் கரையு முழுவதுமென்
தலைப்பா லனையுஞ் சவலைய தாக்குத றக்கதன்றே. 17

---

406. பாலனைப் பயந்து. நெய்யாடினள் - எண்ணெய் தேய்த்து முழுகினாள். துனி - புலவியின் நீட்டம். மிடல் - வலி. உடையாத வென்றி. துனி தணியவும்வேண்டும்.

407. செங்கை - திருவாதிரை நாளில்; "செங்கையாட்டினார்" திரு நாகைக் காரோணப்) நான் இன்று காண்பன். அமுது - பால். பூ நங்கை தன் – தலைவியின்.

408. ஒல்லை – விரைவில். இலகு ஆடகமனை வாயில்; ஆடகம் – பொன். நல்ல கால் விருப்பம் – நல்ல பிள்ளையினிடத்துள்ள விருப்பத்தை.

409. விலைப்பாவையர் – பரத்தையர். போம் – செல்வீர். களபம் – கலவைச்சந்தனம். உம் மார்பிடைப் பால் பாயின் களபம் முழுவதும் கரையும். சவலையதாக்குதலென்பது குறிப்பு; சவலை – சவலைக்குழந்தை.

### தலைவி பாணனை மறுத்தல்.

410. பொன்மேடை மாடக் கலைசைத் தியாகர் புரக்குநன்னாட்
டன்மேவு கூந்தலெங் கைமயி லாடவவ் வண்ணன்முன்னே
இன்மேக ராகக் குறிஞ்சியைப் பாடங்ங னிங்ஙனநீ
வன்மேதி தின்னிநில் லேல்போக போக மறுமனைக்கே. 18

### வாயில்மறுக்கப்பட்ட பாணன் கூறல்.

411. செம்மேனி யப்பர் கலைசைத் தியாகரைச் சிந்தைசெயார்
தம்மேல் வினைவண்டு சூழ்ந்தெனக் கைக்கொண்டு தானெறிய
எம்மேல் விழுந்தகல் லிம்மேட தாயிற் றினிக்கல்லெடேல்
அம்மே யுனைவந் தனைபுரி வேன்சிவப் பாறுகவே. 19

### விறலி வாயில் மறுத்தல்.

412. மறலியைக் காய்ந்த கலைசைத் தியாகரை வாழ்த்தலர்போல்
அறலிழி யக்கண் சுருட்டிக் கிடந்தியா னயர்வுறுங்கால்
விறலியிங் கெய்திச் சுருட்டி யெடுக்கும் விதியளதோ
திறலிறைக் கானமின் னார்செவிக் கேசென்று தென்னிசையே.

---

410. அல் மேவு – இருள் மேவிய. எங்கை மயில் – என் தங்கையாகிய மயில்; எங்கையென்றது பரத்தையை. அங்ஙன் – பரத்தையர்சேரியில். மேதி – எருமை; மேதிதின்னி: "கன்றுபெறு வல்சிப் பாணன்" (**நற்**. 310); "பொய்கொண்டு நிற்கலுற் றோபுலை யாத்தின்னி போந்ததுவே" **சிற்**. 386.

411. வினை வண்டு – பாவமாகிய வண்டு. சிவப்பு–கோபம். "அறிந்தில ரென்னக் கொதித்துப் புகையுயிர்த் தம்மவென்மேல், எறிந்தகற் போது மினிக்கல் லெடேலெம் பிராட்டிபந்தம், பறிந் திடச் செய்தருள் கோமுத்தியீசர் பதியரசூர்ச், செறிந்தவர் போலுன தாள்பணி வேன்சுதந் தீர்ந்தருளே" **திருவாவடுதுறைக்**. 414.

412. மறலியை – யமனை. அறல் – நீர். கண்ணில் அறல் இழிய. சுருட்டிக் கிடந்து – முடங்கிக் கிடந்து. விறலி: விளி. சுருட்டி – ஓர் இராகம். "கண்சுருட்டி யோகர் கருத்தறிவெல் லாஞ்சுருட்டிப், பண்சுருட்டி பாடுமிசைப் பாடினியே" (**விறலி விடுதூது**.) இறைக்கு ஆன மின்னார்; இறை – தலைவன். தென் இசை – இராகத்தைப் பாடு.

### கூத்தர்வாயில் மறுத்தல்.

413. சிதம்பர்க் கரியர் கலைசைத் தியாகர் திருநடங்கண்
டிதம்பெற் றிலாரி னிருப்பேற்குன் கூத்தினி தாகுங்கொலோ
நிதம்பத்தை விற்றுய்யும் பூவையர் பூரிக்க நீயங்குற்றுன்
மதம்பெற்ற வாட்டினைக் காட்டுக கூத்த மகிழ்நர்முன்னே. 21

### பாங்கிவாயில் மறுத்தல்.

414. மதலையைச் சூடுங் கலசத் தியாகர் வருமுதலில்
மதலையை யேந்தி கலைசைக் கணிகையர் மார்பிடையின்
மதலையைக் கைக்கொண் டுவப்புறு வாரென் வயிற்றுதித்த
மதலையைக் காணவின் றெய்தின்மின் னேயவர் வாஞ்சைநன்றே. 22

### விருந்தொடு வந்துழிப் பொறித்தல் கண்டு தலைமகன் மகிழ்தல்.

415. இண்டைச் சடையர் கலைசைத் தியாகர்க் கினியதிருத்
தொண்டைத்தொன்னாடனையாடுனிதீர்ந்திவடொண்டைச் செவ்வாய்க்
கண்டைப்பொருமின்சொற்கேட்டிளமூரலுங் கண்கள்கொண்டென்
பண்டைத் தவநல் விருந்துரு வாய்வரப் பார்த்தனமே. 23

---

413. சிதம்பர்க்கு – தீழ்மக்கட்கு. பெற்றிலாரின் – பெறாதவரைப்போல. மதம் பெற்ற ஆட்டினை – களிப்பினையுடைய கூத்தை. ஆட்டினை – கூத்தை, ஆட்டுக்கிடாயை; சிலேடை.

414. மதலையைச் சூடும் – கொன்றையை அணியும். முதல் இல் மதலையை - தலையை. ஏந்தி – ஏந்தியவரது; பெயர். மார்பில் உள்ள இடையில்லாத மதலை; என்றது மலைபோன்ற தனத்தை. மதலையை – பிள்ளையை. நன்று – நன்றன்று என்றபடி; குறிப்பு.

415. இண்டை – ஒருவகை மாலை. தொண்டைத்தொன்னாடு – தொண்டை நாட்டை, தொண்டை – கொவ்வைக் கனி; வாய்க்கு உவமை. கண்டை கற்கண்டை, மூரலுங் கண்கள் கொண்டு பார்த்தனமே.

பி - ம். 'துயர் தீர்ந்து'

## தலைவன் சீறேலென்றவள் சீறடி தொழுதல்.

416. ஒறுத்தார்க் கொருபொழு தின்பம் பொறுமை யுடையவர்நீர்
நிறுத்தா ருரைப்பர் கலைசைத் தியாகர்க்கு நேசம்வையார்
செறுத்தா லெனக்கதஞ் செய்யேல் பிழைபல செய்திடினும்
பொறுத்தா ரருள்செயுன் சிற்றடி பற்றினன் பொற்றொடியே. 24

## ஈது எங்கையர் காணின் நன்றன்றென்றல்.

417. தங்கச் சிலையர் கலைசைத் தியாகர்தழைந்துசந்த
தங்கச்சி மேயவர் நாடுடை யீர்செழுந் தண்ணறுஞ்சந்
தங்கச் சிடுந்தனந் தோயவென் றாடலை தாங்குதலென்
தங்கச்சி மைக்கெண்டை கண்டா லுமக்குச் சழக்குறுமே. 25

## அங்கவர் யாரையும் அறியேனென்றல்.

418. வடிவாள் விழிவடி வேதுனி தீர வருட்டியுன்சி
றடிவாரி சம்பிடித் துந்தணி யாவிதெ னன்பர்வினை
கடிவார் கலைசைத் தியாகேசர் தோய்சிவ கங்கையிலே
படிவார் படிய நினைப்பர்கொல் புல்வாய்ப் பனிப்புனலே. 26

---

416. "ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந்துணையும் புகழ்" என்பது குறள். நீர் நிறுத்து – தன்மையை அளவிட்டு. ஆர் உரைப்பர் : நீர்மை சொல்வதற்கு அரியதென்றபடி. கதம் – கோபம்.

417. தங்கச்சிலையர் – மேருமலையை வில்லாகவுடையார். சந்ததம் கச்சி மேயவரது. சந்தம் கச்சு இடும் தனம்; கச்சிடும் (கைக்கும்) தனம் என்பது ஒரு குறிப்பு. தாளைத் தலையில் தாங்குதல் – பணிதல். தங்கச்சி – தங்கை; என்றது பரத்தையை. கெண்டைகளென்றது அவள் கண்களை. சழக்கு – துன்பம்.

418. வடி – கூர்மை. வடிவே – வடிவத்தையுடையாய். வருட்டி – வற்புறுத்தி, தணியா இது என். புல் வாய்ப்பனிப் புனல் – புல்லின் நுனியிலுள்ள பனித்துளியில்.

### காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

419. நங்கான் முளைவிளை யாடத் தெருவிடை நாடிக்கண்டே
பொங்காசை யாய்த்தழு வாவுச்சி மோப்பவுன் புத்திரனே
தங்காயிவ் வீடுன்ன தேவா வெனத்தலை சாய்த்துச்சென்றாள்
கங்கா தாரெங் கலசத் தியாகர் கலைசைமின்னே. 27

### தலைவியைப் பாங்கி தணித்தல்.

420. இகலிரு ணீக்குங் கலைசைத் தியாகர்க் கினியதிருப்
புகலியன் னாய்மன்ன ருன்னடி சூடவும் பொங்கனன்றோ
அகலிகைக் காசைப்பட் டாயிர மம்பக மம்மகவான்
உகலின்மெய் பெற்றுவந் தும்மிந்தி ராணி யுவர்த்திலளே. 28

### தலைமகன் ஊடல்.

421. தீராப் பழவினை தீர்க்குங் கலைசைத் தியாகர்வெற்பிற்
பேராசைப் பட்டயர் பேதைநெஞ் சேவஞ்சம் பெற்றவிவள்
நாராய நீத்தன் றுயிர்த்துணை யாகி நமைக்கலவா
வாரா வழியி லடிநோவ வந்த மயிலல்லளே. 29

### பாங்கி அன்பிலை கொடியை யென்றல்.

422. கரும்புள் ளுவமையில் சாறெனச் செல்வியைக் கண்டுண்டநீர்
துரும்புள் ளுவரென வெண்ணிவிட் டீரின்று தொல்கலைசை
இரும்புள் ளுவந்தவன் போற்றுஞ் சிதம்பர வீசர்த்தொழார்
தரும்புள் ளுவமொழி நூலின்மின் னார்த்தண வாதிருமே. 30

---

419. கான்முளை – பிள்ளை. பொங்கு ஆசையாய். வா என – வா என்று யான் சொல்ல. மின் – மின்போல்பவளாகிய காமக்கிழத்தி. மின் சென்றாள்.

420. இருள் – அஞ்ஞானமாகிய இருட்டை. புகலி – சீகாழி. பொங்கல் – கோபித்தல். அம்பகம் : சிலேடை; ஒன்று கண்; மற்றொன்று இடக்கர்ப்பொருள். உகல் இல் – உகுதல் இல்லாத. உவர்த்திலள் – வெறுத்தாளில்லை.

421. அயர் – வருந்துகின்ற. நார் ஆயம் – அன்பையுடைய தோழிமார் கூட்டத்தை. கலவா – கலந்து. வாரா வழியில் – பாலைநிலத்துவழியில்.

422. கரும்பு – உள் – கரும்பின் உள்ளே இருக்கின்ற. கண்டு உண்ட. துரும்பு உள் உவர் என – துரும்பினுள்ளேயுள்ள வுவர்நீர் என்று; துரும்பென்றது கரும்பின் கொழுத்தாடையை. புள்ளுவம் மொழி நூல் - வஞ்சனையை மொழிகின்ற நூல்களை; புள்ளுவம் – வஞ்சனை.

பாங்கிதலைவற்குமகப்பொறைகூர்ந்தவண்ணம்உரைத்தல்

423. இச்சைவ நாதர் கலசத் தியாக ரெழிற்கலைசைச்
செச்சையம் பூவண்ண மானாள் சிறுவற் றரித்தசெவ்விக்
கொச்சையில் லாமற் றமதெழில் பெற்றன கொற்றவமால்
பச்சையம் பாயலு நீலமு மின்னும் பவளமுமே. 31

தலைவன் புதல்வனைக் காண்டல்.

424. கோவுந் தனமு மறையோர்க் களித்தலர் கூரவியும்
கோவும்பர்க் கேற்றிக் கலைசைத் தியாகரைக் கும்பிட்டெந்தக்
கோவு மிவற்கொப்பி லென்றே புலவர்கள் கூறவிரு
கோவுங் களிப்பப் பொருளைக்கண் டேந்தினன் கொற்றவனே.

தலைவன் பள்ளியிடத்து அழுங்கல்.

425. தமக்காரு நேரில் கலைசைத் தியாகர்தந் நாட்டினிற்ப
துமக்கா டுறுதடத் தன்னமன் னீரிரு தோளொடுங்குங்
குமக்கான் முலையும் புதுப்பூ வணையது கொள்ளநல்கி
எமக்காக வின்று பழம்பூ வளித்தனி ரென்செய்வதே. 33

---

423. பாயல் – ஆலிலை. நீலம் – நீலமலர். மின் – மின்னல். வயிறு, கண்கள், இடை, அதரம் இவற்றுக்குத் தோற்று அழகிழந்திருந்த ஆலிலை முதலியவைகள் இவள் கருவுற்ற நாளில் தமக்குரிய பண்டைக் கவின்பெற்றன; இவளுறுப்புக்கள் வேறுபட்டிருந்தன என்றபடி; **திருவாவடுதுறைக்கோவை**, 426 – ஆம் செய்யுளைப் பார்க்க; "சிலந் தகைபெறு சாலியன் னாள்சிறு வற்றரித்த, காலந் தமது கவினிறம் பெற்றன கால மின்னும், கோலந் தருஞ்செங் குமுதமு நீலமுங் குன்றெடுத்த, பாலன் துயில்கொண்ட பாயலுங் காலைப் பதுமமுமே" **அம்பிகாபதிகோவை**.

424. கோ – பசுக்கள். அலர்கூர் – பூக்கள்மிக்க. கோ உம்பர்க்கு; கோ - விண்ணுலகம். எந்தக்கோவும் – எந்த அரசனும். ஒப்பு இல். இரு கோவும் – இரண்டு கண்களும். பொருளை - பிள்ளையை.

**பி.ம்.** 'புலவர் குலவ'

425. பதுமக் காடு - தாமரைக்காடு. குங்குமக்கான்; கான்– நறுமணம். பழம்பூ என்றது கூந்தலில் அணிந்த பூவை. இத் துறை புறங்காட்டலென்றுங் கூறப்படும்.

## காமக்கிழத்தி வாயில் வேண்டல்.

426. திருப்பங் கயத்தடஞ் சூழுங் கலைசைத் தியாகர்வெற்பர்
விருப்பங் கயலிடத் தேசென்று மீள்கினு மேதகுநீ
உருப்பங் கயமை யுடையோரிற் செய்த லுனக்கழகே
பொருப்பங் கயமருப் பேர்முலைச் செல்வி பொறுத்தருளே. 34

## பாங்கி வாயில்நேர்வித்தல்.

427. ஆமேவு பாலனை யாரணி மாத ரவர்க்கருந்தும்
பூமேவு மன்னமன் னார்கழற் காளையர் பூங்குழையாய்
நீமேலெங் கும்பசப் பூரநின் றேங்குமிந் நீர்மையென்னே
நாமேவி யேத்துங் கலைசைத் தியாகர்நன் னாட்டகத்தே. 35

## மகனும் ஆற்றாமையும் வாயிலாகத் தலைமகன் வந்துழித் தலைமகள் எதிர்கோடல்.

428. நெறியாய்ந்த மேலவர் வேட்கைக் கடும்பரி நெஞ்சுறினும்
சிறியா ரிடத்திற் செலுத்துவ ரோசிவ காமியிடம்
பிறியாமல் வாழுங் கலைசைத் தியாகர் பெருவரங்கொள்
பொறியாள ரான புனலூரர் காமம் புகல்வதன்றே. 36

---

426. விருப்பு - விருப்பத்தைப்பெற்ற. விருப்பு அங்கு அய லிடத்தே; அயலிடம் - பரத்தையிடம். உருப்பம் - கோபத்தை. கயமை – கீழ்மை. உருப்பம் செய்தல் உனக்கு அழகன்று. பொருப்பு அம் கயம் மருப்பு; கயம் – யானை.

427. ஆம் மேவு பால் – நீர் கலந்த பாலை. அன்னம் – அன்னப்பறவை. மேல் எங்கும் – உடம்பெங்கும்.

பீ.ம். 'ஆமேறுபால்'

428. வேட்கைக்கடும் பரி – காமவேகம்; பரி – குதிரையுமாம். பொறியாளரான - அறிவையுடையவரான.

## தலைமகன் நீங்கியபின் வந்த பாங்கியொடு தன் மகளைப் புகழ்தல்.

429. கலனாகங் கைக்கொள் கலசத் தியாகர் கலைசையன்னாய்
கலநாரங் காற்றவென் கண்ணைத் துடைத்தன்பர் காமுறமங்
கலநாளு மோங்கிடத் தந்தானென் மைந்தனிற் காந்தைக்குநன்
கலனா வதுநன் மக் கட்பே றெனும்பயன் கண்டனமே. 37

## தலைவி தலைமகனைப் புகழ்தல்.

430. ஒருகேடில் கொம்பர் கலசத் தியாக ருறைகலைசைக்
கொருகே சரியன்ன வன்பர்நம் பாலன் றுயிரின்வைத்த
ஒருகேண்மை யின்று மொருவாமற் கூடி யுவப்புறலால்
ஒருகே ளிருமில்லை கண்டாய்கொண் டானி னுலகிடத்தே. 38

## பாங்கி தலைவியைப் புகழ்தல்.

431. பாலிநன் னாடர் கலைசைத் தியாகர் பதம்பணியார்
போலிவர் செய்பிழை யெல்லா மறந்து புரிவுடனே
வாலிதின் மிக்கு மகிழ்ந்தெம் பிராட்டி வணங்குதலாற்
சாலியும் போற்றுந் தவமுடை யாளென்று சாற்றுவனே. 39

---

429, கலனாகம் கைக்கொள் - உண்கலனாகத் தலையைக் கையிலே கொண்ட; ககரவொற்றுத் தொகுத்தல்விகாரம். கலநாரம் - கல அளவாகிய நீரை, காமுறவும் மங்கலம் நாளும் ஓங்கிடவும். இல் காந்தைக்கு - இல்வாழ்க்கைக்குரிய ஒரு மங்கைக்கு. "மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன், நன்கல நன்மக்கட் பேறு" (**குறள்**, 60) என்பதைத் தழுவி வந்தது இச்செய்யுளின் ஈற்றடி.

430. கொம்பர் - கொம்பு போன்ற தோழியே; விளி. கேசரி-சிங்கத்தை. அன்பர் - தலைவர். அன்று - எதிர்ப்பட்டகாலத்தில், ஒருவாமல் - நீங்காமல். கேளிர் - உறவினர். கொண்டானின் - கணவனைக் காட்டிலும்; "கொண்டானிற் றுன்னிய கேளிர் பிற ரில்லை" **நான்மணிக்**. 56.

431. இவர் என்றது தலைவனை. புரிவுடன் - அன்புடன், வாலிதில் - தூய்மையின்கண். சாலி - அருந்ததி.

## 29. கல்வியிற் பிரிவு.

### கல்வியிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

432. பானற்கண் ணாய்தென் கலைசைத் தியாகர் பரிந்தளிக்கும்
ஞானக்கண் போலுநற் கல்விகண் டாயித்தை நாடிக்கல்லார்
ஈனக் கணிகையர் நெஞ்சவஞ் சத்தி னிருள்புதைப்ப
ஊனக்கண் கொண்டிங் குழிதரு வார்பய னொன்றிலரே. 1

### பாங்கி விலக்கல்.

433. ஒருதா துவைமுன் பலதாது வாக்கி யுயிரளித்தே
விருதாளுஞ் சண்பையர் மன்போ லிவளுயிர் மீட்கும்வித்தை
கருதார்க் கரிய கலசத் தியாகர் கலைசைமன்னா
இருதாறும் வைகியுங் கற்பா யெனிற்செல்க விப்பொழுதே. 2

---

432. பானல் - கருங்குவளைமலர். கல்வி ஞானக்கண் போலும். இத்தை - இக் கல்வியை; வழக்கு. வஞ்சத்தின் - வஞ்சம் போல. இருள் - அறிவின்மை. கல்லார் உழிதருவார் பயனிலர்.

433. ஒரு தாது - ஏழு தாதுக்களில் ஒன்றாகிய என்பு. பல தாது ஆக்கி - பல தாதுக்களாலாகிய உடம்பாக்கி; "அறைவட மொழிந வின்ற பாணினி யகத்து நாண, இறையமர் மயிலை மூது ரிருந்தவோர் தாதுகொண்டே, நிறைதர வொராறு மேலு நிரப்பு தென் மொழிந வின்ற, மறையவன் காழி வேந்தன் மலரடிக் கன்பு செய்வாம்" (**கண்டதேவிப்புராணம்.**) விருது - வெற்றி. சண்பை யர்மன் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார். இருது ஆறு - கார் முதலிய ஆறு பருவமும். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் என்பைப் பெண்ணாக்கிய வரலாறு இங்கே அறிதற்குரியது. "ஓது வதற்கண்ண லேபிரிந் தாலொன் மயிலையென்பு, மாது படுத்தினர் போலோதி வாரும் வருந்தமிழைக், கோது பிரித்தறி கோமான் குலோத்துங்கன் கோழிவெற்பில், தீது படக்கொடி யாவிசென் றாலுந் திருப்பு கைக்கே" (**குலோத், கோ. 479**); **கோடீச்சுரக்கோவை**, 422-ஆம் செய்யுளையும் அதன் குறிப்புரை முதலியவற்றையும் பார்க்க.

### தலைவன் பாங்கியை உடன்படுத்தல்.

434. இடையற்ற கல்வியிற் பாய்மன மோர்நிலை யெய்துதற்கே
தடையற்ற கல்வி யொருதலை யாப்பெறத் தக்கதுமால்
நடையற் றவர்வாழ் கலைசைத் தியாகர்நன் னாடனையாய்
கடையற்ற கல்வியென் றேயேவ லாம்வினை கட்டுரையே. 3

### பாங்கி உடன்படுதல்.

435. வல்வினை தீர்க்கு மருந்தாய்த் தெரிந்திட வல்லவர்க்குத்
தொல்விதி யேய்ப்ப வெழுமைப் பிறப்புந் தொடர்ந்து தவும்
கல்வியென் றாலஃ தியாவருங் கற்குங் கடனுளதே
நல்விதி போற்றுங் கலைசைத் தியாகர்நன் னாட்டகத்தே. 4

### தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

436. வயவா ணயனி கலசத் தியாகர் மகிழ்ந்தருள்பங்
கயவாவி சூழுங் கலைசையர் போற்கல்வி கற்றிலர்தாம்
பயவாக் களரனை யாரென்று கூறியுன் பான்மிகுந்த
தயவா ரிதியைவைத் தார்படர்ந் தாரத் தழற்சுரமே. 5

---

434. இடையற்ற கல்வியின்=கவியின் - குரங்கைப் போல. ஒருதலையா - உறுதியாக, கல்வி பெறத்தக்கது. மால்நடை - மயக்கத்தையுடைய ஒழுக்கம். கடையற்ற கல்வி=கல் - கற்பா யாக. ஏவலாம் வினை - ஏவல் வினைமுற்றை; என்றது கல்லென்பதை.

435. விதி ஏய்ப்ப - ஊழை ஒப்ப. எழுமைப் பிறப்புந் தொடர்ந்துதவும்: "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து" (**குறள்**, 398). நல்விதி - பிரம தேவர்.

436. வாள் நயனி - வாளைப்போன்ற கண்களையுடையாய். பங்கயவாவி - தாமரைமலரையுடைய தடாகம். கலைசையர் - கலைசையில் உள்ளவர்கள். பயவாக் களர் - பயன்படாத களர் நிலம்; "உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக், களரனையர் கல்லா தவர்" (**குறள்**, 406.) தயவாரிதி - அருளாகிய கடல்; தய: ஆகாரம் தமிழ் விதிப்படி குறுகிற்று. படர்ந்தார் - சென்றார்.

**பி - ம்.** 'தயவாநிதி'

### கார்ப்பருவம் கண்டு தலைவி வருந்தல்.

437. மடலவிழ் கோதை கலைசைத் தியாகர்முன் மார்க்கண்டர்க்கா
மிடலடு கூற்றுவ னார்த்துவந் தென்னவிவ் வேலையுண்ணாப்
படலமை மேகமென் னாருயிர் சோரப் பரந்துங்கல்விக்
கடலருந் தச்சென்ற மேகநம் பால்வரக் காண்கிலமே. 6

### தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.

438. அத்தி நிசாசரர் தாமே கடைய வமிர் தமண்மேல்
அத்தி பெயர்க்கவந் தார்த்தா லெனக்கா ரதிர்ந்து றலால்
அத்திவெண் டாமர் கலைசைத் தியாகர்வெற்
பண்ணல்பொற்றேர்
அத்திரம் போற்கண்ணி யின்றே வருநம் மணிநகர்க்கே. 7

## 30. காவற்பிரிவு.

### தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

439. தொல்லற மோங்குங் கலைசைத் தியாகர் சுருதிவழி
நல்லறங் காக்கவுந் தீதற நீக்கவு நானிலக்குச்
செல்லறங் காமலுஞ் செல்லு தலைச்செய்வ தேகடனாம்
அல்லற னேர்குழ லாய்நாடு காவ லரசருக்கே. 1

### தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

440. அக்கா தரமொழித் தெல்லா வுயிர்க்கு மருள்கலைசைத்
திக்காடை கொண்ட சிதம்பர வீசர் திருவருளால்
இக்கா சினிமுற்றுங் காப்பான் றிருவுளத் தெண்ணினரால்
மைக்காவி போல்வண்ணக் கண்ணெம் பிராட்டிநம் மன்னவரே.

---

437. கோதை: விளி. வேலை உண்ணா - கடலை உண்டு. படல மை மேகம் - கரிய மேக படலம்.

438. அத்தி - கடலை. அத்தி பெயர்க்க - மலையைப் பெயர்க்க. நிசாசரர் அத்தியில் அமிர்தங்கடைய மண்மேல் வந்து அத்தி பெயர்க்க ஆர்த்தாலென்ன. அத்தி வெண் தாமர் - என்பு மாலையை அணிந்தவர். அத்திரம்போல் - அம்பைப் போலும்.

439. தீது அற நீக்கவும். நானிலத்திற்கு, செல்லல்தங்காமல்; செல்லல் - துன்பம். அல்லையும் அறலையும் நேரும்; அறல் - கரு மணல்.

440. அ காதரம்; அ: உலகறிசுட்டு; காதரம் - அச்சம். காவி - கருங்குவளை மலர், மன்னவர் எண்ணினர்

### தலைவி கூதிர்ப்பருவம் கண்டு வருந்தல்.

441. தீவல வேலன்ன கண்ணாய் கலைசைத் தியாகரருள்
ஏவல்கொண் டேகொண்ட லெங்குஞ் சொரிந்துபி னெஞ்சிநின்ற
தூவல்கொண் டேவட கால்சுற்று நாளிவை தோன்றலகொல்
நாவலந் தீவெனு மிப்படிக் காவ னயந்தவர்க்கே. 3

### தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.

442. ஆவினஞ் சேற்குங் கலைசைத் தியாகருக் கன்பிலர்போற்
பூவினங் காய்வருந் தேனம் புரவலர் பூங்கழற்கால்
மேவினர் கையுறை யும்பகைத் தார்தம் விருதுங்கொண்டே
மாவினன் வையத்தில் வந்தெனத் தேர்மிசை வந்தனரே. 4

## 31. தூதிற் பிரிவு.

### தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

443. கூடாத வெம்பகை கூர்ந்திரு வேந்தர் கொடுஞ்சமரின்
வீடாமற் சென்று விலக்குப் மீண்டு வருந்துணையும்
சேடார் கலைசைத் தியாகேசர் தண்டக தேசமன்னாய்
சூடா மணியனை யாடுளங் காவகை சொல்லுகவே. 1

---

441. எஞ்சிநின்ற - மிக்குநின்ற. தூவல் - தூவுதல். வடகால் - வாடைக் காற்று. படி - தேசம்.

442. ஆவின் அஞ்சு ஏற்கும் - பஞ்சகௌவியத்தை ஏற்றருளும். பி - ம். ஆவினஞ் சேக்கும் - பசுக்கூட்டங்கள் தங்கப் பெற்ற, பூவில் நங்காய் - திருமகள் போல்வாய், வருந்தேல். கழற்கால் மேவினர் கையுறையும் - அடிபணிந்த அரசர் கொடுத்த கையுறையையும். விருது - கொடி முதலியவை. இனன் - சூரியன். வையத்தில் - தேரில்.

443. கூடாத - சேராத. கூர்ந்து - மிக்கு. வீடாமல் - இறவாமல். விலக்குபு - விலக்கி. சேடு - பெருமை. அனையாள் துளங்காவகை.

## தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

444. அத்தலை யோரிரு கோக்கண் மிகைகொண் டமரிழைக்கும்
இத்தலை சேருங்கன் மாற்றுதல் வேண்டியங் கேகலுற்றார்
பைத்தலைத் துத்திப் பணிமணி யல்குற் பணிமொழியாய்
நத்தலை வாவிக் கலைசைத் தியாகர்நன் னாட்டன்பரே. 2

## தலைவி முன்பனிப்பருவம் கண்டு வருந்தல்.

445. திருவேள்வி யந்தணர் செய்யுங் கலைசைத் தியாகர்நன்னாட்
டிருவேற் றரசர் பகைமாற்றச் சென்றவ ரெண்ணிலர்கொல்
உருவேற தாய்மங்கு றெற்கோட யாரு முடன்மறைக்க
மருவேறு பற்பங்கள் பற்பங்க ளாக வரும்பனியே. 3

## தலைமகளைத் தோழி ஆற்றுவித்தல்.

446. விரையுந்து கூந்தனல் லாயஞ்சல் வந்தனர் மேதினிதான்
கரையும் படிமொழி முன்பனி நாட்கன மாமறைகள்
இரையுங் கலைசைத் தியாகேச ருக்கன் பிலார்வினையே
புரையும் பகைமன்னர் போர்தணிப் பானன்று போந்தவரே. 4

---

444. அத்தலை - அவ்விடத்து. இரு கோக்கள் - இரண்டு அரசர்கள். மிகை - பகை. இ தலைசேரும் கல்=இகல் - பகை. நத்து - சங்குகள்.

445. சென்றவர் - தலைவர். உரு வேறதாய் - வெளுத்து. மங்குல் – மேகம். வடகாற்றுவீசும்காலமாதலின் மேகம் தெற்கோட என்றார். மறைக்க - போர்வையால் மூட. மரு – நறுமணம். பற்பங்கள் பற்பங்களாக – தாமரைப் பூக்கள் பொடியாக; பற்பம் – பத்மம், பஸ்மம்; **பிரயோகவிவேகம்**, திங்குப் படலம், 2, உரையைப் பார்க்க.

446. விரை – வாசனையை. முன்பனி பொழியும் நாளில். இரையும் – முழங்கும். அன்று போந்தவர் வந்தனர்.

## 32. துணைவயிற் பிரிவு.

### தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

447. செருத்துணையாய்மன்னர்தெம்முனைச்சென்றியான் றிரும்பளவும்
கருத்துணை யான கலைசைத் தியாகர் கதமிலருள்
உருத்துணையாயன்பர்க்கின்புசெய்தாலென்ன வொண்ணுதலாய்
திருத்துணை யான தெரிவைக் கறிவித்துத் தேற்றுகவே. 1

### தோழி மறுத்தல்.

448. இரவல ரம்பிறைக் கும்மதன் ஞாட்புக் கிடைதருகொம்
பரவல நீங்கத் துணையா யிருக்கிற் பலனல்லவோ
அரவலங் காரர் கலைசைத் தியாகரை யாதரியாப்
புரவலர் போர்த்துணை யாப்புறம் போகப் புகன்றவரே. 2

### தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

449. கட்டாரி யாதி படைதிரித் தேமன்னர் காளையமேற்
சுட்டா நடந்தனர் தோகையன் னாய்நமர் சூழ்ந்துசிறார்
வட்டாடும் வீதிக் கலைசைத் தியாகரை வாழ்த்தலர்போல்
ஒட்டா ரிடுநொச்சி யாதுகொ லாயங் குறுகின்றதே. 3

---

447. செருத்துணையா - போருக்குத் துணையாக. அருள் : எழுவாய். திருத் துணையான - திருமகளுக்கு ஒப்பான.

448. இரவு அலர் அம் பிறைக்கு - இரவில் வெளிப்பட்ட அழகிய பிறைக்கு. மகரவொற்று விரித்தல் விகாரம். ஞாட்புக்கு இடைதரு - போர்க்குப் பின்னிட்ட. கொம்பர் அவலம்; கொம்ப ரென்றது தலைவியை. ஆதரியாப் புரவலரென்றது ஆதரிப்பார் பகைமை கொள்ளாரென்பதைக் குறித்துநின்றது.

449. கட்டாரி - ஒருவகை ஆயுதம். திரித்து - சுழற்றி. காளையம் - போர். சுட்டா - குறித்து. நமர் - நம் தலைவர். வட்டாடுதல் - ஒருவகை விளையாட்டு; ''கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டாடும்'' (நற். 3 : 4); ''பொருது வட்டாடுஞ் சிறார் வீதி யைந்நதிப் புண்ணியர்'' (திருவையாற்றந்தாதி) நொச்சி - மதில். யாது கொலாய் அங்கு உறுகின்றதே - இப்பொழுது எந்த நிலையில் உள்ளதோ; அழிந்திருக்குமென்றபடி.

### தலைவி பின்பனிப் பருவம் கண்டு வருந்தல்.

450. தெள்ளும்வெண் ணீற்றர் சிதம்பர நாயகர் தென்கலைசைப்
புள்ளுஞ் சிறகிற் பெடையொடுக் கிப்பிள்ளை போற்றித்துயில்
கொள்ளும் பனிதூங் கிரவிலித் துன்பங் கொளக்கருவில்
தள்ளும் வினைசுமந் தேனைப்பெற் றாளன்னை தான்சுமந்தே 4

### தலைவியை தோழி ஆற்றுவித்தல்.

451. கும்பங் கொடுத்த கலைசைத் தியாகர் குளக்கணுஞ்சீ
தம்பம் பிடவசை யுங்குளிர் வாடை தணந்தவர்க்குக்
கம்பஞ்செய் பின்பனி நாளின்வந் தார்நண்பர் கவ்வையற
அம்பந் தணைவிர லாய்துணை யாய்முன் னகன்றவரே. 5

## 33. பொருள்வயிற் பிரிவு.

### தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

452. ஆசையுண் டேல்வெம் படையுள தாகிடு மப்படையால்
ஆசையெல் லாம்பெற் றரசாட்சி யைப்பெற லாகுமன்றே
ஆசையி னானல் லறங்கள்செய் தின்பமுற் றாற்றிடலாம்
ஆசை யறுக்குங் கலைசைத் தியாக ரருட்பணியே. 1

---

450. கருவில் தள்ளும் வினை - பிறப்பில் தள்ளும் தீவினையை.

451. கொடுத்த - பிரமனுக்கு அருளிய. குளக்கண்ணும் - நெற்றிக் கண்ணாகிய அக்கினியும். சீதம் பம்பிட; பம்பிட - பரவ. வாடை - வாடைக் காலத்தில். கம்பம் செய் - நடுக்கத்தை உண்டாக்கும். நண்பர் கவ்வை - நண்பர்களுடைய கவலை. அகன்றவர் வந்தார்.

452. ஆசை உண்டேல் - செல்வம் இருந்தால்; ஆசை - பொன். படை - சேனை. ஆசையெல்லாம் - திசை யெல்லாம். ஆசையினால் - விருப்பத்தோடு. ஆசை அறுக்கும் - குற்றத்தை நீக்கும்; ஆசு - குற்றம். அருட்பணியை ஆற்றிடலாம். இதன் முதலிரண்டடிகளும், ",பொன்னி னாகும் பொருபடை யப்படை, தன்னி னாகுந் தரணி" (சீவக 1923) என்பதைத் தழுவி வந்தன.

## பாங்கி மறுத்தல்.

453. சினக்கோல மால்விடை யூர்திச் சிதம்பர தேவர்நந்த
வனக்கோ விருந்த புரநாட் டதிப மணமகலாத்
தனக்கோ கனக முழுவது மீபவ டரனிருக்க
எனக்கோ வரையும்விட் டப்பா லிருப்பதற் கிச்சிப்பதே. 2

## தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

454. தேசிக வாழ்வு சிறுபிறை வாணுதற் செல்வியன்பர்
தேசிக மில்லெனி னில்லென்று பக்குவஞ் சேருயிர்க்குத்
தேசிக ராய்வந் தருளுங் கலைசைத் தியாகர்வளர்
தேசிக முங்கொண்ட தண்டக நாட்டகஞ் சென்றனரே. 3

## தலைவி இளவேனிற்பருவம் கண்டு வருந்தல்.

455. மைக்குற்ற நீக்குங் கலைசைத் தியாகர் மணிநடங்கண்
டெக்குற்ற முந்தவிர்ந் துய்பவர் போலுய்வ தெப்படிநாம்
சொக்குற்ற பூண்முலை மாதே துணர்கொண்டு சூழநின்ற
கொக்குச்சிக் கேறி யிருணிறப் பூங்குயில் கூவினவே. 4

---

453. கோலம் - அழகு. தனக் கோகனகம் - கொங்கையாகிய தாமரையரும்பு; பத்மநிதி என்பது வேறுபொருள். அக் கோ வரையும் விட்டு; கோ வரை - தலைமையையுடைய மேருமலை. இச்சிப்பது என்.

454. தேசிக வாழ்வு - ஒளியோடு கூடிய வாழ்வு; தேசு என்பது தேசிகமெனத் திரிந்ததென்பர்; *சீவக. 1480,* ந செல்வி : விளி. தேசிகம் - பொன். தேசிகம் இல் எனில் வாழ்வு இல். என்று - என்று கூறி. தேசிகர் - குரு. வளர்தேசை இகத்திலும் கொண்ட. அன்பர் இல்லென்று கூறிச் சென்றனர்.

455. சொக்கு - அழகு. துணர் - பூங்கொத்து. கொக்கு உச்சிக்கு - மாமரத்தின் உச்சியில்; "கொக்கின் றலையிற் குயிலின மேறுபு கூவினவே" (*திருவாவடுதுறைக்கோவை, 454*); "கொக்கின் மேற் குயில்கள் கூவுங் குளிர் பொழிற் குறியுஞ் சொன்னாள்" *வி.பா. கீசகன்.* 59.

## தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.

456. தாரோதி மங்கை கலைசைத் தியாகர் தமிழ்வரைக்காற்
றேரோன் வசந்தத் திருநா ளிதுசிறந் தோர்வம்மினென்
றேரோங் கவன்சின்ன மார்ப்பது கேட்டிங்ங னிம்மெனுமுன்
பேரோகை மிக்குவந் தார்பொருட் கேகிய பெற்றியரே. 5

## தலைமகன் வந்து தலைமகளைக் கலந்துழி முகிலொடு மகிழ்ந்து கூறல்.

457. மருவணி மாலையைம் பாலிசெம் பாலிகை மட்டருந்திப்
பருவரல் வீட முயங்கினம் யாம்பர மன்கலைசை
ஒருவன் சிதம்பர வீசனெல் லாவுயிர்க் குஞ்சுரக்கும்
திருவருள் போற்சொரி திங்கண்மும் மாரி செழுங்கொண்டலே6

**கலைசைக் கோவை முற்றிற்று.**

---

456. கால் தேரோன் - மன்மதன்; கால் - காற்று. அவன் சின்னம் - குயில். திருவாவடுதுறைக் கோவை, 455-ஆம் செய்யுளைப் பார்க்க.

457. ஐம்பாலி. கூந்தலையுடையவளது; ஐம்பால்-கூந்தல்; ''வண்டூதைம் பாலி'' (286) என்றார் முன்னும். பாலிகை - கிழுதடு. மட்டு - தேன். பருவரல் வீட - துன்பம் கெட. கொண்டலே சொரி.

கலைசைக் கோவைச்

## செய்யுண் முதற்குறிப்பகராதி.

(எண் பக்க எண்)


| | |
|---|---|
| அக்கணப்பன் | 60 |
| அக்காதரமொழித் | 146 |
| அகத்தார்க்கரியர் | 119 |
| அஞ்சத்தனப்பர் | 120 |
| அஞ்சானனங் | 133 |
| அடலேறதேறுங் | 57 |
| அடியார்க்கருளுஞ் | 78 |
| அண்டர்கொண் | 53 |
| அணங்கமர்மாட | 107 |
| அத்தலைகோரிரு | 148 |
| அத்திநிசாசரர் | 146 |
| அதிர்ந்திடுமாழிக் | 107 |
| அந்தமிழின் சுவை | 130 |
| அந்நாட்கலைசைத் | 135 |
| அப்பேறுசென்னிக் | 79 |
| அம்மனையானவர் | 86 |
| அரக்கவிராம்பல் | 53 |
| அரணங்கள் சூழ் | 66 |
| அருக்கத்தி பூண்ட | 33 |
| அருத்தியினீங்கிக் | 86 |
| அருவன்றியேயு | 48 |
| அருளுங்கலைசத் | 46 |
| அருளோடுவாழுங் | 97 |
| அரையொன்றுநாகர் | 50 |
| அரைவாயரவர் | 120 |
| அல்லாருங்கண்டர் | 132 |
| அலைமேல்வருமங்கை | 64 |
| அள்ளற்பழனக் | 103 |
| அளிக்குங்கண்ணாளர் | 62 |
| அற்புதக்கூத்தர் | 130 |
| அறவாணர்வாழுங் | 79 |
| அன்றிலம்பிள்ளை | 58 |
| அன்னின்றகண்டர் | 89 |
| அன்னையொப்பான | 33 |
| அனம்போனடைச்சி | 110 |
| ஆசையுண்டேல் | 150 |
| ஆடல்வைவே | 135 |
| ஆடியபாதர் | 52 |
| ஆடுங்கொலோ | 41 |
| ஆண்டகையார் | 70 |
| ஆதிநடேசர் | 90 |
| ஆமேவுபாலனையார் | 142 |
| ஆராமஞ்சூழ்ந்த | 47 |
| ஆரியரெங்காள் | 134 |
| ஆலைக்கழனி | 54 |
| ஆவினஞ்சேற்குங் | 147 |
| ஆழிப்புரிசை | 85 |
| ஆளாமெனைக்கொள் | 40 |
| ஆனந்தக்கூத்தர் | 115 |
| ஆனேறுமையர் | 45 |
| இக்கோவிருந்த | 36 |
| இகலிருணிக்குங் | 140 |
| இச்சிக்குமன்ன | 91 |
| இச்சைவநாதர் | 141 |
| இடங்கரநேகமஞ் | 77 |
| இடராவதொன் | 99 |
| இடையற்றகல்வி | 145 |
| இண்டைச் சடையர் | 138 |
| இணங்குமன்றே | 84 |
| இத்திருவின்பொருட் | 67 |
| இதம்புரி | 109 |
| இதைக்குறுவேலிக் | 54 |
| இந்தனஞ்சோரறி | 104 |
| இந்துறைமாடக் | 38 |
| இப்பேரறிவிவட் | 108 |
| இம்மாதுநீயும் | 117 |
| இரவலாம்பிறை | 149 |
| இரவோர்க்குதவு | 90 |
| இரும்புவிபோற்றுங் | 71 |
| இல்லத்தமரரும் | 100 |
| இலக்கணமாடக் | 77 |
| இலவாரிதழி | 87 |
| இவருக்கணியும் | 88 |
| இவருடையாருயிர் | 111 |
| இளங்காளை | 71 |
| இன்னாவொழிக்குங் | 107 |
| ஈட்டறம் | 43 |
| உடுக்குங்கலைகள் | 48 |
| உண்டோர் புதுமணம் | 45 |
| உத்தமர்போற்றுங் | 127 |
| உருக்கோவை | 25 |
| உலகாளமைந்தன் | 136 |
| உலைவுற்ற காலன்னை | 86 |
| உற்றார்கள்வந்து | 127 |
| ஊரார் சொற்றீமை | 125 |
| ஊருவரத்தழை | 64 |
| எங்களைகண் | 43 |
| எடுத்தசிற்றில்லுங் | 72 |
| எம்பாவையேறகுங் | 44 |
| எம்மின்னல் | 120 |

| | |
|---|---|
| எல்லாத்தெரிக்கு | 58 |
| எல்லாரும்போற்றும் | 78 |
| எவ்வழியுஞ்சுழன் | 49 |
| எழுங்காதல்கூர | 125 |
| எற்பகலாளி | 92 |
| என்னான்வியப்பல் | 93 |
| எனைப்பாதுகாக்குங் | 96 |
| எனையும் வந்தாண்ட | 105 |
| ஏகனநேகன் | 131 |
| ஏட்டையைநீக்குங் | 51 |
| ஏத்துமெய்யன்புடை | 93 |
| ஏறதண்ணல்வேல | 75 |
| ஏறும்புகழ் | 70 |
| ஒரு கயந்தள்ளி | 118 |
| ஒரு காரணமுண்டு | 97 |
| ஒரு காலகாலர் | 75 |
| ஒருகேடில்கொம்பர் | 143 |
| ஒரு தாதுவைமுன் | 144 |
| ஒருப்பாடுடன் | 87 |
| ஒருவாவிருதலை | 103 |
| ஒறுத்தார்க்கொரு | 139 |
| ஒன்றுந்தராதவர் | 37 |
| ஓங்கற்சிலையர் | 27 |
| ஓங்காரரூபர் | 133 |
| ஓங்குங்கலைசைத் | 80 |
| ஓராட்டிபாகர் | 118 |
| கங்காளவேடர் | 81 |
| கங்கைச்சடையர் | 127 |
| கட்டாரழகியைக் | 55 |
| கட்டாரியாதி | 149 |
| கடல்வண்ணன் | 136 |
| கடுத்தார்மனம் | 117 |
| கண்டகங்கொண் | 124 |
| கதிக்கண்பர்தேடுங் | 96 |
| கதிரார்கணிச்சிக் | 78 |
| கம்மூர்கண் | 34 |
| கம்மேகவண்ணனுஞ் | 123 |
| கயந்தந்தெவ்வலர் | 79 |
| கரத்திற்கபாலர் | 119 |
| கருந்தும்பி | 94 |
| கருநட்டகண்டர் | 70 |
| கருப்பாலையார்க்குங் | 65 |
| கரும்புள் | 140 |
| கல்லாரக்கண்ணி | 61 |
| கல்வாரவாவிக் | 38 |
| கல்லாலரெங்கள் | 74 |
| கலனாகங்கைக் | 143 |
| கலைப் பாவலர்சூழ் | 136 |
| கள்ளார்க்குவதர் | 113 |
| களக்கந்தரரெங் | 91 |
| களியானைத்தோலர் | 59 |
| கற்றவர்வாழுங் | 93 |
| கற்றிலகண்கள் | 59 |
| கனக்கறைக்கண்டர் | 108 |
| காசியின்மேன்மைக் | 57 |
| காணினுங்கேட்கி | 114 |
| காதார்குழையர் | 33 |
| காமனைக் காய்ந்த | 34 |
| காயவெள்ளம் | 35 |
| காயிலைச்சூலர் | 109 |
| கார்மாதை | 47 |
| கார்வாழுங்கண்டர் | 98 |
| காரங்கிரீவர் | 39 |
| காராருங்கண்டர் | 44 |
| காவாமற்காக்கும் | 49 |
| காவியப்பாக்கொள் | 65 |
| காவினைச்சூழ்ந்த | 73 |
| காவும்பர்பம்புங் | 134 |
| காளிதன் கேள்வர் | 131 |
| காற்றாயினாகர் | 50 |
| கும்பங்கொடுத்த | 150 |
| குயிலேயனையசொற் | 76 |
| குயின்றாலு | 95 |
| குருமணியன்ன | 111 |
| குருவாய்வந் | 125 |
| குழையிட்டகாதர் | 74 |
| குறப்பேதையர்க்கு | 83 |
| குன்றேவிற்கொண்ட | 82 |
| குனித்தருள்கூத்தும் | 95 |
| கூசாமலேதிலன் | 123 |
| கூடாதவெம்பகை | 147 |
| கைப்பாகும் | 64 |
| கொப்பிடுமஞ்செவிப் | 59 |
| கொய்யுமலர்ச்சுனை | 83 |
| கொவ்வைகொள் | 85 |
| கொழிவான | 88 |
| கோட்டாலமர்ந்த | 85 |
| கோதைத்தவிர்க்குங் | 113 |
| கோவுந்தனமு | 141 |
| சகநாதரெங்கள் | 127 |
| சங்கத்திலோர் | 104 |
| சங்கதிர்வாவிக் | 72 |
| சங்குலம்போடைக் | 74 |
| சங்கையிலா | 113 |

| | |
|---|---|
| சசியார்புரிசை | 115 |
| சடைநெடுமோலி | 68 |
| சரமேவிழிக்குஞ் | 41 |
| சரியாங்கறிந்தெம் | 80 |
| சற்றிடம்யான் | 41 |
| சிங்கம்பிடிக்க | 32 |
| சிங்கியங்கண்டர் | 49 |
| சித்தாங்கலைசை | 84 |
| சிதம்பர்க்கரியர் | 138 |
| சித்திக்குநேரும் | 87 |
| சிலைக்கேயொப்பாம் | 45 |
| சிருலவளையாழி | 76 |
| சிவங்காட்டிய | 106 |
| சிவமுதலாந்தேன் | 131 |
| சிவையொருபாகர் | 36 |
| சிற்பததிற்செய்த | 31 |
| சிற்பரனாரெஞ் | 44 |
| சிறையுந்துநீர்த் | 107 |
| சினக்கோலமால் | 151 |
| சீதக்கமலத் | 39 |
| சீர்க்குன்றனைய | 96 |
| சீரின்பரப்புடை | 31 |
| சீறாடரவம் | 94 |
| கூபுர்ப்பாலைவன்னி | 113 |
| சுத்தங்கொடுக்கும் | 33 |
| சுராதிபர் போற்றுங் | 73 |
| சுற்றம்பரிசனத் | 64 |
| சூடக்கண்டாய் | 26 |
| சூடகக்காந்தண் | 34 |
| செங்கேழிதழிக் | 52 |
| செங்கையிலாடுங் | 136 |
| செஞ்சரணன்பர்க் | 51 |
| செண்டாடு | 29 |
| செப்பனைவோர்களுங் | 63 |
| செம்பார்களிம்பெனச் | 27 |
| செம்மேனியப்பர் | 137 |
| செய்யகத்தே | 87 |
| செய்யாமொழியர் | 80 |
| செருத்துணையாய் | 149 |
| செவ்வாய்தனக்கு | 78 |
| செவ்வேலையைந்து | 85 |
| செழுந்தேஞ்சிகழிகை | 82 |
| செழுமைநந்தாத | 98 |
| செறியாரபார | 17 |
| செறியும் பசும்பொழில் | 31 |
| செறுமாமதக்களிறு | 72 |
| சேகாந்தருக்கள் | 29 |
| சேணுற்றமாடங்கள் | 37 |
| சேணேறுபொன் | 88 |
| சேலொடு வண்டணை | 47 |
| சேற்றம்புயத் | 42 |
| சொல்லரிக்காடும் | 89 |
| தகட்டிதழ்க் | 34 |
| தங்கச்சிலையர் | 139 |
| தங்காப்பு | 110 |
| தண்டகநாடர் | 66 |
| தண்ணார் பதங்கம் | 114 |
| தண்ணாறு சூடும் | 132 |
| தண்ணுறு வாயுமிவ் | 37 |
| தத்துவக்கூட்டம் | 124 |
| தமக்காருநேரில் | 141 |
| தளவேந்தர் | 29 |
| தன்கையிற்கங்கோள் | 56 |
| தன்னிடைத்தோன் | 112 |
| தன்னேரிலாத | 104 |
| தனியானுக்குங் | 71 |
| தாரேறவண்டினம் | 101 |
| தாரோதிமங்கை | 152 |
| திகிசு நின்றோட் | 65 |
| திடத்தாய | 40 |
| திண்டேருலாவு | 43 |
| திரணம்பெருவிந்த | 32 |
| திருத்தங்கு | 25 |
| திருந்தனாமன் | 100 |
| திருந்தார்புரம் | 55 |
| திருந்தாரியந்தமிழ் | 89 |
| திருந்தேற்கருளும் | 119 |
| திருப்பங்கயத்தடஞ் | 142 |
| திருமங்கைபாகர் | 70 |
| திருவார்கலைசை | 81 |
| திருவாளர்வாழும் | 69 |
| திருவேள்வி | 148 |
| தீங்கையெல்லாஞ் | 48 |
| தீயாடுசெங்கை | 63 |
| தீராப்பழவினை | 140 |
| தீவணமேனிச் | 126 |
| தீவலவேலன்ன | 147 |
| துகளேதநீக்கும் | 122 |
| தூக்கமுற்றாரிற் | 47 |
| தூண்டற்கரிய | 114 |
| தெரிதமிழார்ந்த | 124 |
| தெருள்வான் | 56 |
| தெழியாவருபடை | 128 |

| | |
|---|---|
| தெள்ளம்பணி | 77 |
| தெள்ளும்வெண் | 150 |
| தெளிவார்க்கருளுங் | 110 |
| தென்சாமகண்டர் | 101 |
| தென்மாலையுண்ணும் | 68 |
| தென்றிருத் | 94 |
| தென்னார்கலைனத் | 55 |
| தேங்காவும் | 94 |
| தேங்கியநீரொலி | 44 |
| தேசிக வாழ்வு | 151 |
| தேய்ந்ததுண் | 51 |
| தேவாதி தேவர் | 31 |
| தேறற்கடிமலர் | 98 |
| தேனேறுய்யானம் | 54 |
| தொகைக்கிடந்தந்த | 30 |
| தொடையார்குழலி | 112 |
| தொல்லறமோங்குங் | 146 |
| தொழுதாயிரந் | 27 |
| தேர்காயுன்மூரற்கு | 66 |
| தோட்டார்குழலிக் | 54 |
| தோயுந்தண்பாலி | 135 |
| தோயும்பொழுது | 69 |
| நங்கான்முளை | 140 |
| நஞ்சாருங்கண்டர் | 76 |
| நடங்காட்டும் | 29 |
| நடிக்குந்தயாளர் | 63 |
| நதிபொதிவேணிக் | 73 |
| நந்தாதசெல்வக் | 65 |
| நம்மலந்தீர்க்குங் | 50 |
| நலசத்தியர் | 26 |
| நலத்தினாட்டுங் | 134 |
| நலம்பரவுந்தென் | 108 |
| நவசக்திகட்கும் | 133 |
| நளிசேர்மதிச்செருத் | 91 |
| நற்றயல்பாகமர் | 126 |
| நற்றேவர்சூழும் | 109 |
| நறுங்கனம்போருக | 73 |
| நன்னறும்போது | 60 |
| நன்னுதற்பாவை | 129 |
| நனைப்போதணியு | 67 |
| நாகந்திசைகொள் | 61 |
| நாதஞ்செய்பாதர் | 36 |
| நாந்தஞ்சமக் | 116 |
| நாரங்கொள் | 52 |
| நாரமில்லா | 120 |
| நாலாறுநல்கும் | 41 |
| நாவலர் போற்றுங் | 84 |
| நான்மேலுனக் | 92 |
| நானோர்குறியினை | 80 |
| நிதிவாய்த்த | 37 |
| நிழலார் மழுவர் | 60 |
| நிறப்பதுமானன | 82 |
| நின்வண்ணமேலுறு | 106 |
| நீடுபொன்மாடக் | 28 |
| நீணாகம்பூண்ட | 101 |
| நீர்த்தண்சுனைத் | 121 |
| நீராடும்வேணி | 35 |
| நீளுஞ்சுனைக்கயல் | 83 |
| நெய்யிலைச்சூலர் | 46 |
| நெருங்கலைவாரி | 38 |
| நெறித்தமெல்லோதி | 58 |
| நெறியாய்ந்த | 142 |
| நோக்கி நல்லாள் | 119 |
| பழத்திருவாவிக் | 97 |
| படைகொண்ட | 130 |
| பண்ணவர்போற்றுங் | 75 |
| பணமாசுணத்தர் | 134 |
| பணியாபரணர் | 42 |
| பத்திக்கிரங்கு | 43 |
| பந்தத்தை நீக்கும் | 123 |
| பலரைப்புணர்த்த | 28 |
| பன்றூறங்கை | 60 |
| பனையையிடங்கொள் | 71 |
| பாங்காடும் | 55 |
| பாண்டரங்கஞ் | 127 |
| பாதபத்மங்கள் | 116 |
| பாரேழுந்தந்த | 128 |
| பாலாம்பகத்தர் | 67 |
| பாலிநன்னாடர் | 143 |
| பாவந்துமிக்குங் | 46 |
| பாவாயுறுகுழல் | 121 |
| பாற்கங்கை சூடுங் | 99 |
| பானற்கண்ணாய் | 144 |
| பிஞ்சுநிலாவணி | 123 |
| பிடியேநடை | 42 |
| பிரிவைக்கருதிக் | 118 |
| பின்னுஞ்சடையர் | 132 |
| புரகரரெங்கள் | 121 |
| புற்றாடரவர் | 98 |
| புனைந்து மந்தாகினி | 105 |
| பூதவனீகர் | 114 |
| பெண்பாலுகந்த | 72 |

பொன்மேடை 137
பொன்னுங்கொடி 117
பெரன்னுலகோ 26
பொன்னுற்றமார்பன் 111
பொன்னொன்றிலாத 69
போதாந்தர் 105
மகமேருவில்லர் 53
மங்கலமோங்கும் 88
மஞ்சிவர் மன்றமுங் 122
மட்டிட்ட கோதை 77
மடலவிழ்கோதை 146
மண்ணிற்சிறந்த 115
மத்தம்புனையுங் 57
மதத்தானையீருரி 91
மதலையைச் சூடுங் 138
மந்தியம் போதி 100
மந்திரரூபர் 61
மயலேறுசிந்தை 128
மருப்பொதி 52
மருவணிமாலை 152
மருவில்வஞ் 112
மல்லோங்கெயில் 125
மலவிகன்மாற்றுங் 135
மலையத்தகுவன 62
மறலியைக் 137
மறுப்புகுதாத 26
மறைமொழி 109
மன்றலம்புன்னை 106
மன்றாடவல்ல 62
மன்னுந்தமிழ்த் 90
மாடையினாற்று 103
மாயம்புகுந்த 128
மாலாதரிக்குங் 66
மான்றாவுமத்தர் 97
மிடியைத்துரத்துங் 49
முச்சோதியங்கட் 116
முடிகொண்டு 128
முதுகாரணனும் 117
முருக்கலர்வெண்மை 46
முருகுஞ்சுரும்புஞ் 56
மூவாமருந்தென்ன 130
மெல்லியலாய் 75
மைக்குற்றநீக்குங் 151
மைந்தானை 62
மைந்தோதிவில்லர் 40
மைப்படியாரயிற் 99
மைவாருமல்லில் 115
வடிவாள்விழி 139
வண்டமிழ்கூறுங் 112
வண்டாடுஞ்சோலைக் 92
வண்டூதைம்பாலி 102
வம்பார்தனத்தி 102
வயவாணயனி 145
வரம்போதருமன்ப 101
வல்வினைதீர்க்கு 145
வலித்தென்னை 43
வள்ளித்தண் 67
வளைத்தனையோபல 38
வளையாதசூலர் 45
வாடிய பைந்தினைக் 102
வாதுவராலொடு 30
வாமம்பெறுநின் 111
வாராளொருவினை 59
வான்மூன்றுநூலர் 122
வானாபுர்சூழுங் 56
விடையாளர் 28
விண்ணேறுசோலை 84
விலாழிவின்மணித் 76
விரவியபேமற 129
விரையுந்துகூந்தல் 148
வில்வேளுமந்த 116
விலைக்கேயெனைக் 40
விழியேறுநெற்றிக் 89
விழுத்தவஞ்செய் 81
வீணைக்கரத்தர் 30
வெங்கோளரிதிரி 83
வெண்டலைமாலைக் 74
வெண்ணந்தின் 95
வெண்ணீறணியும் 108
வெம்போபூண்ட 78
வெல்லும்படைமதன் 93
வெள்ளாறுசூடும் 53
வெள்ளைவண்டூர் 68
வேய்வார்மென்றோ 57
வேயுங்கரும்பும் 122
வேயோவெனும் 81
வேர்கோடிகொண்ட 92
வேலாடுகண்ணி 99
வைப்பார்வையிற் 35

